ஸ்ரீ:

கலி : 4370
விபவஹூ
1268

கலி : 5070
கீலகஹூ
1968

ஸ்ரீ தேசிகன் ஏழாவது நூற்ருண்டு விழா

  

# ஸ்ரீ ஸூக்திகள்

வெளியீடு

ஸ்ரீமானை நாராயணன் ஒருவனுமே
ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்

புத்திக்குள் கூட பின்னமறத் தெளி பின்னாம்
இத்திக்கால் ஏற்றும் இதுகம்

## நாலாவது விபாகம்

பாகம் – 1

## அம்ருதரஞ்ஜனீ ரஹஸ்யங்கள் (17)

## ரஹஸ்யங்கள்

ஸ்ரீ அகில தம: கர்சந
தேசிக தர்சந ஸபை
பராங்குச மந்திரம்
சென்னை - 5

ஸ்ரீ தேசிகன் ஆண்டு 696 ஹூ
குரோதி : மார்கழி : திருவோணம

5 - 1 - 65

விலை ] [ ரூ. 5

ஸம்புடம் 5

ஸ்ரீ:

இந்த ஸம்புடம்

மேலே குறிப்பிடப்பட்டிருக்கும்

ஸ்ரீ தேசிக பக்தர்கள் செய்யும் த்ரவ்ய ஸஹாயத்தினுல்

அவர்கள் அநுமதியுடன்

ஆசார்யனை அநுக்ரஹிப்பதற்கென்றே

அயிந்தை மாநகரில் முன்னிவந்து அமர்ந்த

அடியவர்க்கு மெய்யனுகிய தெய்வ நாயகன்

அநுக்ரஹமாக வெளியிடப்படுகிறது

## இந்த ஸம்புட ஶோதநகைங்கர்யத்தில் அந்வயித்தருளிய ஸ்வாமிகளின் திருநாமங்கள்.

ஸ்ரீ உப வே.

வேங்கடாத்ரி அகரம் அநந்தாசார்யர் ஸ்வாமி, மதராஸ்
டி. டி. தாதாசார்யா ஸ்வாமி, திருப்பதி
அக்நிஹோத்ரம் நாராயணாசார்யர் ஸ்வாமி, நாவல்பாக்கம்
ஐயா தேவநாத தாதாசார்ய ஸ்வாமி, நாவல்பாக்கம்
உத்தமூர் வீரராகவாசார்ய ஸ்வாமி, மாம்பலம்
தி. ஈ. வீரராகவாசார்ய ஸ்வாமி, மதுராந்தகம்
வ. ந. ஸ்ரீராம தேசிகாசார்யர் ஸ்வாமி, திருவிண்ணகரம்
சக்ரவர்த்தியாசார்யர்ஸ்வாமி. ஸ்ரீஅஹோபில மடம்,
முக்கூர் (முகாம்)
மேல்மா நரஸிம்ஹ தாதாசார்யர் ஸ்வாமி, மதராஸ்
வில்லிவலம் நாராயணாசார்யர்ஸ்வாமி, மதுராந்தகம்
கோழியாலம் சடகோபாசார்யர் ஸ்வாமி, திருப்பதி
நல்லூர் ஸ்ரீநிவாஸராகவாசார்யர் ஸ்வாமி, வில்லிவாக்கம்
ஜி. கே. ரங்கஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி, மதராஸ்
ஆர். கோபாலஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி, மாம்பலம்
டி. ராமஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி, மதராஸ்
ஏ. ஸ்ரீநிவாஸராகவாசார்ய ஸ்வாமி மதுரை
வீ. கே. ஶேஷாத்ரியாசார்யர் ஸ்வாமி, அண்ணாமலைநகர்

பதிப்பாளர்கள்—

கோமடம் எஸ். எஸ். ஐயங்கார்,
வ. ந. ஸ்ரீராமதேசிகாசார்யர்.

## இந்த ஸம்புடம் அச்சிடுவதற்கு த்ரவ்ய ஸஹாயம் செய்தருளிய ஸ்ரீ தேசிக பக்தர்களின் திருநாமங்கள்

| | ரூ |
|---|---|
| 1 ஸௌ. சம்பக லக்ஷ்மி அம்மாள் * <br> 50, டி. பி. கோயில்தெரு, சென்னை—5 | 105 |
| 2 ஸ்ரீ உப. ஆர். நரஸிம்ஹன், <br> 52, டி. பி. கோயில் தெரு, சென்னை—4 | 110 |
| 3 ஸ்ரீ உப கே. ஸ்ரீநிவாஸன், <br> ஸ்ரீபுரம், சென்னை—14 | 350 |
| 4 ஸ்ரீ ஆர். கோபாலஸ்வாமி ஐயங்கார், <br> அட்வகேட், சென்னை—17 | 350 |
| 5 ஸ்ரீ உப டி. ராமஸ்வாமிஐயங்கார் <br> அட்வகேட், சென்னை—7 | 350 |
| 6 ஸ்ரீ உபசேட்டலூர் ஸ்வாமி திருவடிஸம்பந்தி * <br> 67, மௌப்ரேஸ் ரோட், மெட்ராஸ்—18 | 56 |
| 7 ஸ்ரீ உப டி. என். ஸுந்தரராஜ ஐயங்கார், <br> 50, டி. பி. கோயில்தெரு, மெட்ராஸ்—5 | 60 |
| 8 ஸ்ரீமான் ஆதிநாராயண ரெட்டியார் * <br> 4, நாதமுனிநாயுடு தெரு, மெட்ராஸ்—30 | 105 |
| 9 ஸ்ரீ உப வி. டி. வேதாந்த ராமாநுஜாசார்யர், <br> அட்வகேட், பூவிருந்தவல்லி | 56 |
| 10 ஸ்ரீ உப ஸீ. ஆர். ராஜகோபாலாசார்யர், <br> அட்வகேட், திருப்பாப்புலியூர் | 110 |
| 11 ஸ்ரீ உப கே. எஸ். ஸ்ரீநிவாஸாசார்யர், <br> திருவஹீந்த்ரபுரம் | 60 |
| 12 ஸ்ரீமான் கே. வீரநாராயண தாஸ், <br> நைனூர் குப்பம் | 60 |
| 13 ஸ்ரீமான் கே. தம்புஸாமி: <br> தேவங்குடி | 60 |
| 14 ஸ்ரீமான் ஆர். வேங்கடாசலமழவராயர், <br> குளக்குடி கிராமம் | 60 |
| 15 ஸ்ரீ உப சடகோபாசார்யர், <br> அட்வகேட், திருப்பாப்புலியூர் | 60 |
| 16 ஸ்ரீ உப என். டி. ஸ்ரீராமாசார்யர், <br> அட்வகேட், திருப்பாப்புலியூர் | 60 |

17 ஸ்ரீ உப என். கோபால ஐயங்கார், 60
அட்வகேட், புதுப்பாளையம்

18 ஸ்ரீ உப எஸ். ஆர். தாதாசார்யர்,
அட்வகேட், புதுப்பாளையம் 60

19 ஸ்ரீ உப வீ. ஆர் ஸ்ரீநிவாஸஐயங்கார்,
12 ஏ, மெயின் ரோட், கடலூர் 60

20 ஸ்ரீ உப ஸீ. பி. ஸ்ரீநிவாஸ ஐயங்கார்,
8, ரிவர் ஸைட், ரோட், புதுப்பாளையம் 60

21 ஸ்ரீ உப டீ. எஸ் ஸ்ரீநிவாஸாசார்யர்,
8, ரிவர் ஸைட் ரோட், புதுப்பாளையம் 60

22 ஸ்ரீ உப ஆர். ஸம்பத்குமார்,
அட்வகேட்.கடலூர் 60

குறிப்பு—1. பணம் கொடுத்த தேதியின் க்ரமத்தை அனுஸரித்ததாயி ருக்கும் கீழ்க் கூறப்பட்ட திருநாமங்களின் வரிசை.

2 * குறியிட்ட திருநாமங்கள் திருவஹீந்திரபுரம் மஹாமஹோ பாத்யாய சேட்டலூர் நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியின் நினைவுக்காக அளித்தவர்கள

ஸ்ரீ:

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

  

பதிப்பாளர்களின் விண்ணப்பம்:—

ஆசார்ய ஸார்வ பௌமன் ( ஆசார்யர்களில் ஶ்ரேஷ்டர்) எனப் பின்புள்ளோரால் கொண்டாடப்பட்ட ஸ்ரீ தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில்
' ஆசார்யாதிஹ தேவதாம் ஸமதிகாமந்யாம் ந மந்யாமஹே '
என்று ஆசார்யனே பரதேவதை எனறும், அவருடைய திருவடிகளே பரமபதத்திலும் நமக்கு உத்தேஶ்யம் என்றும், இருள் அனைத்தையும் மாற்றி, மனத்தில் ஞானவிளக்கை ஏற்றியதற்குக் கைம்மாறு மாயனும் காணகில்லானாகிலும் ஶிஷ்யன் தன்பேருக அவரைப் போற்றி உகந்து புந்தியில் கொண்டு சாற்றி வளர்க்க வேண்டும் என்றும், அப்படி வளர்ப்பது எப்படி என்பதை
'அஶிதில குருபக்தி: தத் ப்ரஶம்ஸாதிஶீல:
ப்ரசுர பஹுமதி: தத் வஸ்து வாஸ்த்வாதிகேபி '
என்றும் நிர்ணயித்துள்ளார்.

இது ஆசார்யர்கள் எல்லோருக்கும் பொதுவானுலும் ஸ்ரீதேசிகன் விஷயத்தில் இது கைமுதிக ந்யாயஸித்தமாகும். ஆகையினுல் அவர் திருவவதாரம் செய்தருளிய ஏழாவது நூற்ருண்டு வருகிற கீலக ஹு புரட்டாசித் திருவோணமாகிற திருநன்னுளை விஶேஷித்துக்கொண்டாடவேண்டியது அவருடையதிருவடிஸம்பந்திகளான தம்முடைய கடமை என உணர்ந்த சில தேசிக பக்தர்கள் ஸ்ரீ அகில தம:கர்சந தேசிக தர்சந ஸபை என்கிற ஒரு ஸபை ஏற்படுத்தி, அதின் ஆதரவில் அக்கைங்கர்யத்தைச் செய்ய முன் வந்திருக்கிருர்கள். அதில் ஒரு அம்சம் அவருடைய ஸ்ரீ ஸூக்திகளை ப்ரசுரிப்பது. இதை அடியொற்றி அவற்றில் ரஹஸ்ய விபாகத்தில் முதல் பாகமாகும் இந்த ஸம்புடம்.

இதை, ஸ்வாமிதேசிகன் விசேஷித்து அபிமானித்துத்தம்முடைய விபவ தசையில் வெகு காலம் எழுந்தருளியிருந்ததும் அதின் சின்னங்களாக அவர் எழுந்தருளியிருந்த திருமாளிகை, அவர் நிர்மாணம்செய்தருளிய திருக்கிணறு முதலியவைகள் ஸுரக்ஷிதமாக இருப்பதும், அவருடைய நிர்ணயத்தின்படி அவருக்குப் பகவானுக்குப் போலே ப்ரஹ்மோத்ஸவம் முதலான ஸகல வைபவங்களும் நடத்தப்பட்டு வருகிறதும், அடியவர்க்கு மெய்யனுடைய நியமனத்தை சிரஸா வஹித்து அருளிச்செய்த ஸூக்திகள் முதல் முதல் ஆரம்பித்த ஸ்தலமுமான திருவஹீந்திரபுரத்திலே வெளியிடுவது மிகவும் பொருத்தமானது எனக்கருதி, அவர் திருவவதார நாளாகிய ச்ரவணமாத்ரமன்றிக்கே,அவர் சிபியை ஜயிப்பது என்கிற வ்யாஜத்தை முன்னிட்டு திருவரங்கத்து எம்பெருமானுடைய நியமனத்தினுல் ஸர்வலோகோஜ்ஜீவனார்த்தமாக ஏறியருளப் பண்ணிய தம்முடைய திவ்ய அர்ச்சா விக்ரஹம் அவதரித்த மார்கழிச்ரவணத்தன்று வெளியிடுவதுமிகவும் பொருத்தமாகுமெனக்கருதி அது வரையில் அச்சிடப்பட்ட பாகம் மட்டும் வெளியிடப்பட்டது. மிகுதியையும் அச்சிட்ட பிறகு அவர் விஷயமான 'ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய:' என்னும் தனியன் அவதார தினமான சித்திரை புனர்வஸுவில் பைண்டு செய்யப்பட்டு வெளியிடப்படுகிறது.

இனி மற்றைய ஸம்புடங்கள் யதா க்ரமம் வெளியிடப்படும். இந்த மஹா கைங்கர்யத்தைப் பூர்த்தி செய்து வைக்கும்படி(அன்று தன் விஷயமான ஸ்தோத்திராதிகளை அருளிச்செய்யாமல் அயிந்தையை விட்டுப் புறப்பட்டுப்போன ஆசார்யனை இடைமறித்து

'முந்தைமறை மொய்யவழி மொழி நீ'

என நியமித்தருளிய அடியவர்க்கு மெய்யனே, இந்த ப்ரசாரகைங்கர்யம் நம் போலியர்களினுல் நிறைவேற்ற முடியாதென இருந்த அடியோங்களை இதில் ப்ரவர்த்திக்கும்படி சில பாகவதர்கள் மூலமாய் ஆஜ்ஞாபித்தபடியினுல்) அவனையேப்ரார்த்திக்கும

6 5 65 பதிப்பாளர்கள்

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

  

## முகவுரை

ஸ்ரீ தேசிகனுடைய திவ்ய சரித்ராம்ருதமும், அவருடைய ஸ்ரீஸூக்திகளின் ஸங்க்ரஹம் முதலியவைகளும்

ஸ்ரீ தேசிகனும் அவருடைய ஸ்ரீ ஸூக்திகளும்

என்று தனித்து வெளியிடப்படப் போகிறபடியினால் அந்த அம்சங்கள் இங்கு கூறப்படவில்லை.

ஸ்ரீ தேசிகனுடைய திவ்ய ஸ்ரீஸூக்திகள் 116 என்று கணக்கிடப்பட்டிருக்கிறன. அவற்றை எட்டு விபாகங்களாக்கி அவை ஒவ்வொன்றிலுமுள்ள ஸ்ரீ ஸூக்திகளின் விளக்கம் கீழே (விஸ்தரமாக) கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன்படி இப்பொழுது இந்த ஸம்புடத்தில் வெளியிடப்படும அம்ருதரஞ்ஜனீ ரஹஸ்யங்கள் — நாலாவது விபாகத்தில், முதல் பாகத்தைச் சேர்ந்ததாகும். இதற்கு அவச்யாபேக்ஷிதமான அம்சங்களே இங்கு நிரூபிக்கப்படுகின்றன.

அநந்தங்கள் எனக் கூறப்படும் ஸம்ஸக்ருத வேதங்கள், நாலாயிரம் எனப்படும் சந்த மிகு தமிழ் மறைகள் என இரண்டையும் சேர்த்தே ஸ்ரீ.வைஷ்ணவர்கள் உபயவேதாந்தங்கள் என்று அங்கீகரித்துத் தங்களை உபய வேதாந்தாசார்யர்கள என்று வ்யவஹரித்துக் கொண்ட போதிலும் தாம்ரபர்ணீ நதிக் கரையில் திருவவதரித்தருளிய ஆழ்வாரால் ப்ரத்யக்ஷீகரிக்கப்பட்டு வெளியிடப்பட்ட ஸர்வீயமானதற்கு ஒரு ஏற்றம் உண்டு என்பது ஸ்ரீ தேசிகன் திருவுள்ளம். இதைப் பல இடங்களில் பல படிகளில் அவர் தாமே நிரூபித்தருளியிருக்கிறார். ஸ்ரீ ப்ரதானசதகத்தில்,

'சித்தரஞ்ஜனத்தோடே ஸர்வரையும் எளிதாகத்தெளிவிக்குமவற்றில் தொண்டர்க்கமுதுண்ணலாய்ப்பொய்யில் பாடலான ஆழ்வார்கள் அருளிச்செயல்ப்ரதானம்'

என்று அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

அதைப் போலவே, அதாவது ஸர்வரும் அதிகரிக்கலாம்படியும் சித்தரஞ்ஜனத்தோடு தெளிவிக்கும்படியும் இருக்கிறபடியினால் உபய

## முகவுரை

வேதாந்தார்த்த ஸங்க்ரஹமான ஸ்ரீ தேசிகனுடைய ஸ்ரீ ஸூக்திகளிலும் ரஹஸ்யங்கள் என்பவை ஒரு விஷேச மேன்மை பெற்றிருக்கும்.

இருள் தருமா ஞாலத்துள்ள அனைவர்க்கும் சாஸ்த்ரமாகிய ஜ்ஞானக் கண்ணைக் கொடுத்து மண் மேல் நின்ற நோய்கள் தவிர்ப்பதற்காக, அன்றிவ்வுலகினையாக்கி, அரும்பொருள் நூல் விரித்து நின்று, தண் நீள் புகழ் வேங்கடமாமலை மேவி நின்றவனே,

மாமலர் மன்னிய மங்கை மகிழ்ந்துறைமார்பன்தாளாம்

தூமலர் சூடிய தொல்லருள் மாறன் துணையடிக் கீழ் வாழ்வையுகக்கும் இராமாநுச முனி வண்மை போற்றும் சீர்மையனாய்,

எப்பாலைக்கும் சேமத்ததான திருத்தண்கா என்னும் திவ்யதேசத்தில் தூப்புல் குலத்திற்கு ஒரு மணியாய் வென்றிப் புகழ் திருவேங்கட நாதன் என்னும் குருவாய்த் தோன்றி,

காவலன் எங்கள் கிடாம்பிக்குலபதி அப்புளார் தம்தேமலர்சேவடி சேர்ந்து பணிந்து அவர் தம்மருளால் நாவலரும் தென் வடமொழி நற்பொருள்பெற்று,

மாநிலத்தோதிய மாமறை மன்னிய நற்கலைகள் ஆனவை செய்யும் அரும்பொருள் அத்தனையே அருளும் தூநெறி காட்டும் இராமாநுச முனியைத் தோத்திரம் செய்து,

வியன்கலைகள் மொய்த்திடுநாவின் முழக்கொடு வாதியர் மூலமறக் கைத்தவன்,

ஆருக எண்ணும் அரும் சருமமும் ஞானமும் காதல் கொண்டு வேருக நிற்கும் விரகும் விரத்தியும் இல்லாமல்சீரார்கதியிலும் திண்மதி தேருது பொருளானது ஒன்றும் பொருந்தாது மருளே மிகுத்து மறையவர் நல்வழி மாற்றி நின்று,

'தெருளார் மறைமுடித் தேசிகனே ! எங்கள் தூப்புல் தேவே !
அருளாய், உன்னருளன்றி எனக்குஆறில்லையே' என்றும்,
'இடர்தரும் இப்பிறவிக்கடலில் வீழ்ந்தலமர்ந்த என்னைக்
கடையறப் பாசம் கழற்றி நின் தாளிணை காணும் வண்ணம்
உடையவனே அருளாய்' என்றும் தன்னை ஆச்ரயித்தவர்களுக்குக்
கற்பகமாய் நின்று, தன் படியே அருள் புரிந்து, இரு வல் வினையும் விலக்கி, இதம் கருதி, மன்னிய திருமந்திரம் ஓதும் பொருள் நிலையைப் பொன்னருளால் அருளி, களக்காதல் செய்யும் நிலை கடிந்து, காத்தருளி, தன் தொண்டரையே எண்ணும் உள்ளம் தந்து. பொங்கும் இவ்டர்க் கடலைத் தாண்டுவித்து, நரகின் இடர் மாற்றி, தம் தாளிணை காணும் வண்ணம் அருளி,

தொண்டர் உகக்கும் துணையடி வாழி . . . வாழி நின்வடிவே'
என்று பின்புள்ளோர் அநுஸந்தித்து மகிழும்படி தம் அர்ச்சா விக்ர

ஹத்தை ஏறியருளப் பண்ணி, அத்தைத் தாம் விசேஷித்து அபிமானித்துப் போந்த திவ்ய தேசத்தில் திருப்ரதிஷ்ட்டை செய்தருளி, தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினுர் என்பது அனேகமாய் அனைவரும் அறிந்த விஷயம்.

இப்படிப்பட்ட மேன்மையையுடைய இவ்வாசார்யன் ஸர்வலோக ஹிதார்த்தமாக அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் 116. அவற்றில் 34 ரஹஸ்யங்கள் என்னப்படும். ஸாமாந்யமாய் ரஹஸ்யங்களும் ஸதஸ்யங்களும் பரஸ்பரம் முரண்படுமவை என்று தோன்றலாம்.

' திரளிலே சொல்லுமவைகளில் சிலஅர்த்தங்களை ஏகாந்தத்திலே சொல்ல விதிக்கையாலே அவற்றை ரஹஸ்யங்கள் என்கிறது ' என
ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தியில் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. உதாஹரணமாக கீதையில் 18 - 66 ம் ச்லோகம் ஸதஸ்யமேயானுலும்(திரளிலே சொல்லக் கூடியதானுலும்) அதின் விசேஷார்த்தங்கள் ரஹஸ்யங்கள்(ஏகாந்தத்தில் சொல்லப்படவேண்டியவைகள்). இப்படியே ராமாயணுதிகளிலுள்ள சரணுகதி விஷயமான ச்லோகங்கள் ஸதஸ்யங்களாயும் அவற்றின் அர்த்த விசேஷங்கள் ரஹஸ்யங்களாயும் நிற்குமவைகளாகும். இந்த வரையறை கீதாசார்யனுலேயே விதிக்கப்பட்டதாயிருக்கும்.

இந்த ரஹஸ்யங்கள் விஷயமாகக் கூறவேண்டிய அம்சங்கள் எல்லாம் ஸ்ரீ தேசிகனுடைய திவ்ய சரித்ரத்தில் பரக்க நிரூபிக்கப்படுகிறபடியினுல் இங்கு ப்ரசுரிக்கப்படும் ' அம்ருத ரஞ்ஜனீ ' ரஹஸ்யங்களைப் பற்றிய அம்சங்கள் மாத்ரம் நிரூபிக்கப்படுகின்றன. ' ரஞ்ஜனீ ' என்னும் பதம் ஆஹ்லாதகரமான என்னும் அர்த்தத்தைச் சொல்லும். இந்தத் திருநாமத்திற்கு ஏற்ப எல்லோருக்கும் சித்தரஞ்ஜகமாய் இருக்கும்படி ஸம்ப்ரதாயார்த்தங்கள் ஸங்க்ரஹ விஸ்தரப்ரக்ரியையிலே நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

இவை 17 ரஹஸ்யங்கள். இவற்றில் ஸார தீபம் என்னும் பதினேழாவது ரஹஸ்யம் லுப்தம். முதலில் இந்த ஸம்ப்ரதாயவிஷயமான அம்சங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. மிகுதியான பதினைந்தையும் பதவீ, நவநீதம், மாத்ருகை, ஸந்தேசம், ரத்னுவளீ, களசம் என்று ஆறு பிரிவுகளில் ஒவ்வொன்றிலும் முதலில் தத்த்வ விஷயமாயும், அதற்கு மேல் ரஹஸ்ய விஷயமாயும் மாறி மாறி அர்த்த விசேஷங்கள் நிரூபிக்கப்படுகிறன. ஸ்ரீ ரஹஸ்ய ஸந்தேசத்திற்கும். தத்த்வ ரத்னுவளிக்கும் ஸங்க்ரஹமாக ஸ்வாமி தாமே விளக்கம் காட்டியுள்ளார். ஸ்ரீ ரஹஸ்ய ரத்னுவளிக்கு மிகவும் விஸ்தரமான வ்யாக்யானம் அருளிச்செய்திருக்கிறுர். இந்த ரஹஸ்யங்களிலுள்ள ஆத்யந்தப் பாட்டுக்களை மட்டும்

சேர்த்து ஸ்ரீ தேசிக ப்ரபந்தத்தில் ' அம்ருத ரஞ்ஜனீ ' என்று ஒரு ப்ர பந்தமாக அநுஸந்திக்கப்படுகிறது.

இந்த ஸம்புடத்தில் அடங்கிய ரஹஸ்யங்களில் ஸ்ரீ ஸம்ப்ரதாயபரி சுத்தி, தத்த்வ பதவீ, ரஹஸ்ய ரத்நாவளீ, ரஹஸ்ய ரத்நாவளீ ஹ்ருத யம், தத்த்வ த்ரய சுளகம், ரஹஸ்ய த்ரய சுளகம், ஸார தீபம், என்கிற எட்டும் காஞ்சீபுரத்திலும், ஸ்ரீ ரஹஸ்ய நவநீதம், திருவேங்கடத்திலும், ஸ்ரீ தத்த்வ மாத்ருகை ரஹஸ்ய மாத்ருகை தத்த்வ ஸந்தேசம், தத்த்வ ஸந்தேச விவரணம், தத்த்வ ரத்நாவளீ, தத்த்வ ரத்நாவளீ ப்ரதிபாத்ய ஸங்க்ரஹம், இவைகள் ஏழும் ஸ்ரீரங்கத்திலும் அருளிச்செய்யப்பட்ட வைகளாயிருக்கும்.

இவைகளுள் ஒன்றுக்கும் ப்ராசீனமான வ்யாக்யானமில்லை. பாட் டுக்களுக்குமட்டும் இரண்டு வ்யாக்யானங்கள் அச்சிடப்பட்டிருக்கின் றன. மூலம் மாத்திரம் அடங்கிய நாலு பதிப்புக்கள் வெளியிடப்பட் டிருக்கின்றன. இவைகள் அகப்படுவது துர்லபமாய்ப் போய்விட்டது. இந்த துஸ்ஸ்த்திதியைப் பார்த்து மிகவும் சோகித்து, ஆசார்யனுடைய ஸ்ரீஸூக்திகளின் ப்ரவசனத்திலேயே தம் ஆயுள் முழுவதையும் கழித்த வர் என்கிற ப்ரக்யாதியையுடைய திருவஹீந்த்ரபுரம் மஹாமஹோபாத் யாய சேட்டலூர் ஸ்வாமி இதில் ப்ரசுரிக்கப்படுகிற ரஹஸ்யங்களுக்கு வ்யாக்யானம் அருளிச்செய்திருக்கிறார். இதில் கீழ்க் கூறப்பட்ட பதிப் புக்கள் ஆதாரமாகக் கொள்ளப்பட்டிருப்பதினால் இதை அச்சிட்டு வெ ளியிட்ட நிகமபரிமளம்ஆபீஸ் மானேஜரின் அநுமதியுடன்மூலபாடமும் பாட்டு ச்லோகங்களுக்கு அர்த்தமும் எழுதப்பட்டிருக்கின்றன. இதி னுடைய சோதந கைங்கர்யத்தில் அந்வயித்தருளிய சில ஸ்வாமிகள் சில பாடபேதங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். இவையும், இவற்றின் அர்த்தங்களும், ப்ரமாண அகாராதிகளும் மேல் ஸம்புடமாக வெளி யிடப்படப்போகிற ' அம்ருதாஸ்வாதினீ ' ரஹஸ்யங்களுடன் சேர்த்து வெளியிடப்படும்.

இந்த ரஹஸ்யங்கள் ஸம்ஸ்க்ருத பரிசயமில்லாதவர்களுக்கும் ப்ர யோஜனப்படுவதற்காக இதற்கு முன்புள்ள பதிப்புக்களில் போலில்லா மல் ச்லோகங்களைத் தவிர மற்றவையெல்லாம் தமிழிலேயே அச்சிடப் பட்டிருக்கிறன. ச்லோகங்களும் தமிழ் எழுத்தில் அச்சிடப்பட்டிருக் கின்றன. சிற்சில பதங்களைப் படிக்கும்பொழுது உச்சரிப்பில் கொஞ் சம் விகாரம் ஏற்படும். ஆனாலும் இதைப் படிப்பவர்களுக்கு ஸம்ப்ர தாய பதங்கள் கேள்வியில் பழகியிருக்குமாதலால் அதிக ச்ரமமுண் டாகாது என்று நம்பப்படுகிறது.

ஒவ்வொரு ரஹஸ்யத்தின் ஆரம்பத்தில் அதில் ப்ரதிபாதிக்கப்படு கிற அர்த்த விசேஷங்கள் ஸங்க்ரஹமாகக் காட்டப்பட்டிருக்கிறன. இவைகளே மறுபடியும் பாராக்களில் மூலத்தை விட வேறு என்றுநன் றாகத் தெரியும்படி அச்சிடப்பட்டிருக்கிறன. இந்தமுறைஆங்கிலப்பதிப் பாளர்களினால் கையாளப்படுகிறது. இது தத்காலத்தியவர்களுக்கும்

## முகவுரை

உபயோகமாயிருக்குமெனக்கருதி சேட்டலூர் மஹாமஹோபாத்யாய ஸ்வாமியின் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் பின்பற்றப்பட்டிருக்கிறது.

எவ்வளவோ அவதானத்துடன் சோதனம் நடத்தப்பட்டாலும் சில காரணங்களினால் பிழைகள் ஏற்பட்டுவிடுகின்றன. இவற்றை க்ஷமித்துக்கொள்ளவும். மேல் ஸம்புடங்களில் இவைகளை இன்னம் குறைப்பதற்கு ஏற்பாடுகள் செய்யப்படும். இப்ப்ரசுர கைங்கர்யத்திற்குநன்கொடை அளித்து உபகரித்தவர்களுக்கும், சோதன கைங்கர்யத்தை ஸ்வயம்ப்ரயோஜனமாகக்கருதிச்செய்யும் பண்டிதாக்ரேஸரர்களுக்கும், மற்றும் நன்கொடை வசூல் விஷயத்தில் உதவி செய்தருளுகிற ஸ்வாமிகளுக்கும் ஸபையின் சார்பில் க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்ளும்

6 5 65 காார்யதர்சி

இது சென்னை, திருவல்லிக்கேணி, ஜகன் மோஹினி அச்சகத்தில் அச்சிடப்பட்டு, ஸபையின் கார்யதர்சி கோமடம் எஸ். எஸ் ஐயங்காரால் பராங்குச மந்திரத்தினின்றும் வெளியிடப்பட்டது.



अखिलभुवनरक्षा साधनायावतीर्णे कुमति कलिविलास ध्वान्त तिग्मांशुजाले ।
निरवधिककरुणाढ्यौ वेदचूडागुरौ मे भवतु परमभक्तिः श्रीनिधौ वेङ्कटेशे ॥

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

  

இந்தக் கலி யுக ஆரம்பத்தில் நம்மாழ்வாரால் ப்ரவர்த்திக்கப்பட்டதும்
அவர் தம்மாலேயே ஸ்ரீமந் நாத முநிகளுக்கு உபதேசிக்கப்பட்டதும்
ஸ்ரீமத் யாமுந முநியினால் பஹுமுகமாக வ்ருத்திசெய்யப்பட்டதும்
ஸ்ரீமத் ராமாநுஜமுநியினால் நன்றாக ரக்ஷிக்கப்பட்டதுமான

ஸ்ரீவிஶிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை

அகிலதமகர்மக தர்மகமாக ப்ரதிஷ்டாபநம் செய்தருளிய

சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்

தாரணிவாழ்வார்க்கு வானேறப்போமளவும் வாழ்வாகப்
பார் ஒன்றச்சொன்ன பழமொழிகளாகிய

# ஸ்ரீ ஸூக்திகள் - 116

## இந்த ஸ்ரீ ஸூக்திகள் எல்லாம்

ஸந்த மிரு தமிழ் மறை

மந்நாத யாமுந
ராமாநுஜமுநிகளின்
க்ரந்தங்கள்
எதிவரனார்
மடைப்பள்ளிவந்த
மணங்களாகிய
ரஹஸ்யார்த்தங்கள்

வேதங்கள் அங்கங்கள் உபப்ரும்ஹணங்கள்

எம்பெருமானார் காலக்ஷேப
ஸங்க்ரஹமாய்ப் பிள்ளான் பணித்தருளிய
திருவாறுயிரம்
மற்றுமுள்ள பூர்வாசார்யர்களின் க்ரந்தங்கள்
இவற்றுக்கெல்லாம் ஐககண்ட்யம் செய்பவைகளாயும்
இவற்றின் உபப்ரும்ஹணங்களாயும்
இவற்றின் உட்கருத்தை உறைத்து உரைப்பவைகளாயும் இருக்கும்.

## ஸ்ரீ ஸூக்திகளின் விபாகம்

| | | |
|---|---|---|
| விபாகம்—1 | ஸ்தோத்திரங்கள் | 29 |
| விபாகம்—2 | ப்ரபந்த்ங்கள் | 18 |
| விபாகம்—3 | ரக்ஷா க்ரந்தங்கள் | 5 |
| விபாகம்—4 | ரஹஸ்யங்கள் | 34 |
| விபாகம்—5 | வாத க்ரந்தங்கள் | 3 |
| விபாகம்—6 | காவ்ய நாடகாதிகள் | 12 |
| விபாகம்—7 | ஸித்தாந்த ப்ரகரண க்ரந்தங்கள் | 6 |
| விபாகம்—8 | உபயவேதாந்த க்ரந்தங்கள் | 9 |
| ஆக மொர்த்தம் | | 116 |

## ஸ்ரீ ஸூக்திகளின் திருநாமங்கள்

**[ குறிப்பு—இங்குக் கூறப்பட்டிருக்கும் ஸ்ரீஸூக்திகளின் முன் பின் க்ரமம் அவற்றின் நிர்மாண காலக்ரமத்தைப் பற்றியதாயிருக்கும்]**

*1 ஸ்தோத்ரங்கள்—29*

ஸ்ரீ தேவநாயக பஞ்சாஶத், கோபாலவிம்சதி, ஸ்ரீஸ்துதி, தேஹளீஶ ஸ்துதி, வரதராஜ பஞ்சாசத், சரணுகதி தீபிகை, அஷ்டபுஜாஷ்டகம், வேகா ஸேது ஸ்துதி, காமாஸிகாஷ்டகம், பரமார்த்த ஸ்துதி, ந்யாஸ தசகம், தயாசதகம், பகவத் த்யாநஸோபாநம், தசாவதார ஸ்தோத்ரம், ந்யாஸ திலகம், பூஸ்துதி, ஸுதர்சநாஷ்டகம், கருடதண்டகம், கருடபஞ்சாசத், ஹயக்ரீவஸ்தோத்ரம், மஹாவீரவைபவம் ( ரகுவீர கத்யம்), அச்யுத சதகம், வைராக்ய பஞ்சகம், கோதா ஸ்துதி, யதிராஜ ஸப்ததி, ந்யாஸவிம்சதி, தத் வ்யாக்யா, ஷோடசாயுத ஸ்தோத்ரம், அபீதி ஸ்தவம்,

2 ப்ரபந்தங்கள்—18 மும்மணிக்கோவை, பந்து(ப்பா), கழல் (பா),அம்மானே(ப்பா), ஊசல் (பா),ஏசல்(பா),அடைக்கலப்பத்து, அர்த்த பஞ்சகம், வைணவ தினசரி, பன்னிரு நாமம், திருச்சின்ன மாலே, கீதார்த்த ஸங்க்ரஹம், நவ மணி மாலே, ஆஹார நியமம், திருமந்திரச் சுருக்கு, துயச் சுருக்கு, சரம சுலோகச் சுருக்கு, பிரபந்த ஸாரம்.

3 *ரக்ஷைகள்—5* ஸ்ரீ ஸச்சரித்ர ரக்ஷை, நிக்ஷேப ரக்ஷை, பாஞ்சராத்ர ரக்ஷை, கீதார்த்தஸங்க்ரஹ ரக்ஷை, ரஹஸ்யரக்ஷை.

4 ரஹஸ்யங்கள்—34 ஸ்ரீ ஸ்தேயாவிரோதம், ஸம்ப்ரதாய பரிசுத்தி, தத்த்வ பதவீ, ரஹஸ்ய பதவீ, தத்த்வ நவநீதம், ரஹஸ்ய நவநீதம், தத்த்வ மாத்ருகை, ரஹஸ்ய மாத்ருகை, தத்த்வ ஸந்தேசம், ரஹஸ்யஸந்தேசம், ரஹஸ்ய ஸந்தேசவிவரணம் தத்த்வ ரத்னுவளீ, தத்த்வ ரத்னுவளீ ப்ரதிபாத்ய ஸங்க்ரஹம், பரமத பங்கம், ரஹஸ்ய ரத்னுவளீ, ரஹஸ்ய ரத்னுவளீ ஹ்ருதயம், தத்த்வ த்ரய சுளகம், ரஹஸ்ய த்ரய சுளகம், ஸார தீபம், ஸார ஸாரம், பரம பத ஸோபாநம், அபய ப்ரதாந ஸாரம், தத்த்வ சிகாமணி, ரஹஸ்ய சிகாமணி, அஞ்ஜலி வைபவம், ப்ரதாந சதகம்

உபகார ஸங்க்ரஹம், ஸார ஸங்க்ரஹம், ஹஸ்திகிரிமாஹாத்ம் யம், மதுர கவி ஹ்ருதயம், முனிவாஹனபோகம், குருபரம்பரா ஸாரம், ரஹஸ்யத்ரய ஸாரம், விரோத பரிஹா ரம்.

5 வாத க்ரந்தங்கள்—3 ஸ்ரீ சத தூஷணீ, வாதித்ரய கண்டனம், சகாரஸமர்த்தனம்.

6 காவ்ய நாடகாதிகள்—12 ஸ்ரீ ஸுபாஷித நீவீ, ஸங்கல்ப ஸூர்யோதயம், யாதவாப்யுதயம், பாதுகா ஸஹஸ்ரம், ஸமஸ்யா ஸஹஸ்ரீ, ஹம்ஸ ஸந்தேசம், ஹரி தின திலகம், ஆரா தனகாரிகை, யஜ்ஞோபவீத ப்ரதிஷ்ட்டை, பூகோள நிர்ணயம், தத் வ்யாக்யா, ஶில்பார்த்த ஸாரம்.

7 ஸித்தாந்த ப்ரகரண க்ரந்தங்கள்—6 ஸ்ரீ ந்யாயபரி சுத்தி, தத்த்வ முக்தா கலாபம், ஸர்வார்த்த ஸித்தி, ஸேஶ்வர மீமாம்ஸை, மீமாம்ஸாபாதுகை, ந்யாயஸித்தாஞ்ஜநம்.

8 உபய வேதாந்த க்ரந்தங்கள்—9 ஸ்ரீ அ தி க ர ண தர்ப்பணம், கீதா பாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகை, வேதார்த்த ஸங்க் ரஹ வ்யாக்யானம், ஈஶாவாஸ்யோபநிஷத் பாஷ்யம், நிகமபரிம ளம், த்ரமிடோபநிஷத் ஸாரம், த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னா வளீ, தத்த்வ டீகை, அதிகரண ஸாராவளீ

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்







சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்

பார் ஒன்றச் சொன்ன பழமொழிகளாகிய

# ஸ்ரீ ஸூக்திகள் 116

அவற்றில்

# நான்காவது விபாகம்

# ரஹஸ்யங்கள்

# [34]

| | |
|---|---|
| தனி ரஹஸ்யங்கள் | 7 |
| அம்ருதரஞ்ஜனீ ரஹஸ்யங்கள் | 17 |
| அம்ருதாஸ்வாதினீ ரஹஸ்யங்கள் | 10 |

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

# ரஹஸ்யங்களின் திருநாமங்கள்

[ இங்கு குறிப்பிடப்படுகிற க்ரமம் க்ரந்தங்களின் நிர்மாண காலத்தைப் பின்பற்றியதாயிருக்கும். ]

1 ஸ்ரீ ஸ்தேயாவிரோதம்
2 ஸம்ப்ரதாய பரிசுத்தி
3 தத்த்வ பதவீ
4 ரஹஸ்ய பதவீ
5 தத்த்வ நவநீதம்
6 ரஹஸ்ய நவநீதம்
7 தத்த்வ மாத்ருகா
8 ரஹஸ்ய மாத்ருகா
9 தத்த்வ ஸந்தேசம்
10 ரஹஸ்ய ஸந்தேசம்
11 ரஹஸ்ய ஸந்தேச விவரணம்
12 தத்த்வ ரத்னாவளீ
13 தத்த்வ ரத்னாவளீ ப்ரதிபாத்ய ஸங்க்ரஹம்
14 பரமத பங்கம்
15 மெய்விரத நன்னிலத்து மான்மியம்
16 ரஹஸ்ய ரத்னாவளீ
17 ரஹஸ்ய ரத்னாவளீ ஹ்ருதயம்
18 தத்த்வத்ரய சுளகம்
19 ரஹஸ்யத்ரய சுளகம்
20 ஸார தீபம்
21 ஸார ஸாரம்
22 பரமபத ஸோபானம்
23 அபயப்ரதான ஸாரம்
24 தத்த்வ சிகாமணி

25 ஸ்ரீ ரஹஸ்ய சிகாமணி
26 அஞ்ஜலி வைபவம்
27 ப்ரதான சதகம்
28 உபகார ஸங்க்ரஹம்
29 ஸார ஸங்க்ரஹம்
30 மதுரகவி ஹ்ருதயம்
31 முனிவாஹனபோகம்
32 குருபரம்பரா ஸாரம்
33 ரஹஸ்யத்ரய ஸாரம்
34 விரோத பரிஹாரம்

இவற்றில் 1, 14, 15, 22, 31, 32, 33 என்கிற ஏழும் தனி ரஹஸ்யங்கள் என்றும், 2—13, 16—20 இவை பதினேழும் அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யங்கள் என்றும், 21, 23—30, 34 இவை பத்தும் அம்ருதாஸ்வாதினீ ரஹஸ்யங்கள் என்றும் சொல்லப்படும். இவைகளில் 1, 20, 24, 30 என்பவை நான்கும் லுப்தங்கள்.

ஸ்ரீ:

ஸ்ரீ:

தனியன்கள்

श्रीमान् वेंकटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ॥

சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான் *
பாரொன்றச் சொன்ன பழமொழியுள் *—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு*
வானேறப் போமளவும் வாழ்வு.

रामानुजदयापात्रं ज्ञानवैराग्यभूषणम् ।
श्रीमद्वेंकटनाथार्यं वन्दे वेदान्तदेशिकम् ॥

ஸ்ரீ:

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

  

சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்

பார் ஒன்றச் சொன்ன பழமொழிகளுள்

# முதலாவது ரஹஸ்யம்

# ஸ்ரீ ஸ்தேயாவிரோதம்

[இதுவே ஸ்வாமி அருளிச்செய்த ரஹஸ்யங்களிலும், தனி ரஹஸ்யங்களிலும் முதலாவதாகும். இது திருவஹீந்திர புரத்தில் அருளிச்செய்யப்பட்டது.]

ஸ்ரீ பரமத பங்கத்தில் ஸ்வாமி 6-ம் அதிகாரத்தில் ‘ अर्थकामங்களை प्रयोजनமாகக்கொண்டு प्रवृत्तமான नीतिशास्त्रமும் अनापத்தில் धर्मविरुद्धविषयத்தை अभ्यनुज्ञै பண்ணுது. स्तेयशास्त्रமும்

1 ‘ योऽसाधुभ्योऽर्थमादाय साधुभ्यः संप्रयच्छति ’

2 ‘ प्रसह्य वित्ताहरणं न कल्कः ’

என்கிறபடியே क्षत्रियादिகளுக்கு परकालादि न्यायத்தாலே धर्मोपयुक्तமாக प्रवृत्தம் ’ என்று அருளிச்செய்திருக்கிறார்.

ஸ்ரீகோபாலதேசிகன் அருளிச்செய்த ஸ்ரீ தேசிக ஸஹஸ்ரநாமத்திலும்

‘ परकालकृतस्वर्णस्तेयशास्त्राविरोधदृक् ’

என்று அனுஸந்திக்கப்பட்டுத் திருவஹீந்திரபுரத்தில் அருளிச்செய்யப்பட்ட மற்ற ஸ்ரீ ஸூக்திகளுடன் சேர்த்துப் படிக்கப்பட்டிருக்கிறது. இதில் கலியன் செய்தருளிய ஸ்தேயம் சாஸ்த்ர விருத்தமன்று என்று நிருபிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று சொல்லுவர்கள். ] இது லுப்தம்

1 மனு—11 19 அஸாதுக்களிடமிருந்து பணத்தை வாங்கி, ஸாதுக்களுக்கு எவன் கொடுக்கிறானோ, (அவன் அவ்விருவர்களையும் கரையேற்றுகிறான்) 2 பாரதம்—ஆதி—1—301 (துஷ்டர்களிடமிருந்து) கட்டாயப்படுத்திப் பணத்தைப் பறிப்பது தோஷமாகாது.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

  

சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்
பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# இரண்டாவது ரஹஸ்யம்

# ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தி

[அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் முதலாவது.
இது காஞ்சீபுரத்தில் அருளிச்செய்யப்பட்டது. ]

[ ஸத்ஸம்ப்ரதாயத்தின் ஆவச்யகதை—ஸத்ஸம்ப்ரதாய லக்ஷணம்—ஸத்ஸம்ப்ரதாய க்ரமம்—கலியுகத்தில் நம்மாழ்வாரின் ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகத்வம்—நாதமுநிகள் முதலாக ஆசார்ய பரம்பரை—ப்ரதாந ஆசார்ய லக்ஷணம்—ஸ்ரீபாஷ்யகார ஸம்ப்ரதாயத்தில்ஆபாதப்ரதீதியில் தோன்றும் ஸந்தேஹங்களுக்குப் பரிஹாரம்—திருமந்த்ர விஷயமான விளக்கம்—த்வய விஷயமான விளக்கம்—சரமச்லோக விஷயமான விரோத சங்கா பரிஹாரம்—நிகமனம் ]

கட்டளைக் கலித்துறை

தம்பரம் என்றிரங்கித் தளரா மனம் தந்து * அருளால்
உம்பர் தொழும் திருமால் உகந்து ஏற்குமுபாயமொன்றுல் *
நம் பிறவித் துயர் மாற்றிய ஞானப் பெருந்தகவோர்
சம்பிரதாயமொன்றுல்(றிச்) * சதிர்க்கும் நிலை சார்ந்தனமே.

5—2

ஸதாசார்ய ஸம்ப்ரதாயத்தாலே அத்யாத்ம ஶாஸ்த்ரார்த்த விஶேஷநிர்ணயம் பண்ணவேண்டும் என்னுமிடம் உபநிஷத்துக்களிலும் உபப்ரும்ஹணங்களிலும் ப்ரஸித்தம். ஶாஸ்த்ரார்த்த நிரூபணம் பண்ணும்இடத்தில் ஶக்தி இல்லாதவர்களுக்கு

ஸத் ஸம்ப்ரதாயத்தின் ஆவச்யகதை

1 ' उपदेशात् हरिं बुद्ध्वा ' (உபதேஶாத் ஹரிம் புத்த்வா) என்கிறபடியே ஶாஸ்த்ரஜ்ஞ ஸம்ப்ரதாயமாத்ரமும் அபேக்ஷிதார்த்த நிர்ணயகமாம். ஸத்ஸம்ப்ரதாய ரஹிதமான ஶாஸ்த்ரத்தால் அர்த்தநிர்ணயம் துஷ்கரம். ஸூகரந்தானாகிலும் உபயுக்தமாகாது.

அத்யந்த அதீந்த்ரிய விஷயத்தில் ஶாஸ்த்ரமூலமல்லாத ஸம்ப்ரதாயமும் ஸம்ப்ரதிபந்ந ஶாஸ்த்ரவிருத்தமான ஸம்ப்ரதாயமும் ப்ரம விப்ரலம்ப ஸம்பாவனையுண்டாகையாலே பாஹ்யதுல்யமாகையால் அவிஶ்வஸநீயம். பரஸ்பர விருத்தமாக ஸதஸ்யமும் ரஹஸ்யமும் என்று சொல்லுமவையிரண்டும் ஸ்வவாக்யத்தாலே பாதிதங்களாம். திரளிலே சொல்லுமவைகளில் சில அர்த்தங்களை ஏகாந்தத்தில் சொல்ல விதிக்கையாலே அவற்றை ரஹஸ்யங்கள் என்கிறது. ப்ரஜாபதி வாக்யம், முற்பட அஸுரேந்த்ரனை விரோசநனை மோஹிப்பிக்கைக்காகச் சொல்லப்பட்டு, பிற்பட தேவேந்த்ரனைப் பர்வ க்ரமத்தாலே பரிஶுத்தாத்மவிஷயத்திலேப்ரதிஷ்டிதபுத்தியாக்குகிறது. உபகோஸல வைஶ்வாநராதிவித்யைகளிலே முற்பட வேத்யோபாதேயங்களைப்பற்ற ஏகதேச உபதேஶம் க்ரமேண ஶேஷபூரணார்த்தம். ஸர்வேஶ்வரன்தானும் தான் உபதேஶித்தஜ்ஞாநத்தைப்பின்னையும்

ஸத் ஸம்ப்ரதாய லக்ஷணம்

2 ' तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया '
( தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா )

---

1 ( சாஸ்த்ரத்தைத் தெரிந்து கொள்வது அதிகக் கஷ்டத்தைக் கொடுக்கக்கூடியது, புத்தி சலிப்பதற்குக் காரணம், ஆகையினாலே ஆசார்யனுடைய ) உபதேசத்தினால் பகவானைத் தெரிந்து கொண்டு (எல்லாக்கர்மங்களிலிருந்தும் ஓய்வடையவேண்டும்)

2 கீதை—4- 34 நன்றாக நமஸ்கரிப்பதினாலும், விநயமாகக் கேட்பதினாலும் சுச்ருஷை செய்வதினாலும் (ஜ்ஞாநிகளிடமிருந்து) அந்தத் தத்துவார்த்தத்தை அறிந்துகொள்.

என்று பல ஜ்ஞாநிகள் பக்கலிலே கேட்க விதித்தானிறே. இப்படிகளால் ஸம்ப்ரதிபந்ந சாஸ்த்ர விரோதமின்றிக்கே ஶாஸ்த்ர மூலத்வ ஸம்ப்ரதிபத்தியுண்டான ஸம்ப்ரதாயம் உபஜீவ்யம்.

இப்படிப்பட்ட ஸத்ஸம்ப்ரதாயத்தில் தோற்றும் விரோதம் தத்த்வ விஷயமாகில் தாத்பர்யபேதத்தாலே விரோத ஶாந்தியுண்டாம். அநுஷ்டாந விஷயமாகில் அவ்வோ அதிகாரிக்கு அநுகுணமாக வ்யவஸ்த்தித அவ்யவஸ்த்திதப்ரக்ரியையாலே விகல்பமாம். ந்யாஸ உபாஸநங்களிலே அதிகாரிபேதத்தையிட்டு வ்யவஸ்த்தித விகல்பம் என்று பார்க்கிலும், பலஸாம்யத்தையிட்டுத் துல்ய விகல்பம் என்று பார்க்கிலும் விரோதமில்லை.

**ஸத் ஸம்ப்ரதாய க்ரமம்**

ஸர்வலோகஹிதமான அத்யாத்ம ஶாஸ்த்ர ஸம்ப்ரதாயத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகன் ஸர்வேஶ்வரன். மற்றுள்ளார் எல்லாரும் அவன்தன்னாலேயாதல் சேதநாந்தர முகத்தாலேயாதல் மயர்வறமதிநலம் அருளப்பட்டு ப்ரவர்த்திப்பிக்கிறவர்கள்.

**கலியுகத்தில் நம்மாழ்வாரின் ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகத்வம்**

இப்படி அநஸூயாதி குணயுக்தராய்
1 ' प्रणिपत्याभिवाद्य च ' (ப்ரணிபத்யாபிவாத்ய ச )
இத்யாதிகளிற்படியே ஸம்யக் உபஸந்நரான அதிகாரிகளைப் பற்ற யதார்த்ததர்ஶிகளாய் யதாத்ருஷ்டார்த்த வாதிகளான வ்யாஸ போதாயநாதிகளாலே யதாதிகாரம் ப்ரவர்த்திதமான வேதாந்த ஸம்ப்ரதாயத்திற்கு இந்த யுகாரம்பத்திலே ப்ரஹ்மநந்த்யாதிகளுக்குப் பின்பு நம்மாழ்வார் ப்ரவர்த்தகரானார்.

2 ' प्राप्यं ज्ञानं ब्राह्मणात् क्षत्रियाद्वा वैश्याच्छूद्राद्वाऽपि नीचादभीक्ष्णम् ' ( ப்ராப்யம் ஜ்ஞாநம் ப்ராஹ்மணாத் க்ஷத்த்ரியாத்வா வைஶ்யாத்

---

1 விஷ்ணு புராணம்—1–1–1 ( மைத்ரேயர் பராசர முனிவரை) ஸேவித்து அபிவாதநம் செய்து(கேட்டார்) 2 பார – சாந்தி – 323–98 பரமாத்மாவைப் பற்றிய ஜ்ஞாநம் ப்ராஹ்மணனிடத்திலிருந்தாவது, க்ஷத்த்ரியனிடத்திலிருந்தாவது, வைச்யனிடத்திலிருந்தாவது

சூத்ராத் வாபி நீசாதபீக்ஷணம் )
இத்யாதி ப்ரமாணபலத்தாலே

*1 ' மிக்க வேதியர் வேதத்தினுட்பொருள்*
*நிற்கப் பாடி என் நெஞ்சுள் நிறுத்தினுன் '*

என்கிறது உபபந்நம். வேதாந்தார்த்த வைஶத்ய ஹேதுவாகையாலே பாஷாந்தரமும் உபஜீவ்யம். தர்மவ்யாத துலாதாராதி வ்ருத்தாந்தங்களையும் இங்கே அநுஸந்திப்பது.

2 ' शूद्रयोनावहं जातो नातोऽन्यद्वक्तुमुत्सहे '
' சூத்ர யோநாவஹம் ஜாதோ நாதோऽந்யத் வக்துமுத்ஸஹே )
என்கிறது விஷயபேதத்தாலே பரிஹ்ருதம். மதுரகவி முதலான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் ப்ராதுர்ப்பாவவிஶேஷத்தாலும் நாதமுநிகளுக்கு நம்மாழ்வார் ஆசார்யராஞர். இவரை ப்ரபந்ந ஸந்தாந கூடஸ்த்ததையாலே ஆளவந்தார்

3 ' आद्यस्य नः कुलपतेः ' *[ஆத்யஸ்ய ந: குலபதே:]*
என்று அருளிச்செய்தார்.

**நாதமுநிகள் முதலாக ஆசார்ய பரம்பரை**

நாதமுநிகள் தம்முடைய திருப்பேரஞரான ஆளவந்தாருக்குத் தாம் உபதேஶியாதே, தம்முடையஶிஷ்யப்ரஶிஷ்யர்களை இவருக்கு ஆகாங்க்ஷை பிறந்தபோது உபதேஶியுங்கோள்என்றுஆஜ்ஞாபித்தது குருபுத்ர பௌத்ராதிகளும் வித்யா ப்ரதாநத்திற்கு ப்ரஶஸ்தபாத்ரங்கள் என்றும், ஜ்ஞாநஸந்ததியிலே முற்பட்டவர்களும் குருக்களாக ஆதரணீயர் என்றும், ஆகாங்க்ஷையின்றிக்கே இருக்கச்செய்தே சொன்னல் ஶிஷ்யபுத்தியில் அர்த்தம் ப்ரதிஷ்டிதமாகாது என்றும் தெளிவித்தபடி. மணக்கால்நம்பி ஆளவந்தாருக்கு நெடுநாள் பச்சையிட்டு ஒரு விரகாலே ஆகாங்க்ஷை உண்டாக்கி உபதேஶித்தது ஆசார்ய குலத்திற்குத் தாம் ஒரு

சூத்ரனிடத்திலிருந்தாவது, தாழ்ந்தவர்களிடத்திலிருந்தாவது எப்பொழுதும் அடையத்தக்கது. 1 கண்ணிநுண் சிறுத்தாம்பு–9

2 பாரதம்—உத்யோக-41-5 சூத்ரயோநியில் நான் பிறந்தவன், ஆகையினுல் மற்றதை (மந்த்ராதிகளை)ச் சொல்ல விரும்பவில்லை.

3 ஸ்தோத்ரம்-5 நம்முடைய முதலாமவரான குலபதியான,

கிஞ்சித்காரம் பண்ணுகையிலும் ஆசார்ய நியோகத்தைக் கடுகத் தலைக்கட்டுகையிலும் உண்டான த்வரையாலும் சிரகால பரீக்ஷாதிகள் வேண்டாதபடி

1 'बोधनं च मुहुः क्रमात्' (போதநம் ச முஹு: க்ரமாத்) என்கிற யுகதர்மாநுஸாரத்தாலும் உபபந்நம். ஆளவந்தார் தாம் நாதமுநிகளை முன்னிட்டு ஸ்தோத்ரம் பண்ணிற்றும், ஶரணம்புக்கதுவும், தம்முடைய ஆசார்யனுக்கு இது ப்ரியதமம் என்றும், தமக்கு ஆசார்யவத்தை முதலான ஸகல ஸம்பத்துக்களுக்கும் அடி நாதமுனிவம்ஶத்தில் பிறவி என்றும் தோற்றுகைக்காகவும், ஆசார்ய விஷயத்திற்போலே ப்ரப்ராசார்ய விஷயத்திலும் க்ருதஜ்ஞதாதிகள் வேண்டும் என்கைக்காகவும் (என்று அறியப்படும்). ஆசார்யபங்க்தியில் சிலரை க்ரந்தங்களிலே வ்யபதேஶித்துஅவர்களையும் மற்றுமுள்ளவர்களையும் அநுஸந்திப்பார்கள். ஆளவந்தாருடைய நியோகத்தாலே ஸ்ரீ பாஷ்யகாரரை அங்கீகரித்த பூர்ணரான பெரியநம்பி இவரைத் தமக்கு ஸப்ரஹ்மசாரிகளான திருக்கோட்டியூர்நம்பி பக்கலிலே அர்த்த ஶிக்ஷை பண்ணவும், திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிகேட்கவும், ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையர் பக்கலிலே நல்வார்த்தை கேட்கவும்நியோகித்ததும்

2 'बहुभ्यः श्रोतव्यं बहुधा श्रोतव्यं', 3 'ज्ञानवृद्धाः मया राजन् बहवः पर्युपासिताः' ('பஹுப்ய: ச்ரோதவ்யம் பஹுதா ச்ரோதவ்யம்' 'ஜ்ஞாந வ்ருத்தா: மயா ராஜந்! பஹவ: பர்யுபாஸிதா:' இத்யாதிகளையும் சுகாதி வ்ருத்தாந்தங்களையும் பார்த்து, ஶிஷ்யபூதரை பஹுமுகமாகத் திருத்தவேண்டுமென்கிற அபிஸந்தியாலே உபபந்நதமம். இப்படி ஆசார்யாபிமத விஷயத்தில் ஆசார்யாநுஜ்ஞையாலே அபேக்ஷித ஜ்ஞாநோபஜீவநம் பண்ணுமது ஶாஸ்த்ரார்த்தம்என்னுமிடம் அந்திமதஶாவதியாக அத்யந்தஅவஹிதராய்க் கொண்டு ஸதாசாராநுபாலநம் பண்ணின ஸ்ரீ பாஷ்யகாரருடைய அநுஷ்ட்டாநத்தாலே ஸித்தம்.

---

1 உபதேசிப்பது,அடிக்கடி உபதேசிப்பது என்கிற க்ரமத்தில்.

2 பலரிடமிருந்து கேட்கவேண்டும், பலபடிகளில் கேட்கவேண்டும். 3 ஓ! அரசனே! ஜ்ஞாநத்தில் முதிர்ந்தவர்கள் பலர் என்னால் நன்ருக உபாஸிக்கப்பட்டார்கள்,

அத்யாத்ம விஷயத்தில்(ஶாஸ்த்ரங்களில்) ப்ரதாந அப்ரதா நாம்ஶங்களை ஒருவருக்குப்பலராக உபதேஶிக்க வேதாந்தங்களில் பல இடங்களிலே கண்டோம்.

ப்ரதாந ஆசார்யலக்ஷணம்

ஓராசார்யன் பக்கலிலே க்ருத்ஸ் நோபதேஶம் மைத்ரேயாதிகளுக் குப் போலே சிலருக்கு உண்டாம். ப்ரதாந ஶ்ருதத்தினுடைய ப்ர திஷ்ட்டார்த்தமாகப் பலர் உபதேஶித்தால்

1 ' अल्पं वा बहु वा यस्य श्रुतस्योपकरोति यः ।
तमपीह गुरुं विद्यात् श्रुतोपक्रियया तया ॥ '

( அல்பம் வா பஹு்வா யஸ்ய ச்ருதஸ்யோபகரோதி ய: | தமபீஹ குரும் வித்யாத் ச்ருதோபக்ரியயா தயா || )

என்கையாலே அவர்கள் பக்கலிலும் ஆசார்யப்ரதிபத்தி பண்ண ப்ராப்தம். அவ்யவஹித மோக்ஷோபாய வ்யவஸாயம் பிறப்பிக் கை ப்ரதாந ஆசார்ய க்ருத்யம். இது கலங்காதபடி பண்ணுகை யும் பரிகர பூர்த்தி உண்டாக்குகையும் ஆசார்யாபிமத ஶிக்ஷகாந் தர க்ருத்யம். இப்படிப்பட்ட ஆசார்ய ஸம்பந்தத்தை உண்டாக் கினவர்களும் ப்ரபந்த முகத்தாலே பரம்பரயா உபகரித்தவர்க ளும் ஆதரணீயர். இவர்களில் ப்ரதாநதமன் ஸர்வப்ரேரகனான ஶ்ரிய:பதி. இவன் ஒருவனுமே தனக்கு ஒரு ஆசார்யனில்லாத பரமாசார்யன்.

ஸ்ரீபாஷ்யகாரருடைய ஶிஷ்ய ஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் அர்த்தவிரோதமில்லை, வாக்ய யோஜநாபேதமேயுள்ளது. தேச காலஅவஸ்த்தாவிசேஷங்களாலே

ஸ்ரீ பாஷ்யகாரரின் ஸம்ப்ரதாயத்தில் ஆபாதப்ரதீதியில்தோன்றும் ஸந்தேஹங்களுக்குப் பரிஹாரம்

வரும் அநுஷ்ட்டாந வைஷம்யம் ஶாஸ்த்ராநுமதம். சோராபராதத் தை மாண்டவ்யன்பக்கல் ஆரோ பித்தாற்போலேஸ்வேச்சைக்குஅநு குணமாக அநிபுணர் சொல்லுமது வக்தாக்களுக்கே தோஷமாம்.

---

1 எவன் கொஞ்சமாகவாவது அதிகமாகவாவது சாஸ்த்ரார்த்தத் திற்கு உபகாரம் செய்கிறானோ, அவனை அந்தக்கேட்கப்பட்ட அர்த்தத் திற்கு உபகாரம் செய்தபடியால் இங்கு குருவாக அறியவேண்டும்,

திருமந்த்ரத்தில் பதார்த்த வாக்யார்த்தங்களெல்லாம் மூல பூத நிருக்தாதி வாக்யவிஶேஷங்களாலே வந்தவை. இதில் பத

**திருமந்த்ர விஷயமான விளக்கம்**

த்ரயத்திலுமாகவாதல், ப்ரதமபதத்திலேயாதல், ப்ரதமாக்ஷரத்திலேயாதல் ஸங்க்ஷேப விஸ்தர க்ரமத்தாலே ஶப்த அர்த்த ஸ்வபாவங்களைக்கொண்டு அர்த்தபஞ்சகாநுஸந்தாநம் பண்ணுமதுவும் அந்யோந்ய விருத்தமன்று. இப்படி ப்ரதம த்விதீயாக்ஷரங்களாலே ஆர்த்தமாகவாதல் ஶாப்தமாகவாதல் ஶரண்ய ஸஹதர்மசாரிணீ ப்ரதிபாதநம் பண்ணுமதுவும் அவ்வோவாக்யவிஶேஷமூலம். மத்யமாக்ஷரம் பத்நீ பரமென்னும் நிர்வாஹத்தில் விசேஷ உபாதாந பலத்தாலே அவதாரணம் அர்த்தஸித்தம். இந்த அவதாரணத்தாலே ஶரீராத்மபாவம் ஸித்திக்கிறதுஎன்பார்க்குஶேஷத்வ அயோக வ்யவச்சேதத்திலே தாத்பர்யம் கொள்ளலாம்.

1 ' मकारार्थो जीवः ' ( மகாரார்த்தோ ஜீவ: )

இத்யாதிகளிற்படியே த்ருதீயாக்ஷரம் ஜீவ ஜாதீய ஸர்வபரம் என்பார்க்கும் இதில் ஸ்வாநுஸந்தாநம் ஆர்த்தம் என்னவேண்டும்.

2 ' अकारार्थायैव स्वमहं ' ( அகாரார்த்தாயைவ ஸ்வமஹம் )

என்று விஶேஷித்துவ்யாக்க்யாநம் பண்ணினவர்களுக்கும் இவ்வநுஸந்தாநம் ஸர்வ ஜீவ ஸாதாரணாகார விஷயம். பகவச்சேஷத்வம் தோற்றுமிடமெல்லாம் பாகவத ஶேஷத்வ பர்யந்தமாக அநுஸந்திக்க ப்ராப்தமாயிருக்க,ஔசித்யாதிஶயத்தாலே மத்யம பதத்திலே இத்தை அநுஸந்திக்குமது உபபந்நம். ப்ரதம த்விதீய சதுர்த்திகளுக்கு ஏகார்த்தத்வ பிந்நார்த்தத்வங்களும் ப்ரமாணாநுகுண வாக்யார்த்த விவக்ஷா பேதத்தாலே சொன்னவை.

த்வயத்தில் பூர்வ அபர ஸ்ரீமத் சப்தங்களிலும், பூர்வ அபர நாராயண ஶப்தங்களிலும் சில ஆகார விஶேஷங்களைப் பிரித்து

**த்வயவிஷயமான விளக்கம்**

அநுஸந்திக்குமதுஉபாயபலதஶைகளுக்கு உபயுக்ததமாம்ஶ நிஷ்கர்ஷம் பண்ணினபடி. சரணங்களை உபாயம் என்கிறதுக்குச்

---

1 அஷ்டச்லோகீ– 1 ம என்பதற்கு அர்த்தம் ஜீவன். 2 அஷ்டச்லோகீ -3 அகாரத்திற்கு அர்த்தமான பகவானுக்கே நான் சேஷபூதமான வஸ்து.

சரண விஶிஷ்ட வஶீகார்யன் பக்கலிலே தாத்பர்யமாகையாலே ஸித்தோபாய பேதமும் ஸாத்யோபாய பாதமும் வாராது. நமஸ் ஸு நாநார்த்தமாக அஹிர்புத்ந்ய ஸம்ஹிதாதிகளிலே நிருக்த மாகையாலே ப்ரதம த்விதீய ரஹஸ்யங்களில் மத்யம சரம பதங் களுக்கு வாக்யார்த்தாநுகுணமாக அர்த்தபேதம் கொள்ளலாம். த்விதீய த்ருதீய ரஹஸ்யங்களில் கிடக்கிற சரண ஶப்தம் உபாய பரமானதடியாக வஶீகரணோபாயத்திற்குச் சிலர் பண்ணும் அதி வாதமெல்லாம் ஸித்தோபாய ப்ராதாந்யபரம். ஸ்வாநுஸந்தாந பரமாயும் விதிபரமாயும் நிற்கிறஆக்க்யாதங்களில் ஆவ்ருத்திக்கு ஜ்ஞாபகமில்லாமையாலும்அநாவ்ருத்திக்குக்கண்ட்டோக்திஉண் டாகையாலும் வர்த்தமாந வ்யபதேஶம் அநுஷ்ட்டாந காலாபிப் ராயம். ப்ரபத்திக்கு யாவஜ் ஜீவாநுவ்ருத்தி சொல்லுவார்க்கும்

1 ‘ द्वयमर्थानुसन्धानेन सह सदैवं वक्ता ’ (த்வயமர்த்தாநுஸந்தா நேந ஸஹ ஸதைவம் வக்தா )

இத்யாதிகளிற்சொன்ன ஸுகாஸிகையிலே தாத்பர்யம் கொள்ள லாம்.

2 ‘ न्यासः पंचांग संयुतः ’ ( ந்யாஸ: பஞ்சாங்க ஸம்யுத: )

என்று சொன்ன ப்ரபத்த்யங்கங்களிலே சிலர் கதிபயாநாதரம்பண் ணுமது அங்கியினுடைய வைபவார்த்தம். விஶேஷித்துக் கதிபய அங்கோபாதாநம் பண்ணுமதுவும் அங்காந்தரங்களிற்காட்டில் இவ்வங்கங்களுடைய ப்ரஶம்ஸார்த்தம்.

**சரம ச்லோக விஷயமான விரோதசங்கா பரிஹாரம்**

சரமஶ்லோகத்தில் விதிக்கிற ப்ரபத்தி ஸகல பல ஸாதநமா கையாலே அங்கமாகவும் ஸ்வதந்த்ரமாகவும் வ்யாக்க்யாநம் பண் ணின பாஷ்ய கத்யாதிகளுக்கு விரோதமில்லை. ஸர்வதர்ம ஶப் தத்தில் ஸங்குசித அஸங்குசித வ்ருத்திகளைக் கொள்ளுமவர்க ளுக்குப் பரபக்ஷத்திற்போலே ஸ்வ தர்ம ஸ்வரூபத்யாகவிதி விவ க்ஷையில்லாமையாலே ஸ்வதந்த்ராஜ்ஞாநுபாலந விரோதமில்லை.

---

1 சரணாகதி கத்யம் - த்வயத்தைக் கீழ்ச் சொல்லியபடி அர்த்தத் தின் அனுஸந்தானத்துடன் எப்பொழுதும் சொல்லிக்கொண்டு.

2 லக்ஷ்மீ தந்த்ரம்–52-14 –ஐந்து அங்கங்களையுடையதானப்ரபத்தி

'பரித்யஜ்ய' ஶப்தத்திலும் 'ஏக' ஶப்தத்திலும் மூலப்ரமாணாநுகுண மாகச் சொல்லும் பல அர்த்தங்களிலும் பரஸ்பர விரோதமில்லை. அவற்றில்புநருக்திவாராதபடி அநுஸந்திக்குமதுவே வேண்டுவது. ஶரண்யனுக்கு ப்ரபத்தி கர்மத்வத்தையும் மோக்ஷ கர்த்ருத்வத் தையும் ப்ரதிபாதிக்கிற 'மாம், அஹம்' என்கிறபதங்களிலே (ந)பர ஸ்வீகார உபயுக்தமான ஸௌலப்யமும், ஸர்வோபகார உபயுக்தமான பரத்வமும் அநுஸந்திக்குமிடத்தில் அபேக்ஷித விஶேஷங்களைப் பிரித்து அநுஸந்திக்குமது ஶேஷவ்ய வச்சேதார்த்தமன்று. 'வ்ரஜ' என்றும், 'த்வா' என்றும் அர் ஜுநனை ஒருவனைக் குறித்துச் சொன்னாலும் தாத்பர்ய விஶேஷத் தாலே இது ப்ரபத்த்யதிகாரிகள் எல்லாருக்கும் வரும். ஸர்வ பாப மோக்ஷ வசநத்தில் புத்திபூர்வோத்தராகத்தையும் கூட்டு வார்க்கு ஶரண்ய அபிப்ராய மூல புந:ப்ரபதநாதி முகத்தாலே அவைகளுக்கு விநாஶம் விவக்ஷிதமாகையால் ஶாஸ்த்ர விரோத மில்லை. 'மோக்ஷயிஷ்யாமி' என்கிற ஸங்கல்பத்தின் பலத்தை ப்ராரப்த கர்மாவஸாந காலத்திலே என்றவர்களுக்கும் ப்ரபத்தி பண்ணுகிறவன் கோரின காலத்திலே என்றவர்களுக் கும் ஆர்த்தியில் தாரதம்யத்திற்கு ஈடாகப் பலாநுபவத்தாலேயா தல் ப்ரபத்தி வைபவத்தாலேயாதல் ப்ராரப்தகர்மாவஸாந காலத் திலே மோக்ஷம் துல்யம். அர்ஜுநனுக்கு ஶோக நிமித்தம் வே றேயாகிலும்

1 'मा शुचः संपदं दैवीं' (மா ஶுச: ஸம்பதம் தைவீம்)

என்கிறஇடத்திற்போலே 'மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:' என்கிற இடத்திலும்ப்ரகரணாநுகுண நிமித்தவிஶேஷாநுஸந்தாநம்உசிதம்.

மற்றும் இப்படி வேதாந்த ஸித்தங்களான தத்த்வ ஹித புரு ஷார்த்தங்களில் பரஸ்பர விரோதமும் பூர்வாபர விரோதமும் இல் லாத ஶுத்த ஸம்ப்ரதாய க்ரமத் தை ஸங்க்ரஹித்தனம்.

நிகமநம்

2 'सुव्याहृतानि महतां' (ஸுவ்யாஹ்ரு

1 கீதை—16-5. 'அபிஜாதோஸி பாண்டவ' என்று மேல். ஓ! பாண்டுவின் பிள்ளையாகிய அர்ஜுந! துக்கப்படாதே, தேவர்களின் ஸம்பத்தை உத்தேசித்துப் பிறந்தவனாகிறாய். 2 பாரதம் - உத்யோக – 34–34. 'ஸுக்ருதாநி ததஸ்தத: | ஸஞ்சிந்வந் தீர ஆஸீதஸிலஹாரீ

தாநி மஹாதாம் ) இத்யாதிகளையும் இங்கே ஸங்க்ரஹித்துக்கொள்வது

அகவல்

* கடலமுதத்தைக் கடைந்து சேர்த்த
திருமாலடி காட்டிய(டும்) நம்
தேசிகர் தந்நிலை பற்றிச் சேர்ந்தோமே. 2

** आसर्वज्ञादस्मदाचार्यपंक्तेरप्रत्यूहं सत्पथं स्थापयन्ती ।
सैषा नित्यं संप्रदायस्य शुद्धिः श्रद्धातव्या चातकन्यायनिष्ठैः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्री संप्रदाय परिशुद्धिः संपूर्णा ॥
॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

இப்படி கவிதார்க்கிகஸிம்ஹமும் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத்வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளுள்
ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தி முற்றிற்று.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

---

ஸிலம் யதா ' என்று மேல். பெரியோர்களுடைய ஹிதோபதேசரூபமான வார்த்தைகளையும்அவர்களுடையஅநுஷ்ட்டாநங்களையும்அவர்களிடமிருந்துஉயிர்நெல்லைப்பொறுக்குமவன் உயிர்நெல்லைப்பொறுக்குவதைப்போல பொறுக்கிச் சேர்த்துக்கொண்டு தீரனாய் இருக்கவேண்டும்

** ஸர்வஜ்ஞனாகிய பகவான் தொடக்கமாக நம்முடைய ஆசார்யர்களின் வரிசையின் நல்ல மார்க்கத்தை ஒரு விதத் தோஷமும் இல்லாதிருக்கும்படி ஸ்தாபிக்கிற அப்படிப்பட்ட இந்த ஸம்ப்ரதாயத்தினுடைய பரிசுத்தி, அதாவது ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தி என்கிற இந்த க்ரந்தமானது சாதக நிஷ்ட்டையையுடைய பரமைகாந்திகளினால் எப்பொழுதும் விச்வஸிக்கத்தக்கது.

* ஸமுத்திரத்தைக் கடைந்துஅம்ருதத்தை ஒன்று சேர்த்தவனாகிய ச்ரிய:பதியினுடைய திருவடிகளை உபாயமாயும் உபேயமாயும் காட்டிக் கொடுத்த நம் பூர்வாசார்யர்களினுடைய ஸ்திதியை அவலம்பித்து நாம் அடைந்தோம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்





சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்
பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

## மூன்றுவது ரஹஸ்யம்

# ஸ்ரீ தத்த்வ பதவீ

[ அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் இரண்டாவது.
இது காஞ்சீபுரத்தில் அருளிச்செய்யப்பட்டது. ]

[ உபோத்காதம்—பரதத்த்வ நிரூபணம்—சேதநநிரூபணம்—அசேதந நிரூபணம்—த்ரிகுண நிரூபணம்—கால நிரூபணம்—சுத்த ஸத்த்வ நிரூபணம்—தர்மபூத ஜ்ஞாந நிரூபணம்—முக்தி அடையும் ப்ரகாரம். ]

* प्रसादात् देशिकेन्द्राणां परावर विभागवित् ।
प्रपन्नः परमात्मानं प्राप्नोति परमं पदम् ॥

ப்ரஸாதாத் தேஶிகேந்த்ராணாம் பராவரவிபாகவித் ।
ப்ரபந்ந: பரமாத்மாநம் ப்ராப்நோதி பரமம் பதம் ॥

ஸதாசார்யப்ரஸாதத்தாலே பராவர தத்த்வஜ்ஞாநம் பிறந்து (தவன்) ஸர்வேஶ்வரன் திருவடிகளை உபாயஉபேயங்களாகப்பற்றி உஜ்ஜீவிக்கவேண்டும்.

உபோத்காதம்

---

* ஆசார்யர்களினுடைய அநுக்ரஹத்தினுல் பர தத்த்வம் அவர தத்த்வம், அதாவது உயர்ந்த வஸ்து தாழ்ந்த வஸ்து, இவைகளின் பிரிவைத் தெரிந்துகொண்டவனுய் உயர்ந்த தத்த்வமாகிய ச்ரிய:பதியினிடம் ப்ரபத்தி செய்தவன் பரமபதத்தை அடைகிறுன்.

**பர தத்த்வ நிரூபணம்**

பரதத்த்வமாவது—ஸ்வ வ்யதிரிக்த வஸ்துக்கள் எல்லாவற்றுக்கும் தாரகனுமாய் நியந்தாவுமாய் ஶேஷியுமான ஶ்ரிய:பதி. இவன் ஸ்வத:ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய், பரமகாருணிகனாய், ஸர்வஶரண்யனாய், பரமோதாரனாய், மோக்ஷப்ரதனாய், முக்தப்ராப்யனாய், பரவ்யூஹாதி பஞ்சப்ரகார ஶுபாஶ்ரய (திவ்யமங்கள) விக்ரஹவிஶிஷ்டனாயிருக்கும்.

இவனை ஒழிந்தவை அவர தத்த்வம். இது சேதநமென்றும், அசேதநமென்றும் இரண்டு வகையாயிருக்கும்.

**சேதந நிரூபணம்**

சேதநமான அவர தத்த்வம் பரிச்சிந்நமான அஹமர்த்தம் இதற்கு ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் பராயத்தங்களாயிருக்கும். இது பத்த முக்த நித்ய ரூபத்தாலே த்ரிவிதம். பத்தராவார்—ஸம்ஸரிகுமவர்கள். முக்தராவார் — ஸம்ஸாரம் கழிந்தவர்கள். நித்யராவார்—ஒரு காலத்திலும் ஸம்ஸாரமில்லாத நித்யஸூரிகள்.

**அசேதந நிரூபணம்**

அசேதநமாவது—அறிவில்லாத வஸ்து. அசேதந த்ரவ்யம் த்ரிகுணம் என்றும், காலம் என்றும், ஶுத்தஸத்த்வம் என்றும், தர்மபூதஜ்ஞாநம் என்றும் சதுர்விதமாயிருக்கும்.

**த்ரிகுண நிரூபணம்**

த்ரிகுணமாவது ஸத்த்வாதி குணத்ரயாஶ்ரயமான த்ரவ்யம். இது ப்ரக்ருதி விக்ருதி விபாகத்தாலே இருபத்து நாலு வகையாய் பகவல்லீலார்த்தமாக க்ஷேத்ரஜ்ஞருக்குக் காயகரணதிரூபேண பரிணமித்து பகவத் ஸ்வரூப திரோதாநாதிகளைப் பண்ணும்.

**காலநிரூபணம்**

காலமாவது—க்ஷணாதி விபாகத்தையுடைத்தாய் ஸர்வ கர்த்தாவான ஈஶ்வரனாலே ஸஹகாரியாக ஸ்வீக்ருதமாயிருக்கும் த்ரவ்யம்,

ஶுத்தஸத்த்வமாவது— ரஜஸ் தமஸ்ஸுக்களின்றிக்கே ஸத்த்வ குணாஶ்ரயமான த்ரவ்யம்.

சுத்தஸத்த்வ நிரூபணம்

இது ஈஶ்வரனுக்கும் நித்யருக்கும் முக்தருக்கும் விக்ரஹாதி ரூபேண விசித்ர(போக்ய)மாயிருககும்.

தர்மபூத ஜ்ஞாநமாவது—பராவராத்மாககளுக்கு ஸ்வாத்மாவையும், ஸ்வ வ்யதிரிக்த வஸ்துக்களையும் ப்ரகாசிப்பிக்க வற்றான ஜ்ஞாநம். இந்த ஜ்ஞாநத்தாலே ஆத்மாக்களுக்கு ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் உண்டாகின்றன.

தர்மபூதஜ்ஞாந நிரூபணம்

பத்தருக்கு நிஷித்த காம்ய கர்த்ருத்வம் ஸம்ஸார ஹேது. தத்த்வஜ்ஞாநமூல நிவ்ருத்திதர்ம கர்த்ருத்வம் மோக்ஷ ஹேது.

முக்தி அடையும் ப்ரகாரம்

பத்தன் முன்பு பண்ணின பந்தகங்களுக்கெல்லாம் தன் அதிகாராநுகுணமாக ப்ரபத்த்யாதி ப்ராயஶ்சித்தம் பண்ணி, மேல் அபராதம் பண்ணாதே ப்ராரப்த கர்மத்தையும் ஒரு வழியாலே கழித்து முக்தனும்.

குறள் வெண்பா

* முத்திக்கு அருள்சூட மூன்றைத் தெளிமுன்னம்*
இத்திக்கால்ஏற்கும் இதம்.

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य

श्रीमद्वेंकटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु

श्री त त्त्व प द वी सं पू र्णा ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

இப்படி கவிதார்க்கிக ஸிம்ஹமும் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத்வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளுள்
ஸ்ரீ தத்த்வ பதவீ முற்றிற்று.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

---

* மோக்ஷத்திற்குக் காரணமாகிய பகவானுடைய க்ருபையை சிரஸா வஹிக்க முதலில் சித், அசித், ஈச்வரன் என்கிற மூன்று தத்த்வங்களையும் அவைகளின் அஸாதாரண தர்மங்களுடன் நன்றாகத் தெரிந்துகொள், இந்த வழியாக உபாயம் அநுருபமாக உண்டாகும்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்





சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்
பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# நான்காவது ரஹஸ்யம்

# ஸ்ரீ ரஹஸ்யபதவீ

*[ அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் மூன்றுவது.*

*[காஞ்சீபுரத்தில் அருளிச்செய்யப்பட்டது.]*

**[ உபோத்காதம்—ப்ரணவ சப்தார்த்தம்—நம: சப்தார்த்தம்—நாராயண சப்தார்த்தம்—த்வயத்தில் பூர்வ கண்டார்த்தம்—த்வயத்தில் உத்தர கண்டார்த்தம்—த்வயத்தின் திரண்டபொருள்—சரமச்லோகத்தில் பூர்வார்த்தவிவரணம்—சரம ச்லோகத்தில் உத்தரார்த்த விவரணம்—நிகமநம் ]**

உபோத்காதம்

அநாதிகாலம் ஸம்ஸரித்துப் போந்த ஜீவாத்மாக்களுடைய உஜ்ஜீவநார்த்தமாக அத்யாத்ம ஶாஸ்த்ரங்கள் தத்த்வ ஹித புருஷார்த்தங்களைப்ரதிபாதிக்கும். அவற்றை ஸங்க்ரஹேண ரஹஸ்யத்ரயம் ப்ரகாஶிப்பிக்கும்.

ப்ரணவசப்தார்த்தம்

இவற்றில் திருமந்த்ரம், ஸர்வஸங்க்ரஹம். இது தான் மூன்று பதமாய் எட்டுத் திருவக்ஷரமாயிருக்கும். இதில் ப்ரதம பதமான ப்ரணவம் ஸாரதம ஸங்க்ரஹம். இது மூன்று பதமாய் மூன்று அக்ஷரமாயிருக்கும். இதில் ப்ரதமாக்ஷரம் ஸர்வகாரணபூதனாய், ஸர்வரக்ஷகனாய், நித்ய நிருபாதிக ஶேஷித்வ ப்ரதிஸம்பந்தியான ஶ்ரிய:பதியைச்

சொல்லுகிறது. இதில் சதுர்த்தீ— ஶேஷத்வமாகிற ஸம்பந்தத்தைக் காட்டுகிறது. மத்யமாக்ஷரம் இஸ்ஸம்பந்தத்தை மற்றவரோடு துவக்கற நியமிக்கிறது. த்ருதீயாக்ஷரம் இஸ்ஸம்பந்தத்திற்கு ஆஶ்ரயனும் ரக்ஷணீயனும் ஜ்ஞாநாநந்த ஸ்வரூப குணனும் அணுவாய் தேஹாதி விலக்ஷணனுன ஜீவாத்மாவைச் சொல்லுகிறது. ஆகஇப்ப்ரணவத்தால்

1 ‘ கண்ணபுரமொன்று
உடையானுக்கு அடியேன் * ஒருவர்க்குரியேனே * ’

என்கிறபடியே இஜ்ஜீவாத்மா பகவதநந்யார்ஹ ஶேஷபூதன் என்றதாயிற்று.

நம: சப்தார்த்தம்

மத்யமபதமான நமஸ்ஸு இரண்டு அக்ஷரமாய் இரண்டு பதமாய் நான்எனக்கு உரியன்அல்லேன்,என் கார்யத்திற்கு நான்நிரபேக்ஷஸ்வதந்த்ரனும் அல்லேன் என்கிறது. இங்கே பாகவத ஶேஷத்வம் பலிதம். இந் நமஸ்ஸுக்கு ஶரணுகதியிலும் தாத்பர்யம். அநிஷ்ட நிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிறதாகவுமாம். இப்படி நமஸ்ஸு தன்னிலே தத்த்வ ஹித புருஷார்த்த ப்ரகாஶநமுண்டு.

நாராயண சப்தார்த்தம்

நாராயண ஶப்தம் நாரங்களுக்கு அயநம் என்றும், நாரங்களை அயநமாகவுடையவன் என்றும், ஸர்வாதாரத்வாதி விஶிஷ்டனுன ஶ்ரிய:பதியைச் சொல்லுகிறது. இதில் சதுர்த்தீ தாதர்த்த்யத்தை முன்னிட்டுக் கொண்டு, அதன் பலமான கைங்கர்யத்தைக் காட்டுகிறது. இத்தால்

2 ‘ ஒழிவில்காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம் ’
என்றதாயிற்று.

---

1 பெரிய திருமொழி-8-9-3 2 திருவாய்-3-3-1

1 'अकारार्थायैव' (அகாரார்த்தாயைவ)
என்கிற ஶ்லோகத்தை இங்கே அநுஸந்திப்பது.

இப்படித் திருமந்த்ரத்தில் ஸங்க்ருஹீதங்களான தத்த்வ ஹித புருஷார்த்தங்களை விஶதமாக்குகிறது த்வயம். இதில்

த்வயத்தில் பூர்வகண்டார்த்தம் — பூர்வ கண்டம் ஒரு வாக்யமாய் உபாயபரம். உத்தர கண்டம் இரண்டு வாக்யமாய் உபேயபரம்,

இவை ஓரொன்றும் மூன்று பதமாயிருக்கும். ப்ரதம கண்டத்தில் ப்ரதம பதம் மூன்று பதம் கூட ஸமஸ்த பதமாயிருக்கும். இதில் ஸ்ரீமத் ஶப்தம் ஸர்வருக்கும் ஆஶ்ரயணீயையாய்

2 'அகலகில்லேன்'

என்கிறபடியே தன்னை ஆஶ்ரயித்திருக்கிற பெரிய பிராட்டியாரோடு பிரிவற்றவன் என்கிறது. நாராயண ஶப்தம்

2 'நிகரில் புகழாய்'

இத்யாதிகளிற் சொன்ன வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்யாதிகளையுடையவனை ஸர்வேஶ்வரனைச் சொல்லுகிறது. (ச)சரண ஶப்தம் ஶரண்யவிஷயத்தில்க்ருபோத்தம்பநாதிகளுக்காக தாஸபூதன் பற்றும் துறையான திருவடிகளைக் காட்டுகிறது. 'ஶரணம்' என்கிற பதம் திருவடிகளுடைய உபாய பாவத்தைச் சொல்லுகிறது. 'ப்ரபத்யே' என்கிற பதம் அகிஞ்சநாதிகாரி ஶரண்யன் திருவடிகளை உபாயமாகக கொண்டு மஹாவிஶ்வாஸாதிவிஶிஷ்ட பரந்யாஸம் பண்ணுகிறபடியை ப்ரகாஶிப்பிக்கிறது.

'ஸ்ரீமதே' என்கிறபதம் ப்ராபகனான நாராயணன் ப்ராப்யனைக் கொண்டு கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாம் போது பத்நீ விஶிஷ்டனாயிருக்கும்படியைக் காட்டுகிறது.

த்வயத்தில் உத்தரகண்டார்த்தம் — இங்குற்ற நாராயண ஶப்தம்ஸர்வ ப்ரகார விஶிஷ்டனைக் கொண்டு

நிரதிஶய போக்யனை ஸர்வஶேஷியை ப்ரதிபாதிக்கிறது. இதின்

---

1 115-ம் பக்கம் பார்க்க. 2 திருவாய்-6-10-10

சதுர்த்தியிலும் திருமந்த்ரத்திற்போலே கைங்கர்ய ப்ரார்த்தனை யைக் கண்டுகொள்ளுவது. இக்கைங்கர்யம் ஸர்வவிரோதி ரஹிதமானபடியை இந்நமஸ்ஸு கணிசிக்கிறது.

**த்வயத்தின் திரண்ட பொருள்**

ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளில் களையற்ற நித்ய கைங்கர்யம் பெறுகைக்கு ஸ்ரீமானான நாராயணன் திருவடிகள் இரண்டையும் ஶரணமாகப் பற்றுகிறேன் என்று இதில் திரண்ட பொருள்.

**சரமச்லோகபூர்வார்த்தவிளக்கம்**

இப்படித் திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் ப்ரகாஶித்த உபாயத்துக்கு அகிஞ்சநாதிகாரித்வ நிரபேக்ஷத்வாதிகளைக் காட்டிக் கொண்டு விதிமுகத்தாலே உபப்ரும்ஹணம் பண்ணுகிறது சரம ஶ்லோகம். இது தான் மூன்று வாக்யமாய்ப் பன்னிரண்டு பதமாயிருக்கும். இப்படி ரஹஸ்ய த்ரயம் உத்தரோத்தரம் பதங்கள் இரட்டிப்பாய் விஶதீகரணமாயிருக்கும். இஶ்ஶ்லோகத்தில் ப்ரதம வாக்யம் உபாயவிதாயகம். மத்யம வாக்யம் பலப்ரதிபாதகம். உத்தர வாக்யம் க்ருதக்ருத்யத்வாதி தத்பரம். 'ஸர்வ தர்மங்களையும் விட்டு' என்கிற இரண்டு பதங்களாலே

1'*நின்னிலங்குபாதமன்றி மற்றோர்பற்றிலேன் எம்ஈசனே*'

என்கிறபடியே அபிமத ஸித்திக்கு உபாயாந்தரம் அற்று இருக்கிற அதிகாரி விசேஷத்தையாதல், ப்ரபத்தியினுடைய தர்மாந்தர நைரபேக்ஷ்யாதிகளையாதல் சொல்லுகிறது. 'என்னை ஒருவனை' என்கிற இரண்டு பதங்களாலே ஸௌலப்யாதி குண விஶிஷ்டமாய் ப்ரதானோபாயத்வ நிரபேக்ஷத்வ ஸர்வபலப்ரதத்வாதி விஶிஷ்டமுமான ஸநாதந தர்மத்தைக் காட்டுகிறது. 'ஶரணமாகப் பற்று' என்கிற இரண்டு பதங்களாலே மஹாவிஶ்வாஸாதி விஶிஷ்ட பரந்யாஸத்தை விதிக்கிறது.

---

1 திருச்சந்த-90

'நான் உன்னை' என்கிற இரண்டு பதங்களாலே (ப)பரஸ்வீகாரம் பண்ணின ஸர்வஶக்தியையும், ந்யஸ்தபரனான சாதகவ்ருத்தியையும் சொல்லுகிறது.

**சரமச்லோகஉத்தரார்த்தவிளக்கம்**

'எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கக் கடவேன்' என்கிற இரண்டுபதங்களாலே கைங்கர்ய விரோதிகளை நிஶ்ஶேஷமாகக் கழிக்கும்படியைச் சொல்லுகிறது. 'ஶோகிக்க வேண்டாம்' என்கிற இரண்டு பதங்களாலே புகலற்றுத் தளும்பின பூர்வதஶையை விலக்கி,

1 '**निस्संशयः सुखमास्स्व**' (நிஸ்ஸம்ஶயஸ் ஸுகமாஸ்ஸ்வ) என்று அருளிச்செய்த உத்தர தஶையை உபலக்ஷிக்கிறது.

த்வயத்தில் பூர்வோத்தர கண்டங்களுக்கு இதில் பூர்வோத்தரார்த்தங்கள் சேர்த்தியாகின்றன.

குறள் வெண்பா.

*மூன்றில் ஒரு மூன்றும் மூவிரண்டும் முந்நான்கும்
தோன்றத் தொலையும் துயர்.

** **इति तत्त्वत्रयस्यैषा रहस्यत्रितयस्य च ।**
**पदवी वेङ्कटेशेन प्रत्यक्प्राची प्रदर्शिता ॥**

இதி தத்த்வத்ரயஸ்யைஷா ரஹஸ்யத்ரிதயஸ்ய ச |
பதவீ வேங்கடேஶேந ப்ரத்யக் ப்ராசீ ப்ரதர்ஶிதா ||

---

1 சரணாகதி கத்யம். ஸம்சயம் ஒன்றுமில்லாமல் ஸுகமாயிரு.

* ரஹஸ்யத்ரயத்தில் அத்விதீயமான மூன்று பதங்கள் அடங்கிய திருமந்த்ரமும், அன்றிக்கே ஒரு அர்த்தத்தை ப்ரதிபாதிக்கிற மூன்று பதங்களையுடைய திருமந்த்ரமும், ஆறு பதங்களையுடைய த்வயமும், பன்னிரண்டு பதங்களையுடைய சரம ச்லோகமும் அர்த்தத்துடன் மனதில் ப்ரகாசிக்கத் துக்கங்கள் நசித்துவிடும்.

** இந்த சித், அசித், ஈசுவரன் என்கிற மூன்று தத்த்வங்களினுடையவும், திருமந்த்ரம், த்வயம், சரம ச்லோகம், என்கிற மூன்று ரஹஸ்யங்களினுடையவும் கிழக்கு மேற்காக இருக்கிற, அதாவது ப்ரத்யக் என்று சொல்லப்படும் ஜீவாத்மாவை அடைவதற்குக் காரணமாயிருக்கிறப்ராசீநமார்க்கமானதுவேங்கடேசன் என்கிற திருநாமமுடைய ஆசார்யனால் இந்த ப்ரகாரம் காட்டப்பட்டது. இங்கு 'வேங்கடேசேந' என்னும் பதம் இந்த க்ரந்தத்திற்கு வக்தா தாமல்லர், ப்ரதமாசார்

1 श्रीरङ्गद्विरदवृषाद्रि पूर्वकेषु स्थानेषु स्थिरविभवा भवत्सपर्या ।
आकल्पं वरद विधूतवैरिपक्षा भूयस्या भवदनुकम्पयैव भूयात् ॥

ஸ்ரீரங்க த்விரத வ்ருஷாத்ரி பூர்வகேஷு
ஸ்த்தாநேஷு ஸ்த்திரவிபவா பவத் ஸபர்யா |
ஆகல்பம் வரத விதூத வைரிபக்ஷா
பூயஸ்யா பவதநுகம்பயைவ பூயாத் ||

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्री र ह स्य प द वी सं पू र्णा ॥
॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

இப்படி கவிதார்க்கிகஸிம்ஹமும் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத்வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளுள்
ஸ்ரீ ரஹஸ்ய பதவீ முற்றிற்று.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

---

யனை பகவானே என்கிற அர்த்தமும் த்வனிக்கிறது. ஒரு ஊரிலி ருந்து பல இடங்களுக்குச் செல்லும் வழியைச் சுட்டிக் காட்டுகிருப் போல இங்கும் திங் மாத்திரம் காட்டப்பட்டது என்று கருத்து. 'ப்ரு தக் ப்ராசீ' என்று பாடாந்தரம். அப்பொழுது ப்ராசீநமான இந்த வழி தனித்தனியே காட்டப்பட்டது என்று அர்த்தம்;

1 பக்தர்களுக்கு அபீஷ்டங்களைக் கொடுக்கும் பகவானே! ஸ்ரீ ரங்கம், ஹஸ்திகிரி, வேங்கடாசலம் இவை முதலான உகந்தருளின திவ்யதேசங்களில் உம்முடைய திருவாராதனம் அதிகமான உம்முடை யதான க்ருபையினுல் கல்ப காலம் வரையிலும் போக்கடிக்கப்பட்டசத் ருக்களினுடைய பக்ஷத்தையுடையதாகவும் அழிவில்லாத ஐச்வர்யத்து டன் கூடியதாகவும் இருக்கவேண்டும்.

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்





சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்
பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

## ஐந்தாவது ரஹஸ்யம்

# ஸ்ரீ தத்த்வ நவநீதம்

[ அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் நாலாவது.
இது காஞ்சீபுரத்தில் அருளிச்செய்யப்பட்டது. ]

[போக்த்ராதி விபாகம்—போக்த்ரு நிரூபணம்—போக்ய நிரூபணம்—த்ரிகுண நிரூபணம்—கால நிரூபணம்—சுத்த ஸத்த்வ நிரூபணம்—ப்ரேரித்ருநிரூபணம்—ப்ரஹ்ம த்ரைவித்ய நிரூபணம். ]

நேரிசை வெண்பா.

* உயிரும் உடலும் உடலாக ஓங்கித்*
தயிர் வெண்ணெய் தாரணியோடுண்டான்*—பயிரில்
களைபோல் அசுரரைக் காய்ந்தான்தன் கையில்
வளைபோல் * எம் ஆசிரியர் வாக்கு. 5

* நம் பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீஸூக்தி,ஜீவாத்மாக்களும் அவைகளின் சரீரங்களும் தனக்குச் சரீரமாயிருக்கும்படி தான் சேஷியாய் ஸர்வோத்க்ருஷ்டனாய் நின்று, திருவாய்ப்பாடியில் தயிர் வெண்ணெய் முதலியவைகளை இந்தப் பூமியுடன், (இது மற்ற எல்லா லோகங்களுக்கும் உபலக்ஷணம்), அமுதுசெய்தவனாய், பயிரில் களையைப் போலே அஸுரர்களைக் கொன்றவனாகிய பகவானுடைய திருக்கையில் கடகத் (சங்கத்)தைப் போலே (அவற்றைத் தரிப்பவர்களுக்கும் பார்ப்பவர்களுக்கும் த்ருப்தியை உண்டுபண்ணுகிறுப்போலே இருக்கிறது,

ஸம்ஸ்க்ருத த்ராவிடஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களில் சொல்லுகிற தத்த்வஜ்ஞாநபூர்வகமாக மோக்ஷோபாயா நுஷ்ட்டாநம் வேணடு(மா)கை யாலே, முமுக்ஷுவுக்கு விஶேஷித்தறியவேண்டும் சித் அசித் ஈஶ்வர தத்த்வங்களை போக்தா என்றும், போக்யம் என்றும், ப்ரேரிதா என்றும் உபநிஷத்துச் சொல்லிற்று.

**போக்த்ராதிவிபாகம்**

போக்தாவாகையாவது—போகத்தையுடையனுகை. இது ஸர்வேஶ்வரனுக்கும் பொதுவாயிருக்க, அவனை ப்ரேரிதா என்று பிரியச் சொல்லுகையாலே ஸர்வப்ரேரகத்வ மின்றிக்கே பராதீந போகனுன ஜீவனை இங்கு போக்தா என்கிறது.

1 '**अधिष्ठानं तथा कर्ता**' (அதிஷ்ட்டாநம் ததா கர்த்தா) என்கிற இடத்தில் கர்த்ருஶப்தமும் பராதீநகர்த்தாவைச் சொல்லுகிறது. சித் அசித் ஈஶ்வரர்கள் என்னும்போது சித் ஶப்தமும் பராதீந சேதந விஷயம்.

2 '**इच्छात एव तव विश्वपदार्थ सत्ता**' (இச்சாத ஏவ தவ விஶ்வ பதார்த்த ஸத்தா)

இத்யாதிகளிற்படியே ஜீவனுடைய ஜ்ஞாநாநந்த ஸ்வரூபாதிகளும் பராதீநங்களாயிறே இருப்பது. இஜ்ஜீவ வர்க்கத்தில் பீஜாங்குர க்ரமத்தாலே அநாதியான அபராத ப்ரவாஹமடியாக முடிவில் பெரும் பாழான சிறைக்கூடத்திலே முப்பிரியான ஸத்த்வாதி குண்ங்களாலே கட்டுண்டு கழலவிரகற்றுக் கிடக்கிறவர்கள் பத்தர்கள். இவர்களிலே மோக்ஷஶாஸ்த்ரங்களிற் சொல்லுகிறதொரு விரகாலே

---

1 கீதை - 18-14 'கரணம் ச ப்ருதக் விதம் | விவிதா ச ப்ருதக் சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம்' என்று மேல். (மனிதன் சரீரம் வாக்கு மனது இவைகளினுல் எந்தக் கர்மத்தைச் செய்கிருனே, அந்தக் கர்மத்திற்கு) சரீரம், அப்படியே ஜீவாத்மா (வெவ்வேருகஇருக்கிற இந்த்ரியங்கள், அநேக விதமாயிருக்கிற வேருன வ்யாபாரத்தையுடைய ப்ராண வாயு, இந்த விஷயத்தில் ஐந்தாவதாகிய பரமாத்மா, இவை ஐந்தும் காரணங்கள்.)

2 வைகுண்ட ஸ்தவம்—36. 'நித்யம் ப்ரியாஸ்தவ து கேசந தேஹி நித்யா:' என்று மேல். உம்முடைய ஸங்கல்பத்திஞலேயே எல்லா வஸ்துக்களினுடைய ஸ்வரூபம் உண்டாகிறது. (எவைசில உமக்கு எப்பொழுதும் இஷ்டங்களோ அவை நித்யங்கள் என்னப்படுகின்றன.)

1 'मोक्षयिष्यामि' (மோக்ஷயிஷ்யாமி) என்னும்படி முனிவு தீர்ந்து நித்யரோடொக்க முகப்பே கூவிப் பணிகொள்ளப் பெற்றவர்கள் முகதர்கள். நித்ய பகவதனுபவத்தாலே நித்ய கைங்கர்யபரரான ஶேஷஶேஷாஶநாதிகள் நித்யர்கள்.

போக்யம் என்பது அநுபாவ்யம் என்றபடி. இது ஜீவேஶ்வரர்களுக்கும் பொதுவாகையாலே பூர்வாபரபதங்களிற் சொன்ன போக்த்ருத்வமும் நியந்த்ருத்வமும் இல்லாத விஷயத்தை இங்கு போக்யம் என்கிறது. இத்தை

போக்யநிரூபணம்

அசித்து என்றது ஜ்ஞாநரஹிதம் என்றபடி. அசேதநத்வம் கேவல குணங்களுக்கும் தர்மபூதஜ்ஞாநத்திற்கும் பொதுவாகிலும் இங்கு த்ரிவித அசேதனம் என்று பூர்வர்கள் நிரூபித்தவை த்ரிகுணமும் காலமும் ஶுத்தஸத்த்வமும் என்கிற த்ரவ்ய விஶேஷங்கள்.

த்ரிகுணமாவது—பரிமிதஸுகத்திற்கும் துக்கத்திற்கும்மோஹத்திற்கும் விஶேஷ காரணங்களான ஸத்த்வ ரஜஸ் தமஸ்ஸுக்களாகிற குணங்களுக்கு ஆஶ்ரயமானத்ரவ்யம். இது கேவல ப்ரக்ருதி என்றும், ப்ரக்ருதி விக்ருதி என்றும், கேவல விக்ருதி என்றும் மூன்று வகையாய் இருபத்து நாலு தத்த்வ ரூபமாயிருக்கும். இவற்றில் ஸ்வபாவத்தாலும் பஞ்சீகரணுதிகளாலும் தேஶ கால பேதத்தாலே உண்டாம் விக்ருதிகளுக்கு எல்லையில்லை.

த்ரிகுண நிருபணம்

காலமாவது—ஜடத்வ விபுத்வங்களையுடைத்தாய் பாலவ்ருத்தாதி வ்யவஸ்த்தைகளுக்கு விஶேஷ காரணமானத்ரவ்யம். இது எப்போதும் அவ்வோவஸ்துக்களுடைய பூத பவிஷ்யத் வர்த்தமாந வ்யபதேஶங்களுக்கும் தன் அவச்சேதங்களாலே நியாமகமாயிருக்கும். இதற்கு ஸத்த்வாதிகுண த்ரயமின்றிக்கே இருக்க உபாதி விஶேஷங்களாலே ஶீத காலம் உஷ்ண காலம் என்னுமா போலே ஸாத்த்விக ராஜஸ தாமஸாதி

காலநிருபணம்

1 கீதை - 18-66. (எல்லாப் பாபங்களிலிருந்தும் உன்னை) விடுவிக்கிறேன்.

கால விபாகம் உண்டாகிறது. ப்ரஹ்மதிவஸம் முதலாக மனுஷ்ய திவஸபர்யந்தமாக எங்கும் இது கண்டுகொள்வது. ஶுத்தஸத்த்வத்தில் இப்படிப்பட்ட கால விபாகமின்றிக்கே பூர்வாபராதி விபாகமாத்ரமேயாயிருக்கும்.

ஶுத்த ஸத்த்வமாவது—ரஜஸ் தமஸ்ஸுக்களின்றிக்கே ப்ராக்ருத ஸத்த்வ விலக்ஷண ஸத்த்வத்துக்கு ஆஶ்ரயமான த்ரவ்யம். இது ஸபரிகரனுன ஶ்ரிய:பதிக்குப் போக்ய போகோபகரண போகஸ்த்தாந ரூபமாய்க் கொண்டு அநந்தாஶ(சா)ரயமாய் ஹிரண்யகர்ப்பாதி ஸ்த்தாநங்களெல்லாம் நரகமாய்த் தோற்றும்படியான ஆநுகூல்ய ப்ரகர்ஷத்தாலே பரமபதஶப்த வாச்யமாயிருக்கும்.

**சுத்தஸத்த்வ நிரூபணம்**

இப்படி மூன்றுவகையான சேதநாசேதநங்களுடைய ஸ்வரூப ஸ்த்திதி ப்ரவ்ருத்திகள் மூன்றும் தானிட்ட வழக்காம்படி நிற்கிற ஶ்ரிய:பதியை ப்ரேரிதா என்கிறது. இவன் மூன்று ஸம்பந்த நியமத்தாலே ஸர்வ ஶரீரியாய், மூன்று வ்யாபார விஶேஷங்களாலே ஸர்வ கார்யங்களுக்கும் ஸர்வ காரணமாய், மூன்று காலத்திலும் ஏகரூப ஸ்வரூப ரூபங்களையுடையவனுய், மூன்று ஸ்த்தாநத்திலே நித்ய வாஸத்தையுடையவனுய், மூன்று வகையான அர்ச்சாவதாரத்தை யுடையவனுய், மூன்று யுகத்திலே விஶேஷித்து ப்ரகாஶிக்குமவனுய், மூன்று குண யுகத்தாலும் த்ரியுகனுய், மூன்று வ்யூஹங்களாலே மூவிரண்டு ப்ரகாரங்களைப் பண்ணுமவனுய், மூன்று புருஷார்த்தங்களுக்கும் மூலமாய், மூன்று ப்ரமாணங்களாலும் ப்ரதிஷேதமில்லாதவனுய், மூன்று மாத்திரையான ஒற்றை எழுத்திற்கு முக்க்யார்த்தமாய், மூன்று ரஹஸ்யங்களில் ஶிக்ஷையாலே விஶேஷித்தறியப்படும்.

**ப்ரேரித்ருநிரூபணம்**

ப்ரஹ்மத்தற்கு உபநிஷத்துக்களிற் சொன்ன த்ரைவித்யம் போக்த்ரு(த்வ) விஶிஷ்ட ரூபத்தாலும், போக்ய(த்வ)விஶிஷ்ட ரூபத்தாலும், ப்ரேரகத்வவிஶிஷ்ட ரூபத்தாலும் உபபந்நம். தன்னையும் ப்ரேரிதாவையும் பிரிய

**ப்ரஹ்ம த்ரைவித்ய நிரூபணம்**

அறிந்து பற்றினவனுக்கு அவன் ப்ரஸாதத்தாலே மோக்ஷம்என்று இங்கே ஓதுகிறது. இப்படியே பஞ்ச தஶாத்யாயாதிகளிற்படியே பராவரதத்த்வ விவேகம் பிறந்தால்

1 'ध्येयो नारायण: सदा (த்யேயோ நாராயணஸ்ஸதா)என்றும்,

2' स्मर्तव्य: सततं विष्णु: (ஸ்மர்த்தவ்ய:ஸததம்விஷ்ணு:)என்றும்,

3 ' துஞ்சும்போதும் விடாது தொடர் '

என்றும் சொல்லுகிற ஸதாநுஸந்தாநம் கருத்ய ஶேஷமுடையவனுக்கு உபாயோபகாரவிதி(தை)யாலேவந்த போகம். க்ருதக்ருத்யனுக்கும் கைங்கர்யோபகார விதி(தை)யாலே வந்த போகம். போக்யனாய் நித்ய ஸ்ரீயான ஶேஷி ஸமாதிக தரித்ரனானாற்போலே போகமும் நிஸ்ஸமாப்யதிகமாம்.

கட்டளைக் கலித்துறை

* அலையற்ற ஆரமுதக் கடல் அக்கடலுண்ட முகில் *
விலையற்ற நன்மணிவெற்பு வெயில் நிலவோங்குபகல்*
துலையொத்தன என்பர் தூய்மறைசூடும் துழாய்முடியாற்கு*
இலையொத்தன அவன் பாதம் பணிந்தவர்க்கு எண்ணுதற்கே. 6

** सत्संप्रदायदध्न: समुद्धृतं वेङ्कटेशेन ।
तत्त्वनवनीतमेतत् तनुते नवनीत नर्तकप्रीतिम् ॥

1 நரஸிம்ஹ புராணம்—18-34 நாராயணன் எப்பொழுதும் த்யானிக்கத்தக்கவன், 2 பாரதம்— விஷ்ணு எப்பொழுதும் ஸ்மரிக்கத்தக்கவன். 3 திருவாய்—1-10-4

* அலையில்லாத பூர்ணமான அம்ருதத்தையுடைய ஸமுத்திரம், அந்த அம்ருத ஸமுத்திரத்தை முழுதும் குடித்த மேகம், விலையில்லாததான உத்தம ரத்நமயமான மலை, வெயிலினாலும் நிலவினாலும் ப்ரகாசிக்கும் மத்தியான்னம் இவைகள்பரிசுத்தமான வேதங்களினாலே சிரஸ்ஸினால் சூடப்படுகிற துழாய் மாலையைக்கிரீடத்தில் தரித்துக்கொண்டிருக்கிற பகவானுக்குஸமமாயிருந்தன, அன்றிக்கே தூக்கிப் பார்ப்பதில் அதாவது நிறையில் ஸத்ருச்யமாயிருந்தன என்று (பூர்வாசார்யர்கள்) சொல்லுவர்கள், அவனுடைய திருவடிகளை ஆச்ரயித்த பாகவதர்களுக்கு இவைகள் ஸமானம் என எண்ணுதற்கே ஸத்ருசமான வஸ்துக்கள் இல்லை

** ஸத்ஸம்ப்ரதாயத்தில் உபதேச க்ரமமாக வந்த அர்த்தங்களாகிற தயிரிலிருந்து வேங்கடேசன் என்கிற திருநாமத்தையுடையஆசார்

ஸத் ஸம்ப்ரதாய தத்நஸ் ஸமுத்த்ருதம் வேங்கடேஶேந ।
தத்த்வநவநீதமேதத் தநுதே நவநீதநர்த்தகப்ரீதிம் ॥

* वरद विरचय त्वं वारिताशेषदोषां पुनरुपचित पुण्यां भूषितां पुण्यकोट्या ।
सितमुदितमनोभिः तावकैः नित्यसेव्यां हतरिपुजनयोगां हस्तिधाम्नः समृद्धिम् ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेंकटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्री तत्त्वनवनीतं संपूर्णम् ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

வரத விரசய த்வம் வாரிதாஶேஷதோஷாம்
புநருபசித புண்யாம் பூஷிதாம் புண்யகோட்யா ।
ஸிதமுதித மநோபி: தாவகை: நித்ய ஸேவ்யாம்
ஹதரிபு ஜநயோகாம் ஹஸ்திதாம்நஸ் ஸம்ருத்திம் ॥

இப்படி கவிதார்க்கிக ஸிம்ஹமும் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத்வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளுள்
ஸ்ரீ தத்த்வ நவநீதம் முற்றிற்று.

**சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்**

---

யனுல் எடுக்கப்பட்ட இந்தத் தத்த்வ நவநீதம் என்கிற க்ரந்தமானது நவநீதத்திற்காக (க் கோபர்களுடைய க்ருஹங்களில்) நர்த்தநம்பண்ணின பகவானுக்கு ப்ரீதியைச் செய்கிறது.

* ஸத்யவ்ரத க்ஷேத்ரத்தில் அர்ச்சாரூபம் கொண்டிருக்கும் வரதனே ! போக்கடிக்கப்பட்ட எல்லாத் தோஷங்களையுடையதாயும், மேன்மேலும் வ்ருத்திசெய்யப்பட்ட புண்யத்தையுடையதாயும், புண்யகோடி விமானத்தினுல் அலங்கரிக்கப்பட்டதாயும், பரிசுத்தமாயும், ஸந்தோஷத்தோடு கூடியதாயுமிருக்கிறமனத்தையுடைய உம்முடைய பக்தர்களினுல் எப்பொழுதும் ஸேவிக்கத் தகுந்ததாயுமிருக்கிற ஹஸ்திகிரியினுடைய ஸம்பத்தைப் போக்கடிக்கப்பட்ட சத்ரு ஜனங்களுடைய ஸம்பந்தத்தையுடையதாக நீர் செய்துகொள்ளும்,

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

**ஸீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்**

  

சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்

பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# ஆறுவது ரஹஸ்யம்

# ஸ்ரீ ரஹஸ்ய நவநீதம்

[அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் ஐந்தாவது.
இது திருவேங்கடத்தில் அருளிச்செய்யப்பட்டது. ]

[ திருமந்த்ரத்தில்—ஸ்வரூப ஸமர்ப்பணம், பர ஸமர்ப்பணம், பல ஸமர்ப்பணம் என மூவர்த்தங்களும், த்வயத்தில்—உபாய விசேஷம் புருஷார்த்த விசேஷம், விரோதி நிவ்ருத்தி விசேஷம் என மூவர்த்தங்களும், சரம ச்லோகத்தில்—அதிகாரி க்ருத்யம் சரண்ய க்ருத்யம், க்ருதக்ருத்யனுடைய உத்தர க்ருத்யம் என மூவர்த்தங்களுமாக ஒன்பது அர்த்தங்கள். ]

நேரிசை வெண்பா.

* உத்தி திகழும் உரை மூன்றில் மும்மூன்றும்*
சித்த முணரத் தெளிவித்தார்*—முத்திதரும்
மூல மறையின் முடிசேர் முகில்வண்ணர்*
சீலம் அறிவார் சிலர். 7

ஸகல வேத ஸாரமான திருமந்த்ரத்தில் மூன்று வாக்யங்களில் அடைவே ஸ்வரூப ஸமர்ப்பணமும் ப(ஃ)ரஸமர்ப்பணமும் பல ஸமர்ப்பணமும் அநுஸந்தேயம்.

இங்கு ஸ்வரூப ஸமர்ப்பணமாவது—

---

* ஸகல சாஸ்த்ரங்களுக்கும், அன்றிக்கே ஸகல புருஷார்த்தங்களுக்கும், முதற்காரணமான வேதத்தின் சிரோபாகமான வேதாந்தங்களில் ப்ரதிபாத்யனுய்ச் சேர்ந்திருக்கிற மோக்ஷத்தைக் கொடுக்கிற

1 ‘ सर्वोपाधिविनिर्मुक्तं क्षेत्रज्ञं ब्रह्मणि न्यसेत् ’
( ஸர்வோபாதி விநிர்முக்தம் க்ஷேத்ரஜ்ஞம் ப்ரஹ்மணி ந்யஸேத் )
என்கிறபடியே வபுராதிகளில் வேறுபட்டு ஜ்ஞாநாநந்த ஸ்வரூப னுய் ஜ்ஞாநாநந்த குணகனுய் ஸ்வயம்ப்ரகாஶனுய் ஸ்வஸ்மை பாஸமாநனுய் அணுவான நான், ஸர்வ ஜகதேககாரணபூதனுய், ஸர்வ ரக்ஷகனுய், ஸர்வஶேஷியான ஶ்ரிய:பதியைப்பற்ற

2 ‘ நானும் உனக்குப் பழவடியேன் ’

3 ‘ கண்ணபுரம் ஒன்று உடையானுக்கு அடியேன் ஒருவர்க்கு உரியேனே ’

என்கிறபடியே நித்ய நிருபாதிக ஶேஷபூதன் என்று அநுஸந் திக்கை. இஸ்ஸம்பந்தாநுஸந்தாநம் அர்த்தபஞ்சகாநுஸந்தாநத் திற்கு அஞ்சுருவாணியாய் நிற்கும்.

ப(भ)ர ஸமர்ப்பணமாவது—

4 ‘ आत्मात्मीय भरन्यासो ह्यात्मनिक्षेप उच्यते ’
( ஆத்மாத்மீயபரந்யாஸோ ஹ்யாத்ம நிக்ஷேப உச்யதே )
என்கிறபடியே நித்ய ஶேஷபூதனுமாய் நித்ய பரதந்த்ரனுமாய் அபிமதஸித்திக்குப் புகல் ஒன்றில்லா அடியேனை இனி ஒரு கர்த் தவ்யத்திலே மூட்டாதே அடைக்கலமாகக்கொண்டு ரக்ஷித்தருள வேண்டும் என்கை. பல ஸமர்ப்பணமாவது—

5 ‘ तेन संरक्ष्यमाणस्य फले स्वाम्यवियुक्तता ’

---

மேகம் போன்ற வர்ணத்தையுடைய பகவானுடைய ஸ்வபாவத்தை, அதாவது அவனுடைய ஸௌசீல்ய குணத்தை, அறிந்த ஆசார்யர்கள் சப்தங்களுக்குள் ச்லாக்யமான மூன்று ரஹஸ்யங்களில் ஒவ்வொன்றி லும் மூன்று அர்த்தங்களாக ஒன்பது அர்த்தங்களை மனது நன்ருகத் தெரிந்து கொள்ளும்படி ப்ரகாசம் செய்தார்கள்.

1. தக்ஷ ஸ்ம்ருதி. (சரீரம், இந்த்ரியங்கள், ஸூக்ஷ்ம ப்ரக்ருதி அவித்யை முதலிய) எல்லா உபாதிகளினுலும் விடப்பட்ட ஜீவாத்ம ஸ்வரூபத்தைபரமாத்மாவிடத்தில் ஸமர்ப்பிக்கவேண்டும்.

2. பெரியாழ்வார் திருமொழி—1-1-11. 3 பெரிய திரு—8-9-3

4. லக்ஷ்மீ தந்த்ரம்—17-79. தன்னுடையவும், தன்னைச் சேர்ந்த (புத்ரன், ப்ரேஷ்யன் முதலிய)வர்களுடையவும் பரத்தை ஸமர்ப்பிப்பது ஆத்ம நிக்ஷேபம் என்று சொல்லப்படுகிறது.

5. லக்ஷ்மீதந்த்ரம்—17-73 அந்தப்பகவானுல் ரக்ஷிக்கப்படுகிறதனக்கு ரக்ஷிக்கப்படுவதினுல் உண்டாகிய ப்ரயோஜநத்தில் யஜமானனு

(தேந ஸம்ரக்ஷ்யமாணஸ்ய பலே ஸ்வாம்யவியுக்ததா )
இத்யாதிகளிற்படியே களையற்ற ஸூரிதுல்ய கைங்கர்யத்திற்கு ஸ்வரூப யோக்யனை ஆரா அன்பில் அடியேனுக்கு உபாதி அடியாக வந்த அயோக்யதைகளையெல்லாம் கழித்து வழுவிலா அடிமைகொண்டு வாழ்வித்தருளவேண்டும் என்கை. இப்படி **சேஷசேஷி** பாவத்தாலே இருவரையும் உறவாக்கி, **சேஷ சேஷி** க்ருத்யத்தாலே இருவரையும் வணக்கி, **சேஷ சேஷி** பலத்தாலே இருவரையும் ஏகரஸமாக்குகிறது திருமந்த்ரம்.

இதிலே **சா**ரீரக க்ரமத்தாலே தோற்றின பர தத்த்வத்தை யும், பரம ஹிதத்தையும், பரம புருஷார்த்தத்தையும் ஸ்வரூபாநு ரூப வி**சே**ஷண வி**சி**ஷ்டமாக வெளியிடுகிற **ச**ரணுகதி மந்த் ரத்தில் மூன்று வாக்யங்களில் அடைவே உபாய வி**சே**ஷமும், புருஷார்த்த வி**சே**ஷமும், விரோதிநிவ்ருத்தி வி**சே**ஷமும் ஸித்த ஸாத்ய ரூபத்தாலே இரு வகையாகச் சேர்ந்து நிற்கும்படி அநுஸந்தேயம். எங்ஙனேஎன்னில்:— ஸ்ரீமானுன நாராயணன் அபிமத ஸித்திக்கு வ்யாஜமாத்ர ஸாபேக்ஷமுமாய் தத்ப்ரவர்த் தகமுமாய் வ்யவதாநமற்று ப்ரதாநமுமான ஸித்தோபாயம்.

1 ‘अनन्य साध्ये’ ( அநந்ய ஸாத்யே )

2 ‘அகலகில்லேன்’

இத்யாதிகளிற் சொல்லுகிற **ச**ரணுகதி அவனுடைய வ**சீ**கர ணமான ஸாத்யோபாயம்.

புருஷார்த்த வி**சே**ஷமாவது—

---

யிருக்கும் தன்மை இல்லாமல் இருப்பதும்.‘கேசவார்ப்பண பர்யந்தா ஹ்யாத்ம நிக்ஷேப உச்யதே’ என்று மேல். ‘பகவானிடத்தில் அந்த யஜமாநனுயிருக்கும் தன்மையை ஸமர்ப்பிப்பது வரையில் தனக்கு யஜமாநனுயிருக்கும் தன்மை இல்லாமையே ஆத்மநிக்ஷேபம் என்று சொல்லப்படுகிறது என்று அர்த்தம்.

1. பரதமுனி வாக்யம். ‘ஸ்வாபீஷ்டே மஹா விச்வாஸபூர்வகம் | ததேகோபாயதா யாச்நா ப்ரபத்தி: சரணுகதி:’ என்று மேல். (தன்னுடைய இஷ்ட பலமானது) வேறொரு உபாயத்தினுலும் ஸாதிக்க முடியாமல் இருக்கும்பொழுது (மஹா விச்வாஸத்தை முன்னிட்டுக் கொண்டு அவன் ஒருவனே உபாயமாகவேண்டும் என்று யாசிப்பது ப்ரபத்தி, அது தான் சரணுகதி).

2. திருவாய்—6-10-10

1 'தனக்கேயாக எனைக்கொள்ளும் ஈதே'
என்கிறபடியே தன்னோடும் தான் பண்ணுகிற கைங்கர்யத்தோடும் துவக்கற்று,

2 'கண்டு கேட்டு உற்று,
இத்யாதிகளிற்படியே நிரதிஶயபோக்யமான நித்ய ஸித்த ப்ராப்யமும் அதனுடையபரிபூர்ணநுபவ பரீவாஹமாய்க்கொண்டு ஸாத்யமான ஶேஷியுகந்த கைங்கர்யமும்.

விரோதி நிவ்ருத்தி விஶேஷமாவது—

1 'தனக்கேயாக எனைக்கொள்ளும் ஈதே'
என்கிறபடியே [தன்னோடும் தான் பண்ணுகிற கைங்கர்யத்தோடும்துவக்கற்று]ஸர்வ அவித்யாநிவ்ருத்திபிறக்கை. இப்படிப்பட்ட ஸித்த ஸாத்யங்களான புருஷார்த்த ஹேதுக்களையும், ஸித்த ஸாத்யங்களான புருஷார்த்தங்களையும் சேர்த்து ஸாத்ய புருஷார்த்தத்தில் இருவகையான களையற்ற படியையும் காட்டுகிறது த்வயம். இதில் பூர்வோத்தர கண்டங்களுக்கு

4 'स भ्रातुश्चरणौ गाढं' (ஸ ப்ராதுஶ்சரணௌ காடம்)

5 'भवांस्तु सह वैदेह्या' (பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா)

என்கிற இரண்டு ஶ்லோகங்களும் சேர்த்தியாகிறன. இவற்றில் தோற்றின பரம ஹிதத்தினுடைய அதிகார நைரபேக்ஷ்ய ஸ்வரூப ப்ரபாவங்களையும் வெளியிட்டுக்கொண்டு உபப்ரும்ஹணமான சரம ஶ்லோகத்தில் மூன்று வாக்யங்களில் அடைவே அதிகாரி

---

1. திருவாய்—2-9-4 2. திருவாய்—4-9-10

3. ராமாயணம்—அயோ....31-21. 'நிபீட்ய ரகுநந்தந:, ஸீதாம் உவாசாதியசா: ராகவம்சமஹாவ்ரதம்(ரகுவம்சத்திற்கு ஆநந்தத்தைக் கொடுக்கும் இளையபெருமாள் ஜ்யேஷ்ட ப்ராதாவாகிய ராமனுடைய திருவடிகளைக் கெட்டியாகப்பிடித்துக்கொண்டு ஸீதையையும் ராமனையும் குறித்து சொன்னார்). அதாவது பெருமாளும் பிராட்டியும் சேர்ந்திருந்த ஸமயத்தில் ப்ரார்த்தித்தார் என்பதினால் ஸ்ரீமத் என்னும் பதத்தின் அர்த்தமும், 'ராகவம்ச மஹாவ்ரதம்' என்று சரணாகதர்களைக் காப்பாற்றுகிற பெரிய வ்ரதத்தையுடையவன் என்பதினால் நாராயண சப்தத்தின் அர்த்தமும், சரணௌ என்று சரணசப்தமும் இருப்பதினாலே இந்த சுலோகம் த்வயத்தின் பூர்வகண்டத்துடன் சேர்த்தியாகிறது என்று கருத்து.

4 ராமாயணம்—அயோ—31-27. தேவரீர் ஸீதையோடுகூட, 'கிரிஸாநுஷு ரம்ஸ்யதே | அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதச் ச தே' என்று மேல். மலையின் தாழ்வரைகளில் விளையாடப் போகிறீர்.விழித்துக்கொண்டும் தூங்கிக்கொண்டும் இருக்கிறபோது தேவரீருக்கு எல்லா விதக் கைங்கர்யத்தையும் நான் செய்யப்போகி

க்ருத்யமும், ஶரண்யக்ருத்யமும், க்ருத க்ருத்யனுடைய உத்தர க்ருத்யமும் அநுஸந்தேயம்.

அதிகாரி க்ருத்யமாவது—

1 ‘ மேம்பொருள் ’

இத்யாதிகளிற்படியே விவேகாதி யுக்தனாய்க்கொண்டு,

2 ‘ விடைக்குலங்கள் ’

என்கிற பாட்டின்படியே ஸநாதந தர்மமான ஸர்வலோக ஶரண்யனுக்கு விண்ணப்பம் செய்கை.

ஶரண்ய க்ருத்யமாவது—

3 ‘ தமர்கள் கூட்ட வல்வினையை நாசம் செய்யும் சதுமூர்த்தி ’

என்கிறபடியே ஶரணாகதி விரோதிகளையெல்லாம் கழிக்கைக்கு

---

றேன், அதாவது செய்யவேண்டும் என்று கருத்து. ‘ ஸஹ வைதேஹ்யா ’ என்பதினால் ‘ஸ்ரீமதே’ என்பதின் அர்த்தமும், ‘ ஜாக்ரத:’ இத்யாதியினால் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸர்வவித கைங்கர்யங்கள் கூறப்படுகிறபடியினால் சதுர்த்தியின் அர்த்தமும், ‘ பவாம்ஸ்து’ என்று நாராயண சப்தத்தின் அர்த்தமும் விவரிக்கப் பட்டபடியினால் இந்த சுலோகம் த்வயத்தின் உத்தர கண்டத்துக்குச் சேர்த்தியாகிறது என்று கருத்து.

1. திருமாலை—38. ‘ போகவிட்டு மெய்ம்மையை மிகஉணர்ந்து ’ என்று மேல். வெளியிலே இருக்கும்படியான வஸ்துக்கள், அன்றிக்கே போக்யமாக அநுபவிக்கப்படும்வஸ்துக்கள், இவைகளை அஸ்த்திரத்வம் முதலிய தோஷங்களுடன் கூடியவை என்று பரித்யஜித்து மெய்யான ஜீவாத்மாவின் ஸ்வபாவத்தை உயர்ந்த வஸ்துவாக உணர்ந்து என்று அர்த்தம்.

2. திருச்சந்த—92. ‘ ஏழடர்த்து வென்றி வேற்கண் மாதரார் கடிக் கலந்த தோள் புணர்ந்த காலி! ஆய ! வேலை நீர்ப் படைத்து அடைத்து அதில் கிடந்து முன் கடைந்து நின் தனக்கு அடைக்கலம் புகுந்த என்னை அஞ்சல் என்னவேண்டுமே’ என்றுமேல். வ்ருஷபங்கள் ஏழைச் செருக்கடக்கி ஜயம் பொருந்திய வேல்போல் இருக்கிற கண்களையுடைய லக்ஷ்மீ, நப்பின்னைப்பிராட்டி முதலிய பத்நிகளுடைய வாஸனையோடுகூடிய தோள்களை ஸம்ச்லேஷித்த பசுக்களை மேய்க்கும் இடையனாய் அவதரித்த ஸ்ரீ க்ருஷ்ணனே ! தேவரீருக்கு அடைக்கலம் புகுந்த என்னை பயப்படாதே என்னவேண்டும் என்று ப்ரார்த்தித்தபடி. பிராட்டியை புருஷகாரமாகக்கொண்டும் பகவானுடைய ஸௌலப்யாதி குணங்களை முன்னிட்டுக்கொண்டும் சரணம் அடையவேண்டும என்று கருத்து. 3 திருவாய்—8-10-9

ஸர்வஶேஷியான தன்னைத் தட்டுமாற்றித் தாழ நின்று, ஏற்றின சுமையெல்லாம் ஏறிட்டுக்கொண்டு இவனைத் தன்னளவாக உயர எடுக்கை.

உத்தரக்ருத்யமாவது—

1 ‘அத்தனாகி அன்னையாகி’

என்கிற பாட்டின்படியே மநஸ்ஸைத் தேற்றி,

2 ‘சிற்றம் சிறுகாலே’

என்கிற பாட்டின்படியே ஸர்வ ப்ரகாரத்தாலும் அநந்யனாய் ஸ்வயம்ப்ரயோஜந ஶாஸ்த்ரீய கைங்கர்யபரனாகை.

இப்படியால் ஓர் அதிகாரியை ஶரண்யன் ஹிததமத்திலே மூட்டும்படியையும், இவனுக்கு ப்ரியதமத்தைப் பண்ணும்படியையும், ஶரணாகதன் வீதசோகனாய் ஸர்வஶேஷிக்கு ப்ரியதமங்களான ஸர்வஶேஷ வ்ருத்திகளையும் பண்ணும் ப்ரகாரத்தையும் கணிசிக்கிறது சரம ஶ்லோகம்.

இதில் சொன்ன ஶரண்யனுக்கும் ஶரணாகதிக்கும் பலத்திற்கும் தேசகாலாதி பரிச்சேதமில்லை. ப்ரபத்த்யத்யாயாதிகளெல்லாம் இதின் விஸ்தரம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

3 எனக்குஉரியேன் எனதுபரம் என்பேறு என்னுது
 இவை அனைத்தும் இறையில்லா இறைக்கடைத்தோம் *
தனக்கு இணை ஒன்றில்லாத திருமால் பாதம்
 சாதனமும் பயனுமெனச் சலங்கள் தீர்ந்[த்]தோம் *
உனக்கு இதம் என்று ஒரு பாகன் உரைத்தது உற்றோம்
 உத்தமனும் அவன் உதவி எல்லாம் கண்டோம் *

---

1. திருச்சந்த—115. ‘ ‘ஆளும் எம்பிரானுமாய் ஒத்தொவ்வாத பல்பிறப்பு ஒழித்து நம்மை ஆட்கொள்வான் முத்தனார் முகுந்தனார் புகுந்துநம்முள் மேவினார் எத்தினால் இடர்க் கடல் கிடத்தி ஏழை நெஞ்சமே’ என்று மேல் பாட்டு. அவனுடைய ஆர்த்தியையும், குணங்களையும், நம்மை ரக்ஷிப்பதற்காக முன்னதாகப் பாரித்து ஒருப்பட்டபடியையும் ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியானபடியையும் சிந்தித்து மனத்தை நிர்ப்பயமாக்கிக்கொள்ள வேண்டும் என்று இப்பாட்டின் கருத்து. 2 திருப்பாவை—29

3 நானெனக்கு சேஷபூதன், என்னை ரக்ஷிக்கவேண்டியபரம் என்னுடையது, அத்தால் வரும் ப்ரயோஜனம் என்னுடையது என நினைக்காமல்

இனிக் கவருமவை கவர இகழ்ந்தோம் சோகம்
இமையவரோடு ஒன்று இனி நாமிருக்கும் நாளே. 8

गुरुभजननेत्रभाजा मथित रहस्येन वेङ्कटेशेन ।
नवनीतमिव गृहीतं नवकमिदं नित्यमास्वाद्यम् ॥

குருபஜந நேத்ரபாஜா மதித ரஹஸ்யேந வேங்கடேஶேந ।
நவநீதமிவ க்ருஹீதம் இதம் நவகம் நித்யம் ஆஸ்வாத்யம் ॥

प्रशमितकलिदोषां प्राज्यभोगानुबन्धां समुदितगुणजातां सम्यगाचार्युक्ताम् ।
श्रितजनबहुमान्यां श्रेयसीं वेङ्कटाद्रौ श्रियमुपचिनु नित्यं श्रीनिवास त्वमेव ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्री रहस्यनवनीतं संपूर्णम् ॥
॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

ப்ரஶமிதகலிதோஷாம் ப்ராஜ்ய போகாநுபந்தாம்
ஸமுதிதகுணஜாதாம் ஸம்யகாசாரயுக்தாம் ।
ஶ்ரிதஜந பஹுமாந்யாம் ஶ்ரேயஸீம் வேங்கடாத்ரௌ
ஶ்ரியமுபசிநு நித்யம் ஸ்ரீநிவாஸ த்வமேவ ॥

இப்படி கவிதார்க்கிகஸிம்ஹமும் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத்வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளுள்
ஸ்ரீ ரஹஸ்ய நவநீதம் முற்றிற்று.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

---

கீழ்க் கூறப்பட்ட இவைகளெல்லாவற்றையும் தனக்கு மேற்பட்ட யஜமானனில்லாத ஸ்வாமியான ச்ரிய:பதிக்கு ஸமர்ப்பித்தோம், தனக்கு ஸத்ருசமான வஸ்துஇல்லாத பகவானுடைய பாதங்களேஉபாயமும்பலனும்என அநுஸந்தித்து, ஸ்வாதீனம் என நினைக்கும் தோஷங்களைநிவ்ருத்திசெய்தோம், அத்விதீய ஸாரதியான ஸ்ரீக்ருஷ்ணன் அகிஞ்சனுனை உனக்கு இது ஹிதம் என உரைத்த ப்ரபத்தியை அநுஷ்ட்டித்தோம், உயர்ந்தவனுன அவனுடைய உபகாரங்களையெல்லாம் அறிந்தோம், இதற்கு மேல் அடையவேண்டிய ப்ரீத்யாதிகள் கவர, துக்கத்தை இகழ்ந்தோம், இனி நாம் இவ்வுலகத்தில் இருக்கும் நாள்களில் ஸூரிகளுடன் ஸமம்.

* ஆசார்ய உபாஸனமாகிற, அன்றிக்கே குருபக்தியாகிற, தயிர் கடையும் கயிற்றையுடையவராகிய, அன்றிக்கே ஜ்ஞானக் கண்ணை யுடையவராகிய, கடையப்பட்ட ரஹஸ்யங்களையுடைத்தாயிருக்கிற வேங்கடேசன் என்கிற ஆசார்யனால் எடுக்கப்பட்ட வெண்ணெயைப் போலே இருக்கிற இந்த ஒன்பது அர்த்தங்களும் எப்பொழுதும் அநு ஸந்தானம் செய்யத்தக்கவை.

ஓ! ஸ்ரீநிவாஸனே! தேவரீர்தாமே திருவேங்கடமாமலையில், போக் கடிக்கப்பட்ட கலிகாலத்தினால் உண்டான தோஷத்தையுடையதாயும், அதிகமான போகத்தினுடைய ஸம்பந்தத்தையுடையதாகவும், அதாவது உம்முடைய கைங்கர்ய ரூபமாகையால் உமக்கும், உம்முடைய தாஸர்களான ப்ரபன்னர்களுக்கும் போகத்தை வ்ருத்தி செய்கிறதா யும் என்றபடி, சேர்ந்திருக்கிற குணங்களின் ஸமூஹத்தையுடைத் தானதாயும், நல்ல அநுஷ்டானத்துடன் சேர்ந்ததாயும், உம்முடைய ஆச்ரிதர்களினால் கொண்டாடக்கூடியதாயும், உத்தமமாயுமிருக்கிற (கைங்கர்யமாகிற) ஸம்பத்தை எப்பொழுதும் வ்ருத்தி செய்யும்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

  

சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்
பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# ஏழாவது ரஹஸ்யம்

# ஸ்ரீதத்த்வமாத்ருகை

[ இது அம்ருதரஞ்ஜனீ ரஹஸ்யத்தில் ஆறுவது.
ஸ்ரீரங்கத்தில் அருளிச்செய்யப்பட்டது ]

[ மாத்ருகாக்ஷரங்கள் 51 என்று ஸ்ரீ ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் நிருபிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தத்த்வ மாத்ருகையில் 51 வாக்யங்கள் அருளிச்செய்யப்பட்டிருப்பதினால் எப்படி மாத்ருகாக்ஷரங்கள் மற்றெல்லா சப்தங்களுக்கும் மூலமோ, அதைப்போலவே இங்கு அருளிச்செய்யப்பட்டிருக்கும் 51 அர்த்தங்களும் தத்த்வ விஷயமான மற்றெல்லா அர்த்தங்களின் ஸங்க்ரஹம் என அறியவும். இப்படியே மேலுள்ள ரஹஸ்ய மாத்ருகையிலும் கண்டு கொள்ளவும்.

1. பர அவர தத்த்வ விபாகம்—2 - 14. பர தத்த்வ நிரூபணம்—15. அவரதத்த்வ விபாகம்—16 - 29. ஜீவதத்த்வ நிரூபணம்—30,31. அசேதந விபாகம்—32 - 39. த்ரிகுண நிரூபணம்—40, 41. காலநிரூபணம்—42 – 45. சுத்த ஸத்த்வ நிரூபணம்—46. முக்த தசையில் நித்யாநுபவ ப்ரகாரம்—47 - 50. பராவர தத்த்வ விஷயத்தில் ஸாதர்ம்யாதி நிரூபணம்—51. தத்த்வ விவேக ப்ரயோஜநம்.

இந்த ஸ்ரீ ஸூக்தியில் ஒரு விசேஷம்—மூன்று இடங்களில் தவிர ச்லோகங்கள் ப்ரமாணமாக உதாஹரிக்கப்படாமல் திவ்ய ப்ரபந்தப் பாசுரங்களையே ஸ்வ வாக்யச் சாயையாக அனுஸந்தித்திருப்பது.]

நேரிசை வெண்பா

1 தத்துவங்களெல்லாம் தகவால் அறிவித்து *
முத்திவழிதந்தார் மொய்கழலே*—அத்திவத்தில்

---

1 ப்ரணவம் முதலான, அதாவது திருமந்திரம் முதலிய ரஹஸ்யங்களை உபதேசித்த ஆசார்யர்கள் தாங்களோ க்ருபையினால் பராவர தத்

ஆரமுதம், ஆரும் இருநிலத்தில் என்று உரைத்தார் *
தாரமுதல் ஓதுவித்தார் தாம் 9

ஸதாசார்யோபதேஶத்தாலே ஶரீரக மூலமந்த்ராதிகளைக் கொண்டு ஸாத்த்விகருக்கு அறியவேண்டும் தத்த்வம் பரம் என்றும், அவரம் என்றும், இரு வகையாயிருக்கும். 1

பரதத்த்வமாவது—நினைந்த எல்லாப் பொருள்கட்கும் வித்தாய், ஸர்வ வஸ்துக்களிலும் உடல்மிசை உயிரெனக்கரந்து,
1 ' நந்தா விளக்கே அளத்தற்கரியாய் ' என்றும்,
2 ' உணர் முழுநலம் ' என்றும்,
3 ' அளப்பரிய ஆரமுதை ' என்றும்,
4 ' அமலன் ' என்றும்
சொல்லுகிறபடியே அத்யத்புதமாய், குணங்களுக்கும் அதிஶயாவஹமாய், திருவுக்கும் திருவாம்படி நிருபாதிக மங்களமான ஸ்வரூபத்தையுடையனாய்,
5 ' உயர்வற உயர்நலம் உடையவன் யவனவன்'
என்னும்படி அநவதிகாதிஶயாநந்தம் முதலான அநந்த கல்யாண குணங்களையுடையனாய், ஆஶ்ரிதர் பல பிறப்பும் பிறவாதபடி தான் எங்ஙின்ற யோகியுமாய்ப் பிறக்கக்கடவனாய், அவர்கள் நாட்டில் பிறந்து படுமவை படாமைக்காகத் தான் பிறந்து படாதன படக்கடவனாய், தான் சொல்லிற்றுச் செய்யும் தேவப்ரக்ருதிகளுக்குத் தானும் சொல்லிற்றுச் செய்யக்கடவனாய், விபரீதாசரணம் பண்ணும் ஆஸுரப்ரக்ருதிகளுக்குத் தானும் விபரீதாசரணம் பண்ணக்கடவனாய், தன்னை அந்தராத்மா என்று நினைத்திருப்பாரைத் தானும் தனக்கு அந்தராத்மா என்று நினைத்திருக்கு

---

துவங்கள் எல்லாவற்றையும் தெரிவித்து, மோக்ஷத்திற்கு உபாயங்களான பக்தி ப்ரபத்தி வித்யைகளை உபதேசித்தவர்களின் மொய்த்துக் கொண்டிருக்கிற (சேர்ந்துகொண்டிருக்கிற) திருவடிகளே அந்திவம் என்று சொல்லப்படுகிற பரமபதத்தில் பூர்ணமான அம்ருதமும், அதாவது அம்ருதத்தைப்போல் போக்யமானதும், விஸ்தாரமான பூமியில் உபாயமுமாகும் என்று உபதேசித்தார்கள்.

1. பெரிய திருமொழி—3-8-1. 2. திருவாய்—1-1-2.
3. திருநெடுந்தாண்டகம்—14. 4. அமலனாதிபிரான்—1
5. திருவாய்மொழி—1-1-1

மவனாய், தனக்கு ஆத்மாத்மீய பரஸமர்ப்பணம் பண்ணினாருக்குத் தானும் ஆத்மாத்மீய ஸமர்ப்பணம் பண்ணக்கடவனான ஶ்ரிய: பதி புருஷோத்தமன். 2

இவன்

1 'பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்
அங்காதும் சோராமே, ஆள்கின்ற எம்பெருமான்
செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார் '

என்கிறபடியே உபயவிபூதி நிர்வாஹகனாய்,
2 'தன்னொப்பார் இல்லப்பன்' என்றும்,
3 'இனன் இலன், எனனுயிர் மிகுநரை இலனே' என்றும்,
4 'ஒத்தார் மிக்காரை இலையாய மாமாயா' என்றும்
சொல்லுகிறபடியே ஸமாதிக தரித்ரனாயிருக்கும். 3

அப்ராக்ருதமாய் பஞ்சோபநிஷத் ப்ரதிபாத்ய ஶுத்த ஸத்த்வ பஞ்சஶக்திமயமாய், அஸ்த்ர பூஷண ரூப விசித்ர தத்த்வாஶ்ரயமான திவ்ய மங்கள விக்ரஹ விஶேஷத்தாலே விஶிஷ்டனாய்க்கொண்டு, பரவ்யூஹாதி பஞ்சப்ரகாரனாயிருக்கும். 4

பரரூபமாவது—நித்யமாய், ஏகரூபமாய், நித்யருக்கும் முக்தருக்கும் ஸேவ்யமாய்,
5 'குழுமித்தேவர் குழாங்கள் கைதொழச் சோதிவெள்ளத்தினுள்ளே எழுவதோர் உரு' என்றும்,
6 'ஆதியம்சோதி உரு' என்றும்
சொல்லுகிறபடியே வானுயர் இன்பம் மன்னி வீற்றிருந்தரூபம். 5

வ்யூஹங்களாவன—இப்பரரூபமடியாகப் பூர்வ பூர்வத்திற்கு உத்தரோத்தரம் கார்யமாகக்கொண்டு பிறந்து,
7 'முன்னை வண்ணம் பாலின் வண்ணம்'

---

1. நாச்சியார்திருமொழி-11-3 2. திருவாய்மொழி-6-3-9
3. திருவாய்மொழி-1-1-2 4. ,, 2-3-2
5. ,, 5-5-10 6. ,, 3-5-5
7. பெரியதிருமொழி-4-9-8

1 'பாலின் நீர்மை செம்பொன் நீர்மை'
இத்யாதிகளிற்படியே க்ருத த்ரேதாதி யுகங்கள்தோறும் மாறி மாறி வரும் நிறங்களையுடை(யனவான)த்தான ரூபங்கள். 6

அபிமாந விசேஷத்தாலே ஜீவ மனோஹங்கார ஶப்த வாச்யங்களான ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த ரூபங்களில் ஜ்ஞாந பலாதிகளில் *இவ்விரண்டு குணங்களும் ஸம்ஹார ஶாஸ்த்ர ப்ரவர்த்தநாதிகளில் இவ்விரண்டு தொழில்களும் உடைத்தா(யனவா)யிருக்கும். 7

வாஸுதேவாதிகளான நாலு வ்யூஹங்களிலும் ஒவ்வொரு வ்யூஹத்திலே மும்மூன்றாகப் பிரிந்து,
2 'கேசவன் தமர்' ரில்
சொல்லுகிற திருநாமங்களையுடைய ரூபங்கள் பன்னிரண்டும் வ்யூஹாந்தரங்கள். 8

விபவங்களாவன—
3 'மீனாய் ஆமையுமாய்'
இத்யாதிகளிற்படியே விபூதிகளோடு ஸஜாதீயங்களாய்த் தோன்றும் ரூபங்கள். 9

அவை தன்னி(ம்மி)லே தோன்றுவன சில ரூபங்கள் விபவாந்தரங்கள். 10

அந்தர்யாமிரூபமாவது—
4 'கண்கள் சிவந்து'
இத்யாதிகளிற்படியே உள்ளே யோகிகளுக்குக் காணலாவதொரு ஸூக்ஷ்மரூப விஶேஷம். 11

அர்ச்சாவதாரமாவது—
5 'தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்தானே
தமருகந்தது எப்பேர் மற்றப்பேர்',
6 'நெஞ்சினால் நினைப்பான் யவன் அவனாகும் நீள்கடல் வண்ணனே'

---

1. திருச்சந்தவிருத்தம்-44 2. திருவாய்மொழி-2-7
4. திருவாய்மொழி-8-8-1 5. முதல் திருவந்தாதி-44
3. ,, 5-1-10 6. திருவாய்மொழி-3-6-9

* 'இவ்விரண்டு' என்றது ஒவ்வொன்று என்பதைப்போல இரண்டிரண்டு என்றபடி.

என்னும்படி ஸ்வயம்வ்யக்த(திவ்ய) ஆர்ஷ (மாநுஷ)வைஷ்ணவ ஸ்த்தாநங்களிலே ஸர்வ ஸஹிஷ்ணுவாய் அர்ச்சக பாரதந்த்ர்யத் திற்கு எல்லை நிலமாய், ஶேஷ ஶேஷி பாவஶபளமாய்,
1 'भूमौ गतं पूजयतां प्रमेयं'
( பூமௌ கதம் பூஜயதாம் ப்ரமேயம்)
என்று தானே அருளிச்செய்த ரூபம். 12

2 'தன்னுளே திரைத்தெழுந்து'
இத்யாதிகளிற்படியே நிற்கிற இவ்வஞ்சு ரூபமும் அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறையும்படியான ஶூபாஶ்ர யமாயிருக்கும். 13

3 'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்'
என்கிறபடியே ஸலக்ஷ்மீகமாக இப்பரதத்த்வத்தைக் கண்டவன் மற்றிங்கோர் திருவில்லாப் புதுத் தெய்வம் தேருன். 14

இப்படிச் சுடர்மிகு சுருதியுள் உளஞன ஶ்ரிய:பதிக்கு ஶரீர மென்று ப்ரமாணஸித்தமான அவர தத்த்வம் சேதநம் என்றும், அசேதநம் என்றும் இரண்டு வகையாயிருக்கும். 15

சேதநமான அவர தத்த்வமாவது—ஜீவஶப்த வாச்யமாய் ஸ்வரூபத்தாலும் ஶக்த்யாதி குணங்களாலும் பரிச்சேத்யமான (தவத்தான) அஹமர்த்தம். 16

இது ஸ்வயம் ப்ரகாஶதையாலும் ஜ்ஞாந குணாஶ்ரயமாகை யாலும் ஜ்ஞாநமென்று பேர்பெற்று, இரண்டுபடியாலும் தனக்குத் தான் தோன்றுமதாய், அநுகூல ஸ்வபாவமாய், அதிஸூக்ஷ்மமாய், திலத்தில் தைலம்போலவும் தாருவில் அக்நிபோலவும் ஸர்வ அசேதநங்களிலும் அநுப்ரவேஶிக்கவற்ருய், நிர்விகாரமாய், குண த்ரய ரஹிதமாய், கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவிகளுக்கும் விஷயமன்றிக்கே நிஷ்க்ருஷ்ட வேஷத்தில் தே வத்வமநுஷ்யத்வாதி பேதங்களில்லாமையாலே தேவ மநுஷ்யாதி ஶப்தகோசரமன்றிக்கே ஸர்வாத்மஸாதாரணங்களான அஹம் புத்தியா(ஶப்தங்களா)லே தந்தாமுக்கு அநுபாவ்யமாயிருக்கும்.

---

1. பாரதம்-மௌஸல-5-35 பூமௌ - பூமியில், கதம்-அவதரித் திருக்கிற, ப்ரமேயம் -நம்மால் அளவிட்டறியப்படுகிற அர்ச்சாரூபத்தி தை, பூஜயதாம்- பூஜைசெய்பவர்களுக்
2. திருச்சந்தவிருத்தம்-10 3. மூன்றும்திருவந்தாதி

நான் என்கிற அர்த்தம்தானே பரபுத்தி விஷயமாம்போது அவன் இவன் உவன்(எவன்) என்றும்' நீ என்றும் தோற்றும். 18

இஜ்ஜீவ தத்த்வம் பத்தர் என்றும், பந்தரஹிதர் என்றும் இரண்டு படியாயிருக்கும். 19

பத்தராவார்—பல செய்வினை வன் கயிற்றால் திண்ணமழுந்தக் கட்டுண்டு, பெரும் துயர் இடும்பையிலே மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து, மண்ணும் நீர் எரிகால் மஞ்சுலாவும் ஆகாசமுமாம் புண்ணுராக்கையின் வழியுழன்று நாநாவித நரகம் புகும் பாவம் செய்து, சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த முடிவில் பெரும்பாழிலே பொய்ந் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை என்னும்படி தன்னுருக் கொடுத்து வேற்றுருக்கொண்டு, ஆவார் ஆர் துணை என்று அலைநீர்க்கடலுள் அழுந்தும் நாவாய்போல் பிறவிக் கடலுள் நின்று துளங்குகின்ற சேதநர். 20

இவர்களுக்கு அநாதியான கர்மப்ரவாஹ வைஷம்யத்தாலே அவ்வோ போகங்களுக்குப் போலே அவஸர ப்ரதீக்ஷ பகவத் க்ருபாமூலமான மோக்ஷத்திற்கு முற்பாடு பிற்பாடுகளுண்டாம்.21

பந்தரஹிதர் — முக்தர் என்றும், நித்யர் என்றும், இரண்டு வகை. 22

முக்தராவார்—எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்கும் கண்டீர் என்னும்படி நடுவே வந்து உய்யக்கொள்கின்ற நாதன் திருவருளாலே கருவிலே திருவுடையராய், பீதக வாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து பாதவிலச்சினை வைத்து ஞானக் கை தர,யானே எ(ன்த)னதேஎன்கிறஅஹங்காரமமகாரங்களாகிற படுகுழியினின்றும் ஏறி, ஒண்டொடியாள் திருமகளும் திருமகள் சேர் மார்பனுமே நிலாநிற்பக் கண்ட சதிர் கண்டு, ஐங்கருவி கண்ட இன்பம் தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம் ஒழிந்து, களைகண் மற்றின்றி, நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு என்று திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்து, புகல் ஒன்றில்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே என்று அடைக்கலம் புகுந்த என்னை 'அஞ்சல் என்னவேண்டும்'

என்றும், தொன் மா வல்வினைத் தொடர்களை முதல் அரிந்து, 'மங்க ஒட்டு உன் மாமாயை, 'மாயம் செய்யேல் என்னை ' என்றும் வளைத்து, ஆக்கை விடும்பொழுது எண்ணி, பாவம் எல்லாம் சும் எனுதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்து, அமரரோடு உயர்வில் சென்று. மன்னும் கடும் கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள் அன்னதோர் இல்லியின் ஊடுபோய், இமையோர் வாழ் தனி முட்டைக்கோட்டையினைக் கழித்து, வாட்டாற்ருன் பணிவகையே வான் ஏறப்பெற்று, ஆண்மின்கள் வானகம் ஆழியான் தமர் என்று வாள் ஒண் கண் மடந்தையர் வாழ்த்த, கொடியணி நெடுமதிள் கோபுரம் குறுகி, வாசலில் வானவர் வைகுந்தன்தமர் எமர் எமதிடம் புகுதென்ன, விதிவகைபுகுந்தனர் என்று நல்வேதியர் பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவ, நிதியும் நற் சுண்ணமும் நிறைகுட விளக்கமும் மதிமுக மடந்தையர் ஏந்த, வந்து அவர் எதிர்கொள்ள, தன்மை பெறுத்தித் தன் தாளிணைக் கீழ்க் கொள்ளுமப்பன் கொழுஞ்சோதி உயரத்துக் கூட்டரிய திருவடிக்கள் கூட்ட, அவன் தாளிணைக்கீழ் வாழ்ச்சிபெற்று, அடியார்கள் குழாங்களுடன் கூடி, மாமணி மண்டபத்தில் அந்தமில் பேரின்பத்தடியரான நித்ய ஸூரிகளோடு நிரையொக்க இருந்து, அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனைத்தினைத்தனையும் விடாதே அநுபவித்து, ஒழிவில் காலம் எல்லாம் உடனுய் மன்னி வழுவிலா அடிமை செய்து வாழும்படி வீடு திருத்துவான் பக்கல் வீடு பெற்றவர்கள். 23

நித்யராவார்—நித்யமான பரிபூர்ண பகவதநுபவத்தையுடையவராய் வடிவுடை வானேர் என்றும், முடியுடை வானவர் என்றும், வைகுந்தன்தமர் என்றும், ஸூரிகள் என்றும், ஸாத்ய தேவர்கள் என்றும் சொல்லப்பட்ட அநந்த கருட விஷ்வக்ஸேநாதிகளான அயர்வறும் அமரர்கள். 24

பத்தருக்குக் கர்மப்ரவாஹம் அநாதியாய் அந்தவத்தாயிருக்கும். 25

முக்தருக்குக் கைங்கர்யப்ரவாஹம் ஆதிமத்தாய் அந்தரஹிதமாயிருக்கும். 26

நித்யருக்கு பகவதபிமத விபரீதருசியில்லாமையாலே ஒரு காலத்திலும் கர்மஸம்பந்தமன்றிக்கே அதிகாரி நியமத்தோடு கூடின கைங்கர்யப்ரவாஹம் அநாத்யந்தமாயிருக்கும். 27

இப்படி ஷட்விம்ஶகன் என்றும், பஞ்சவிம்ஶகன் என்றும் பிரிக்கப்பட்ட பரமாத்மாவிற்கு ஸர்வாவஸ்த்தையிலும் ஸ்வாஶ்ரித விஷயத்திலுள்ள பாரதந்த்ர்ய ஶேஷத்வங்கள் ஸ்வாதந்த்ர்ய நிபந்தநங்களாயிருக்கும். 28

ஜீவாத்மாக்களுக்கு ஸர்வாவஸ்த்தையிலும் ஸ்வவ்யாபாரா திகளிலுள்ள ஸ்வாதந்த்ர்ய ஶேஷித்வங்கள் பாரதந்த்ர்யநிபந்தநங் களாயிருக்கும். 29

இப்படிப் பரமஶேஷியாயும் த்வாரஶேஷியாயுமுள்ள பராவ ராத்மாக்கள் இருவரிலும் வேறுபட்ட அசேதந தத்த்வம் த்ரி குணம் என்றும், அத்ரிகுணம் என்றும் இரண்டு வகையாயும், அத்ரிகுணம் காலம் என்றும், ஶுத்தஸத்த்வம் என்றும் இரண்டு வகையாயும் இருக்கும். 30

அசேதந த்ரவ்யமான தர்மபூதஜ்ஞாநத்தோடே கூட நாலு வகை என்று எண்ணலாயிருக்க, இத்தை ஶரீரமாகக்கொள்ளா மையாலும் ப்ரயோஜந விஶேஷத்தாலும் இவை மூன்றையும் வகுத்து அநுஸந்தித்தார்கள். 31

த்ரிகுணமாவது—ஸத்த்வ ரஜஸ் தமஸ்ஸுக்களுக்கு ஆஶ் ரயமான த்ரவ்யம். 32

ஸத்த்வ ரஜஸ் தமஸ்ஸுக்களாவன—அடைவே ஜ்ஞாந ஸுகாதிகளுக்கும், ராக துக்காதிகளுக்கும், ப்ரமாத மோஹாதி களுக்கும் ஹேதுக்களான குண விஶேஷங்கள். 33

இத்த்ரிகுணத்தினுடைய காரண தஶையையும் கார்ய தஶையையும்கூட 'பிரகிருதி மாஹங்காரமனங்கள்', 'பொங்கைம் புலனும் பொறியைந்தும் கருமேந்திரியம் ஐம்பூதம்' என்றும் பிரித்து ஶாஸ்த்ரம் சொல்லாநிற்கும். 34

இவற்றில் குணஸாம்யத்தையுடைய மூல ப்ரக்ருதியில் ஒரு ப்ரதேஶத்திலே பகவத் ஸங்கல்ப நியத காலமான குண வைஷம்யமடியாக ஸாத்த்விக ராஜஸ தாமஸங்கள் என்று பிரி டைத்தான மஹாந் பிறக்கும். 35

இதினின்றும் இவ்வடைவே ஸாத்த்விக ராஜஸ தாமஸா ஹங்காரங்கள் உண்டாம். 36

ராஜஸாஹங்காரம் துணையாக ஸாத்த்விகாஹங்காரத்தி னின்றும் ஏகாதசேந்த்ரியங்களும், தாமஸாஹங்காரத்தினின் றும் தந்மாத்ரைகளை இடையிட்டுக்கொண்டு பஞ்ச பூதங்களும் உத்பந்நங்களாம். 37

பூதங்களுக்கு உபாதாநங்களான சப்தாதி தந்மாத்ரை களும், பூதங்களுக்குக் குணங்களான சப்தாதிகளும் வேறுபட் டவை. 38

இப்பூதங்கள் ஐந்திலும் குணங்கள் ஐந்தும் நிற்கும் அடைவை

1 ' பூநிலாய ஐந்துமாய் '

என்கிற பாட்டின்படியே அநுஸந்திப்பது. 39

இப்படி மஹதாதிகளான தத்த்வங்களும் இவற்றின் கலசு தலடியாகப் பிறக்கும் அநந்தங்களான ப்ரஹ்மாண்டங்கள் முத லான கார்யங்களுமெல்லாம் த்ரிகுண த்ரவ்யமாகிற பெருங்கட லில் அலைகளும் நுரைகளும் குமிழிகளும் போலே ஆவது அழி வதாய் வருகிற ப்ரவாஹம் அநாதியாக விச்சேதமறப் போரு கைக்கு அடி பல பல மாய மயக்குக்களால் இன்புறும் இவ்விளை யாட்டுடையானுடைய இச்சாநுவர்த்தியான காலம் அநாதி யாய் அநந்தமாய் நடக்கும் என்னும் இடத்தை

2 ' अनादिः भगवान् कालः ' (அநாதி: பகவான் கால:)

இத்யாதிகளிலே கண்டுகொள்வது. 40

காலமாவது—எதிர், நிகழ், கழிவு என்றாற்போலும், முன்,பின், ஒருகாலம், பலகாலம் என்றாற்போலும் சொல்லுகிற பா சுரங்களுக்கு இலக்காயிருப்பதொரு த்ரவ்ய விசேஷம். 41

இதில் இறைப்பொழுது முதலாக நாள், திங்கள், ஆண்டு, ஊழி, கல்பம், பரார்த்தம், த்விபரார்த்தம், மஹாகல்பம் என்றாற் போலே சொல்லுகிற எல்லைகள் எல்லாம் ஸ்வதந்த்ர ஸங்கல்பமா

---

1, திருச்சந்த—1 2. விஷ்ணுபுராணம்—1-2-26

பகவாந் -பகவானாகிய,கால: - காலமானது. அநாதி: - ஆதியில்லா தது. (இதற்கு முடிவும் இல்லை).

கிற சூராவளிக் காற்றாலே சுழன்று வாராநின்றால் கழிந்த க்ஷணங்களும், கல்பங்களும் வரும் க்ஷணங்களும் கல்பங்களும் அநந்தங்களாய், இவற்றாலே லீலாவிபூதியிலுள்ள கார்யங்களுக்கு உத்பத்தி ஸ்த்திதி நாஶ வ்யவஸ்த்தை உண்டாயிருக்கும்.

ஶுத்த ஸத்த்வத்தில் இக்கால தத்த்வம் உண்டேயாகிலும் அங்குள்ள கார்யங்களினுடைய உத்பத்த்யாதிகளுக்கு இங்கடைத்த கால விஶேஷம் நியாமகமன்று. 43

ஶுத்த ஸத்த்வமாவது—குணத்ரய ரஹிதமாயும் குணத்ரயாஶ்ரயமாயுமுள்ள த்ரவ்யங்களிற்காட்டில் வேறுபட்டு விலக்ஷணமான ஸத்த்வகுணத்திற்கு ஆச்ரயமான த்ரவ்யம். 44

இதன்படியைப் பார்த்தால் பரமயோகி வாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூப ஸ்வபாவமாய், சேணுயர் வானம் என்றும், தெளிவிசும்பு என்றும், பொன்னுலகு என்றும், கலங்காப் பெருநகரம் என்றும், மாகவைகுந்தம் என்றும் சொல்லப்பட்ட வேறுபாட்டையுடைத்தாய், ப்ரஹ்மாதிபதங்களுமெல்லாம் நரக துல்யங்களாய்த் தோற்றும்படிஅபரிமித ஐஶ்வ(ஆஶ்ச)ர்யங்களான போக்யபோகோபகரண போகஸ்த்தாநங்களையுடைத்தாய் ஸர்வேஶ்வரனுக்கும் நித்யருக்கும் முக்தருக்கும் விக்ரஹாதி ரூபேண விசித்ர ப்ரவாஹமாயிருக்கும். 45

இப்படி அநந்தங்களான ஜநபத நகர விமாந மண்டப கோபுராதி விபாகங்களையுடைத்தான திவ்ய லோகத்தில் ப்ரதாநதமமான திருமாமணிமண்டபத்தில் அநந்ததேவதாத்மகமான திவ்ய யோகபர்யங்க விஶேஷத்திலே த்ரிவித சேதநரையும் த்ரிவித அசேதநங்களையும் ஸ்வாதீநங்களாக்கிக்கொண்டு

1 'वैकुण्ठे तु परे लोके' (வைகுண்டே து பரே லோகே) இத்யாதிகளிற்படியே ஸர்வஶேஷியான ஶ்ரிய:பதி எழுந்தருளியிருக்கும் படி முமுக்ஷுதஶையில் நித்யாநுஸந்தேயமாய், முக்ததஶையில் நித்யாநுபாவ்யமாயிருக்கும். 46

1. ஸ்காந்தபுராணவாக்யம். வைகுண்டே து - வைகுண்டம் என்னப்படும், பரே லோகே – உத்தமமான லோகத்தில், ( பெரிய பிராட்டியாருடன் கூடிய பகவான் தன்னிடத்தில் மிகுந்த ப்ரீதியையுடைய நித்யர்களுடனும் முக்தர்களுடனும் எழுந்தருளியிருக்கிறான். )

இப்பராவர தத்த்வங்கள் இரண்டுக்கும் ஓரோராகாரங்களாலே ஸாதர்ம்யமுண்டேயாகிலும் விஶேஷாகாரங்களாலே வேறுபட்டு ஶேஷஶேஷிபாவ, நியந்த்ரு நியாம்யபாவ, வ்யாப்ய வ்யாபகபாவ, ஆதார ஆதேய பாவாதிகளாலே இவை ஒன்றி நிற்கும் நிலை ப்ரணவத்திலும், ஸத்ய ஶப்தத்திலும், புருஷ ஶப்தத்திலும், நாராயண ஶப்தத்திலும், புருஷோத்தம ஶப்தத்திலும்

1 'கறந்த பாலுள் நெய்யேபோல்'

2 'அடியேன் உள்ளான் உடல்உள்ளான்'

3 'ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றை'

4 'உலகு நின்னொடு ஒன்றி நிற்க வேறு நிற்றி'

இத்யாதிகளிலும் சுருங்க அநுஸந்திக்கலாம். 47

ஒன்றை அறிகையும் அதின் அறிவடியாக வ்யாபரிக்கையும் ஒரு பலத்தை புஜிக்கையும் தனக்குத் தான் தோன்றுகையுமில்லாத த்ரவ்யம் அசேதந தத்த்வம். 48

இவற்றைப் பராதீநமாகவுடையது ஜீவ தத்த்வம். 49

த்ரிவித சேதந அசேதநங்களுடைய ஸ்வரூப ஸ்த்திதி ப்ரவ்ருத்(த்யா)திகள் மூன்றும் தானிட்ட வழக்காம்படி நிற்கிறது பர தத்த்வம், 50

இத்தத்த்வ விவேகத்திற்கு ப்ரயோஜநம் தன் விஶேஷணங்களை அறியாமையாலே வருகிற ப்ரக்ருத்யாத்ம ப்ரமமும், தன் விஶேஷ்யத்தை அறியாமையாலே வருகிற ஸ்வதந்த்ராத்ம ப்ரமமும் கழிந்து, தன் ஸ்வரூபத்திற்கு த்யாஜ்ய உபாதேய புருஷார்த்தங்களைத் தெளிந்து, விபரீதாபிஸந்திநிவ்ருத்தியும் ப்ராப்ய ருசியும் பிறந்து, ப்ராபகஸாபேக்ஷனாகை. 51

கட்டளைக் கலித்துறை.

5 திருநாரணன் எனும் தெய்வமும் சித்தும் அசித்தும் என்று
பெரு நான்மறைமுடி பேசிய தத்துவ மூன்றிவை கேட்டு*
ஒருநாள் உணர்ந்தவர் உய்யும் வகையன்றி ஒன்றுகவார் *
இருநாலெழுத்தின் இதயங்களோதிய ஒண் குணரே. 10

---

1 திருவாய்—8-5-10 2 திருவாய்—8-8-2
3 ,, 8-8-4 4 திருச்சந்த—12

எண்சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

1 காரணமாய் உயிராகி அனைத்தும் காக்கும்
கருணைமுகில் கமலையுடன் இலங்குமாறும்*
நாரணனார் வடிவான உயிர்களெல்லாம்
நாம் வென்று நல்லடிமைக்கு ஏற்குமாறும் *
தாரணி நீர் முதலான மாயை காலம்
தனிவான் என்றிவை உருவாம்தன்மை தானும்*
கூரணிசீர் மதியுடைய குருக்கள் காட்டக்
குறிப்புடன் நாம் கண்டவகை கூறினோமே. 11

1 स्तनन्धयैरपि सहसैव सुग्रहा समुत्थिता निधिरिव वेङ्कटेश्वरात्।
परावर स्थितिमिह तत्त्व मातृका करोत्यसौ करतलमौक्तिकोपमाम्॥

ஸ்தநந்தயைரபி ஸஹஸைவ ஸுக்ரஹா
ஸமுத்திதா நிதிரிவ வேங்கடேஶ்வராத் ।

5 லக்ஷ்மியுடன் கூடிய நாராயணன் என்று சொல்லப்படுகிற பர தேவதையும், சேதனமும், அசேதனமும், என்று இப்படி பெரிதான நான்கு வேதங்களின் முடியான உபநிஷத்கூறிய மூன்றுகியஇத்த்வங் களை ஒருகாலத்தில்ஆசார்யர்களிடமிருந்துகேட்டறிந்தவர்களான எட் டெழுத்தின் தாத்பர்யங்களில் சொல்லப்பட்ட, அன்றிக்கே திருவஷ் டாக்ஷரத்திற்கு ஹ்ருதயம் என்று சொல்லப்பட்ட நமஸ்ஸில் கூறப்பட் டதான விலக்ஷணமான (பாரதந்த்ர்யாதி ) குணங்களையுடையவர்கள் உஜ்ஜீவிக்கும் ப்ரகாரத்தைத் தவிர வேறொன்றையும் தங்களுக்கு உபா தேயமாக அங்கீகரிக்கமாட்டார்கள்.

1 எல்லா வஸ்துக்களுக்கும் காரணமாய், அவைகளுக்கு அந்தர்யா மியாய் எல்லா வஸ்துக்களையும் ரக்ஷிக்கிற கருணையாகிற ஜலத்தை உள்ளேயடக்கிக் கொண்டிருக்கிற மேகம் போன்ற பகவான் லக்ஷ்மி யுடன் ப்ரகாசிக்கும் ப்ரகாரத்தையும், நாராயணனுக்குச் சரீரமானஎல் லா ஜீவாத்மாக்களும் ' நாம் ' என்கிற அஹங்காரத்தை ஜயித்து, நல்ல கைங்கர்யத்திற்கு யோக்யர்கள்ஆகிறபடியையும்,பூமிஜலம்இவை முதலான ப்ரக்ருதியின் பரிணமங்கள், காலம் சுத்த ஸத்த்வம் என்று சொல்லப்பட்ட இவைகள் சரீரமாக இருக்கும் ஸ்வபாவத்தையும், கூர் மையினால் அலங்கரிக்கப்பட்ட குணங்களையுடையபுத்தியுடையஆசார் யர்கள் காட்ட அவதானத்துடன் நாம் தெரிந்துகொண்ட விதமாக இங்கு ப்ரதிபாதித்தோம்.

2 ஸ்தநந்தயைரபி – பரிபக்வமடையாத புத்தியுடையவர்களினாலும் ஸஹஸைவ - சீக்கிரத்திலேயே. ஸுக்ரஹா - ஸுலபமாக அறியக்கூ டும், வேங்கடேச்வராத் - வேங்கடேசன் என்கிற திருநாமத்தையு

பராவரஸ்த்திதி மிஹ தத்த்வ மாத்ருகா
கரோத்யஸௌ கரதலமௌக்திகோபமாம் ||

अक्षय्यशान्ति मकरन्दरसप्रसक्तान् अभ्यर्थये मुरभिदङ्घ्रिसरोजभृङ्गान् ।
कामं प्रसीदत यथाहमनन्यभाव(ः): कर्णामृतानि भवतामवतारयेयम् ॥

அக்ஷய்ய ஶாந்தி மகரந்த ரஸப்ரஸக்தாந்
அப்யர்த்தயே முரபிதங்க்ரி ஸரோஜப்ருங்காந் |
காமம் ப்ரஸீதத யதாஹம் அநந்யபாவ(ா):
கர்ணாம்ருதாநி பவதாம் அவதாரயேயம் ||

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्री त त्त्व मा तृ का सं पू र्णा ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

இப்படி கவிதார்க்கிக ஸிம்ஹமும் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத்வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளுள்
ஸ்ரீ தத்த்வ மாத்ருகை முற்றிற்று.

**சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்**

---

டைய ஆசார்யனிடமிருந்து, நிதி:இவ – புதையல் போல, ஸமுத்திதா - உண்டாயிருக்கிறதுமான, அஸௌ - இந்த, தத்த்வ மாத்ருகா - ஸ்ரீ தத்த்வ மாத்ருகை என்கிற ரஹஸ்யம், பராவர ஸ்த்திதிம் - பரம் அவரம் என்னப்படும் இரண்டு வகையான தத்த்வங்களின் நிலையை, இஹ - இங்கே, கரதல மௌக்திகோபமாம்-உள்ளங்கையில் முத்துப்போலே ஸ்பஷ்டமாகத் தெரியும்படி, கரோதி - செய்கிறது.

1 அக்ஷய்ய - அழிவில்லாத, சாந்தி - சாந்தியாகிற, மகரந்த ரஸ-தேனின் ருசியில். ப்ரஸக்தாந் - மிகவும் ஆசையுடையவர்களாயும்,முரபித் - பகவானுடைய, ஸரோஜ - தாமரைப் பூப்போன்ற, அங்க்ரி -திருவடிகளில். ப்ருங்காந் - வண்டுகளைப் போலேயிருக்கிற பாகவதோத்தமர்களை, அப்யர்த்தயே- ப்ரார்த்திக்கிறேன்,

யதா - எப்படி, அஹம் - நான், அநந்யபாவ: - வேறொரு ப்ர-யோஜனத்திலும் செல்லாத மனத்தையுடையவனாய், அநந்ய பாவா:

என்கிற பாடத்தில் பகவானைத் தவிர வேறு ஒரு இடத்திலும்மனதைச் செலுத்தாத நீங்கள், பவதாம் - உங்களுக்கு, கர்ணம்ருதாநி - கேட்பதற்கு மிகவும் இனிதான சப்தங்களை, அவதாரயேயம் - உண்டாக்கக் கடவேனே (அப்படி), காமம் - மிகவும், ப்ரஸீதத - அனுக்ரஹத்தைச் செய்யவேண்டும்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

  

சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்

பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# எட்டாவது ரஹஸ்யம்

# ஸ்ரீ ரஹஸ்ய மாத்ருகை

[ இது அம்ருதரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் ஏழாவது. ஸ்ரீ ரங்கத்தில் அருளிச்செய்யப்பட்டது.]

[ 1 - 4 திருமந்த்ரத்தில்—அகாரார்த்தம், 5 உகாரார்த்தம், 6-12 மகாரார்த்தம், 13 - 18 நமச் சப்தார்த்தம், 19 - 30 நாராயண சப்தார்த்தம், 31 - 37 த்வயத்தில் பூர்வகண்டார்த்தம், 38-40 உத்தர கண்டார்த்தம், 41 -51 சரமச்லோகத்தின் அர்த்தம் ]

அப்படி நின்ற அமலன்படி எல்லாம்
இப்படி எம் உள்ளத் தெழுதினர்—எப்படியும்
ஓ(ஏ)ரார் சுருதியொளியால் இருள் நீக்கும்
தாராபதி அணைந்தார்(ஆனையார்) தாம். 12

திருமந்த்ரத்தில் மூலமாகிய ஒற்றை எழுத்தான முதல் பதத்தில் முதல் எழுத்திலே ஶ்ரிய:பதியினுடைய ஸர்வஜகத்காரணத்வமும், ஸர்வரக்ஷகத்வமும், நித்ய நிருபாதிக ஸர்வசேஷித்வமும், ஜீவனுடைய நித்ய நிருபாதிக சேஷத்வமும் (4), இதின் நடு எழுத்திலே ஶ்ரிய:பதிக்கு நிருபாதிக சேஷபூதனான ஜீவன் மற்றொருவருக்கு உரியனல்லாதமையும் (5), மூன்றும் எழுத்திலே ஜீவனுடைய தேஹேந்த்ரியாதிகளால் வேறுபாடும், அறிவானமையும்,

1 எந்த விதத்தாலும் விசாரிக்கப்பட்டதான பூர்ணமான வேதமாகிற ப்ரகாசத்தினால் அஜ்ஞானமாகிற இருட்டை நீக்குகிற சந்திரனைப் போன்ற ஆழ்வார்களை ஆச்ரயித்து ஸ்ரீமந் நாத முனிகள் முதலான நம் ஆசார்யர்கள் அவ்விதமாக நிற்கிற ஹேயப்ரத்யநீகனாகிய பகவானுடைய ப்ரகாரங்கள் எல்லாவற்றையும் மேலே நிரூபிக்கப்படுகிற வ்ருமாக எம்முடைய மனத்தில் ஸ்த்திரமாக இருக்கும்படி செய்தார்கள்

அறிவுடையனுனமையும், இரண்டு ஆகாரத்தி(தா)லும் ஆநந்தஸ்வரூபனுயிருக்கும்படியும், ஸ்வயம்ப்ரகாஶனுயிருக்கும்படியும், தனக்குத் தான் தோற்றும்படியும், அணுவானமையும் (12), நம: என்கிற இரண்டாம் பதத்திலே இஜ்ஜீவன் அநாதியாக விரோதி கையிலே அகப்பட்டு நின்றமையும், தான் ஒன்றையும் பற்ற நிருபாதிகசேஷியல்லாமையும், ஒரு கார்யத்திலும்நிரபேக்ஷகர்த்ருத்வமில்லாமையும், ஸ்வதந்த்ரஸ்வாமியாலே பாகவதசேஷமா(ரு)க விநியுக்தனுனபடியும், அநந்யோபாயத்வமும், உபாயவிசேஷ பரிக்ரஹமும் (18), நலம் தரும் சொல்லான நாராயண சப்தத்தில் அசித்தினுடைய ஸ்வரூபாந்யதாபாவமும், ஜீவர்களுக்கு ஸ்வரூபாந்யதாபாவம் இல்லாமையும், க்ஷேத்ரஜ்ஞனு(ரு)டைய ஸ்ருஷ்டி ஸம்ஹார விஷயத்வமும், சேதந வர்க்கத்தினுடைய ஆநந்த்யமும், ஸர்வ நியந்தாவினுடைய ஸ்வரூபஸ்வபாவ நித்யதவ ப்ரகாரமும், நேத்ருத்வமும், ஸர்வ வ்யாபகத்வமும், ஸர்வாதாரத்வமும், ஸர்வவித பந்துத்வமும், ஸர்வவித புருஷார்த்தோபாயத்வமும், முக்தப்ராப்யத்வமும் (29), இந்நாராயண சப்தத்தில் சதுர்த்தியிலே ஒழிவில் காலம் எல்லாம் உடனுய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும்படியும் (30) ப்ரதாநமாக அநுஸந்தேயம்.

இப்படித் திருமந்த்ரத்தில் ஸர்வவேதங்களுக்கும் விதையான முதல் பதத்திலே முளைத்து, இரண்டாம் பதத்திலே வளர்ந்து, மூன்ரும் பதத்திலே பலபர்யந்தமான ஸம்யக்ஜ்ஞாநத்தையுடையவனுக்கு அநுஷ்ட்டேயமான ஸாங்கபரஸமர்ப்பணத்தை விசதமாக ப்ரகாஶிப்பிக்கிற த்வயத்தில் ப்ரதமாக்ஷரமான ஸ்ரீசப்தத்திலே விஷ்ணுபத்நியாய்ப் புருஷகாரபூதையான வேரி மாருத பூமேல் இருப்பாள் வினைதீர்க்கும் ப்ரகாரங்களும், அதின் மதுப்பிலே அலர் மேல்மங்கை அசரண்ய சரண்யனுனவன் மார்பிலே அகலகில்லேன் இறையும் என்று உறையும்படியும், நாராயண ஶப்தத்தில்

1 ‘ நிகரில் புகழாய் ’

இத்யாதிகளில் அருளிச்செய்த சரண்ய ஸ்வபாவமும், (ச)சரண சப்தத்தில் உபாய உபேயதசைகளை ஊடுருவி நிற்கிற திவ்ய மங்கள விக்ரஹயோகமும், ‘ஶரணம்’என்கிற சப்தத்திலே

1. திருவாய்மொழி-6-10-10

நின்சரணல்லால் சரணில்லைஎன்றுகழல்களவையே சர(ண்ண)ண மாகக்கொள்ளுகிறபடியும், 'ப்ரபத்யே' என்கிற பதத்திலே கத்யர்த் தமான தாதுவில் ப்ரமாணாநுஸாரத்தாலே அத்யவஸாயாதி பூர்வ கமாக அடிக்கீழ் அமர்ந்து அடைக்கலம் புகுகிறபடியும், இப்பதத் தின் உத்தமனிலே களைகண் மற்றிலேன் என்னும்படி தானும் தம ரும் பிறரும் தனக்குத் தஞ்சமன்றிக்கே புகல்ஒன்றில்லா அடியேன் என்று நிற்கிற நிலையும், 'ஸ்ரீமதே' என்கிற பதத்திலே பூவளரும் திருமகளால் பொன்னுலகில் அருள்பெறுமவனுக்குக் 'கோலத் திருமாமகளோடு உன்னை' என்னும்படி நின்ற ப்ராப்ய தம்பதிக ளுடைய பிரிவற்ற சேர்த்தியும், 'நாராயணாய' என்கிற பதத் திலே வழுவிலா அடிமைகது வகுத்த சேஷியினுடைய நிரதிசய போக்யத்வமும், 'நம:' சப்தத்திலே ஸர்வ விரோதி நிவ்ருத்தி தசையில் வரும் கைங்கர்யம் களையற்றிருக்கும்படியும் (40) ப்ர தாநமாக அநுஸந்தேயம்.

இம்மந்த்ரங்கள் இரண்டிலும் தோற்றுகிற அநுஷ்ட் டாநத்திற்கு விதாயகமான சரம ஶ்லோகத்தில் 'ஸர்வ தர்மாந்' என்கிற பதத்திலே குறிக்கொள் ஜ்ஞாநங்களாலே பண்ணும் அருந்தவங்களினுடைய நாநாவிதத்வமும், 'பரித்யஜ்ய' என்கிற பதத்திலே போக்கற்றவன் ப்ரஹ்மாஸ்த்ரதுல்யையான ப்ரபத்தி யைப் பண்ணும்போது அநபேக்ஷிதங்களிலும் தனக்கு ஶக்யமில் லாதவற்றிலும் துவக்கற்று வெறுமையே துணையாக முன்னிடும் படியும், மாம்' என்கிற பதத்திலே மலர்மகள் விரும்பும் நமரும் பெறலடிகள் பத்துடை அடியவர்க்கு எளியவனாய் அருள் புரிந்த சிந்தை அடியார் மேல் வைத்து அடைக்கலம்கொள்ள ஒருப் பட்டுநிற்கிற நிலையும், 'ஏகம்' என்கிற பதத்திலே தாமரையாள் கேள்வன் ஒருவனே பற்றிலார் பற்ற நிற்கிறபடியும், 'ஶரணம்' என்கிற பதத்திலே அசரண்ய சரண்யன் விபரீதாபிஸந்தி யற்ற தேவ ப்ரகருதிகளுக்கு வன் சரணாய்த் தன் சரண் நிழல் கீழ் வைக்க வகுத்தமையும், 'வ்ரஜ' என்கிற பதத்திலே நெறி எல்லாம் எடுத்து உரைத்த நிறைஞானத் தொருமூர்த்தி தந்த ஜ்ஞாநக் கையாலே 'நின்னிலங்குபாதமன்றி மற்றோர்பற்றிலேன்'என்று நாம் அவனை பற்றலாம் படி தன் பாதமே ஶரணாகத் தந்தொழிந்தமையும்(4

'அஹம்' என்கிற பதத்திலே வல்லைகாண் என்னும்படியான ஸர்வ சக்தி கொழுஞ்சோதி உயரத்துக் கூட்டரிய திருவடிக்கள் கூட்டி அடிமைகொள்ள ஒருப்பட்டபடியும், 'த்வா' என்கிற பதத்திலே 'நின் அருளே புரிந்திருந்தேன்' என்றிருக்கிற க்ருதக்ருத்யனை 'ஆரால் குறைவுடையம்' என்னும்படி சாதக வ்ருத்தியாக்கினபடியும், 'ஸர்வபாபேப்ய:' என்கிற பதத்திலே

1'நானே நானாவித நரகம்புகும் பாவம் செய்தேன்'என்றும்,
2 'நம்மன்போலே வீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ள பாவம் எல்லாம்'

என்றும் சொல்லுகிறபடியே எண்ணாராத் துயர்விளைக்கும் வல்வினை மாளாதோ என்னும்படி எண்ணிறந்து கிடக்கிற படியும், 'மோக்ஷயிஷ்யாமி' என்கிற பதத்திலே இருள் தருமாஞாலத்துள் இனிப்பிறவிகழிந்து மருள் ஒழிந்த மடநெஞ்சமுடையார்க்கு வேண்டிற்றெல்லாம் தரும் வள்ளல் மணிவண்ணன் விண்ணுலகம் தர விரைந்து, சார்ந்த இரு வல் வி னை க ளும் சரித்து, மாயப்பற்றறுத்து, தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி வீடு திருத்துகிறபடியும், 'மா ஶுச:' என்கிற வாக்யத்திலே உழலை என்பில் பேய்ச்சி முலையூடு அவனை உயிருண்டான் கழல்களவையே சரணாகக்கொண்டு செய்த வேள்விய(ர்)ன் 'திருமால் தலைக் கொண்ட நங்கட்கு எங்கேவரும் தீவினையே', 'கூட்டரிய திருவடிக்கள் கூட்டினை நான் கண்டேனே' என்று தெளிவுற்ற சிந்தையாலே தேறி, யாவச்சரீரபாதம் ஆஜ்ஞாநுபாலநத்தாலே அக்னி இந்திராதி ஶப்தங்களை ப்ரயோகிக்குமளவிலும் அந்யதேவதா பிஸந்தியற்ற ஸ்வயம்ப்ரயோஜந கைங்கர்ய ரஸத்தாலே க்ருதார்த்தனாயிருக்கும்படியும் (51) ப்ரதாநமாக அநுஸந்தேயம்.

இப்படித் திருமந்த்ராதிகளில் முற்பட ஶிக்ஷிக்கும் அர்த்தமே மோக்ஷ ஶாஸ்த்ரங்களில் முதல் நடு இறுதியாக முகம் மாறிக் கோக்கிற வர்ண ஸ்வரூப(ஸர)ங்களுக்கெல்லாம் மாத்ருகை.

**கட்டளைக் கலித்துறை**

3 செம்பொற்கழலிணைச் செய்யாள் அமரும் திருவரங்கா
அன்பர்க்கு அடியவராய் * அடிசூடியநாம் உரைத்தோம் *

1 பெரியதிருமொழி—1 9 2 2 பெரியாழ்வார்—5 4 3

இன்பத் தொகையென எண்ணிய மூன்றின் எழுத்ததடைவே *
ஐம்பத்தொரு பொருள் ஆருயிர் காக்கும் அமுதெனவே. 13

1 बहुश्रुतैरियमधुना मितप्रियैरनुक्रमादनुदिन भोगलालसैः ।
रमापतौ निहितभरैरुदीरिता रसावहा भवति रहस्यमातृका ॥

பஹுச்ருதைரியம் அதுநா மிதப்ரியை:
அநுக்ரமாத் அநுதிந போகலாலஸை: |
ரமாபதௌ நிஹிதபரை: உதீரிதா
ரஸாவஹா பவதி ரஹஸ்யமாத்ருகா ||

2 रहस्य मातृका सेयं वेङ्कटेश विपश्चिता ।
विशुद्धदेशिकवता रङ्गधाम्नि व्यलिख्यत ॥

---

3 சிவந்த பொன்னையுடைய, அதாவது ஸ்வர்ணமயமான ஆபரணங்களையுடைய, அன்றிக்கே ஸ்வர்ணம் போல் எல்லாப் புருஷார்த்தங்களுக்கும் ஸாதனமான இரண்டு திருவடிகளையுடைய பெரிய பிராட்டியார் நித்யவாஸம் செய்கிற ஸ்ரீரங்கநாதனுடைய பக்தர்களுக்குத் தாஸர்களாய் அவர்களுடைய திருவடிகளை சிரஸ்ஸினால் தரித்துக்கொண்டிருக்கிற நாம் ஆநந்தத்தின் சேர்க்கை என்று நம் பூர்வாசார்யர்கள் அனுஸந்தானம் செய்த ரஹஸ்யத்ரயத்தில் ஜீவாத்மாக்களை ரக்ஷிக்கிற அம்ருதம் என்று சொல்லப்படுகிறதாய் மாத்ருகாக்ஷரங்களின் க்ரமத்தை அநுஸரித்திருக்கிற, அதாவது அவற்றின் எண்ணிக்கையை அடைந்திருக்கிற ஐம்பத்தொரு அர்த்தங்கள் சொன்னோம்.

1 ரஹஸ்ய மாத்ருகா - ரஹஸ்ய மாத்ருகை என்னும் இந்த க்ரந்தமானது, பஹுச்ருதை: - அனேகம் விதமாக ச்ரவணம் பண்ணினவர்களாயும், அதுநா – இப்பொழுது, மித ப்ரியை: – ஸங்க்ரஹமாக அறிவதில் ஆசையுடையவர்களாயும், அநுக்ரமாத் - வரிசையாக, அநுதிந - தினந்தோறும், போக – ஸுகத்தை அனுபவிப்பதில், லாலஸை: - ஆசையுடையவர்களாயும், ரமாபதௌ-ச்ரிய:பதியினிடத்தில், நிஹிதபரை: – வைக்கப்பட்ட ரக்ஷண பரத்தையுடையவர்களாயும் இருப்பவர்களினால், உதீரிதா – சொல்லப்பட்டதாய்க் கொண்டு, ரஸாவஹா - ஆநந்தத்தைக்கொடுப்பதாக, பவதி - ஆகிறது.

2 ஸேயம் – அந்த இந்த, ரஹஸ்ய மாத்ருகா - ஸ்ரீரஹஸ்ய மாத்ருகை என்னும் க்ரந்தமானது, விசுத்த தேசிகவதா - ஆசார்ய லக்ஷண

ரஹஸ்ய மாத்ருகா ஸேயம் வேங்கடேஶ விபஶ்சிதா ।
விஶுத்த தேசிகவதா ரங்கதாம்நி வ்யலிக்க்யத ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्री रहस्यमातृका संपूर्णा॥
॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

இப்படி கவிதார்க்கிகஸிம்ஹமும் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத்வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளுள்
ஸ்ரீ ரஹஸ்ய மாத்ருகை முற்றிற்று.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

---

பூர்ணர்களான ஆசார்யர்களை ஆச்ரயித்த, வேங்கடேச விபச்சிதா - ஸ்ரீ வேங்கடேசன் என்கிற வித்வானாகிய ஆசார்யனால் ரங்க தாம்நி - ஸ்ரீரங்கத்தில்வ்யலிக்க்யத-எழுப்பட்டது.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்





சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்
பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# ஒன்பதாவது ரஹஸ்யம்

# ஸ்ரீதத்த்வ ஸந்தேசம்

[ இது அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யத்தில் எட்டாவது.
ஸ்ரீரங்கத்தில் அருளிச்செய்யப்பட்டது ]

स्वाधीन त्रिविधेरित्यादेरभिप्रायः प्रकाश्यते ।
कस्यचित् तत्त्वनिष्ठस्य कांक्षित प्रतिपत्तये ॥

ஸ்வாதீந த்ரிவிதேத்யாதேரபிப்ராய: ப்ரகாஶ்யதே ।
கஸ்யசித் தத்த்வ நிஷ்ட்டஸ்ய காங்க்ஷித ப்ரதிபத்தயே

ஸர்வமந்த்ர ப்ரதாநங்களான வ்யாபக மந்த்ரங்கள் மூன்றிலும் சேர ஸர்வாதார பூதனாய் ஸர்வ ஶரீரியாய் நிற்கிற நிலையிலே இவனை

' स्वाधीन त्रिविध चेतनाचेतन स्वरूप स्थिति प्रवृत्तिभेदम् '
ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதந ஸ்வரூப ஸ்த்திதி ப்ரவ்ருத்தி பேதம் ' என்று ஸ்ரீ ஆளவந்தாரும் ஸ்ரீ பாஷ்யகாரரும் அருளிச் செய்தார்கள்.

இதில் 'ஸ்வாதீந' என்கிற ஶப்தத்தாலே ஸ்வரூபாதீநத்வமும், இச்சாதீநத்வமும் ஸங்க்ருஹீதம். இவை இரண்டும் ஶரீராத்மபாவ ஶ்ருத்யாதி ஸித்தம். இவற்றில் ஸ்வரூபாதீநத்வம் ஈஶ்வரஸ்வரூப வ்யதிரிக்த ஸர்வ வஸ்துக்களுக்கும் யதாஸம்பவம் வ்யவஹித அவ்யவஹிதபேதவத்தாயிருக்கும். ஈஶ்வரேச்சா

தீநத்வம் ஜீவேச்சாதீநங்களிலும் ஏகரூபம். இவற்றில் வைத்துக் கொண்டு நித்யங்கள் நித்யேச்சாஸித்தங்களாயிருக்கும். அநித்யங்கள் காலாவச்சிந்நங்களாகையாலே அநித்யேச்சா ஸித்தங்களாயிருக்கும். நித்யங்களுக்குநித்யேச்சாஸித்தத்வமாவது—இவனுடைய இச்சை இல்லாதபோது அநித்யம்போலே இல்லையாக ப்ரஸங்கிக்கும் என்னும்படி நிற்கை. இவ்வர்த்தத்தை

1 ‘ इच्छात एव तव विश्वपदार्थसत्ता ’

( இச்சாத ஏவ தவ விஶ்வபதார்த்த ஸத்தா)

என்கிற ஶ்லோகத்தாலே ஆழ்வான் அருளிச்செய்தார். இவற்றில் ஸ்வரூபாயத்தமாகையாலே ஆதேயத்வமும், இச்சாயத்தமாகையாலே ஆதேயத்வத்தோடே கூட விதேயத்வ ஶேஷத்வங்களும் தோற்றுகின்றன.

2 ‘ उपादत्ते सत्ता स्थिति नियमनाद्यैः चिदचितौ स्वमुद्दिश्य श्रीमान् ’

( உபாதத்தே ஸத்தா ஸ்த்திதி நியமநாத்யை: சிதசிதௌ ஸ்வமுத்திஶ்ய ஸ்ரீமாந் )

என்கிறபடியே ஈஶ்வரேச்சோபாத்தங்களாயிறேஇவை இவனுக்கு சேஷங்களாகிறன.

த்ரிவித சேதநர் என்றது அநுவ்ருத்தஸம்ஸாரராயும், நிவ்ருத்த ஸம்ஸாரராயும்ஸம்ஸாராத்யந்தாபாவவான்களாயுமுள்ளபரதந்த்ர சேதநர்களைச் சொல்லுகிறது. பத்த சேதநர் தங்களுக்கே முக்த தசையாகையாலே தர்மிபேதம் இல்லையாயிருக்க, நித்யருக்குப் போலே முக்தருக்கும் பத்தரிற் காட்டில் அத்யந்த வைஷம்யம் தோற்றுகைக்காக ஜீவ த்ரைவித்யம் சொல்லப்படுகிறது. த்ரிவித சப்தம் த்வந்த்வாத் பூர்வமாகையாலே அசேதந சப்தத்தோ

1 ஸ்ரீ வைகுண்ட ஸ்தவம்—36. விச்வபதார்த்த ஸத்தா - எல்லா வஸ்துக்களினுடைய இருப்பு; தவ - உம்முடைய, இச்சாத ஏவ - ஸங்கல்பத்தினாலேயே.

2 ஸ்ரீரங்கராஜ ஸ்தவம்—உத்—87. ஸ்ரீமாந் - ச்ரிய:பதியானபகவான், சிதசிதௌ - சேதநாசேதநங்களாகிற வஸ்துக்களை, ஸத்தா ஸ்திதி நியமநாத்யை: - ஸ்ருஷ்டிப்பது, அவை நீடித்திருப்பது, அவற்றை நியமனம் செய்வது, முதலியவைகளினால், ஸ்வமுத்திச்ய - தன்னுடைய ப்ரயோஜனத்திற்காகவே, உபாதத்தே - பரிக்ரஹிக்கிறான்,

டும் அந்வயிக்கிறது. த்ரிவித அசேதநங்கள் என்றது வ்யக்தா வ்யக்த காலங்கள் என்று(ம்) சிலர் சொல்லுவர்கள். அவர்களும் த்ரிகுண கால விலக்ஷணமான சுத்தஸத்த்வரூப அசேதநத்தை ஈஶ்வர நிரூபணத்திலே சுபாஶ்ரய விக்ரஹாதி ரூப விசேஷண மாகச் சேர்த்து அநுஸந்திப்பர்கள். த்ரிகுண கால சுத்த ஸத்த்வங்கள் என்கிற மூன்றையும் த்ரிவித அசேதநங்கள் என்று சிலர் நிர்வஹிப்பர்கள். இவற்றை அசித்துக்கள் என்றும் அசேதநங்கள் என்றும் சொன்னது இவற்றிற்கு ஜ்ஞாநாஶ்ரயத்வமில்லாமையடியாக வாகையாலே. 'அப்ராக்ருத அசித் என்று ஒன்றைச் சொல்லலாமோ ? அப்ராக்ருத ஆத்மாவைப் போலே சித் என்ன வேண்டாவோ ?' என்கிற சோத்யத்திற்கு ப்ராக்ருதங்களன்றிகேகே அசித்துக்களாயிருக்கிற காலாதிகளை த்ருஷ்டாந்தமாக்கிப் பரிஹாரம் சொல்லுவது. அசேதநத்வம் உண்டாயிருக்க ஜ்ஞாந ரூபத்வ வசந பலத்தாலே தர்மபூத ஜ்ஞாநத்திற்குப் போலே சுத்தஸத்த்வத்திற்கும் சித்சப்த வாச்யத்வமும் உண்டென்று சிலர் சொல்லுவர்கள். இங்கு அசேதநத்வம் ஒரு ஜ்ஞாநத்திற்கு ஆஶ்ரயமல்லாத தர்மபூத ஜ்ஞாநத்திற்கும் ஸமாநம். இது த்ரிவித சேதந உபபாதநத்திலே விசேஷணமாய்க் கொண்டு ப்ரதிபாதிதமாகையாலே பிரியச்சொல்லப்பட்டதில்லை. ஸர்வ வஸ்துக்களுக்கும் ஸாதர்ம்யமும் வைதர்ம்யமும் ப்ரமாண நியதமாகையாலே யதாப்ரமாணம் அங்கீகார்யம்.

இச்சேதநாசேதநங்களுக்கு ஸ்வரூபமாவது—ஸ்வாஸாதாரணமான தர்மத்தாலே நிரூபணீயமான தர்மி. ஸ்த்திதியாவது—இதனுடைய காலாந்தராநுவ்ருத்தி. ப்ரவ்ருத்தியாவது—வ்யாபாரம். நிவ்ருத்திரூப வ்யாபாரமும் ப்ரவ்ருத்தி விசேஷம்.

இச்சேதநாசேதநங்களுடைய ஸ்வரூப ஸ்த்திதி ப்ரவ்ருத்திகள் மூன்றுக்கும் பேதம் என்றது அவ்வோ ப்ரமாணங்கள் சொன்ன பிரிவு. இங்கே 'ஸ்வாதீந' இத்யாதியாலே நாநா ப்ரகாரமான ஈஶிதவ்ய பேதத்தையும், ஈஶிதவ்யங்களில் சேதநாசேதநபேதத்தையும், அவைத(ம்மி)ன்னில் அவாந்தர பேதத்தையும் தர்ம தர்மி பேதத்தையும், வேதாந்த ஸித்தாந்ததில் ப்ரதாநப்ரதிதந்த்ரங்களையும், பேத அபேத கடக ஶ்ருத்யாதிகளின்படியே யதுநுஸந்திப்பது, இந்த ஈஶ்வர தத்த்வத்தையும் ஈஶிதவ்ய தத்த்வங்களையும் இப்படிப் பிரிய அநுஸந்தித்து ஏக தத்த்வம் என்பார்

ஸ்வநிஷ்ட்டமான விஶிஷ்ட தத்த்வம் ஏகம் என்கையிலே தாத்பர்யம்.

இவ்வீஶ்வர தத்த்வம் இருக்கும்படியை

1 ' एकः शास्ता न द्वितीयोऽस्ति शास्ता '

( ஏகஶ்ஶாஸ்தா ந த்விதீயோஸ்தி ஶாஸ்தா)

2 ' शास्ता विष्णुरशेषस्य ' (ஶாஸ்தா விஷ்ணுரஶேஷஸ்ய)

3 ' जगत् सर्वं शरीरं ते '( ஜகத் ஸர்வம் ஶரீரம் தே )

4 ' सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ' (ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:)

இத்யாதிகளில் கண்டு கொள்வது.

த்ரிவித சேதநருடைய ப்ரகாரங்களை

5 ' ब्रह्माद्याः सकला देवाः मनुष्याः पशवस्तथा ।
विष्णुमायामहावर्तमोहान्धतमसावृताः ॥ '

( ப்ரஹ்மாத்யாஸ் ஸகலா தேவா: மநுஷ்யா: பஶவஸ்ததா।
விஷ்ணுமாயா மஹாவர்த்த மோஹாந்த தமஸாவ்ருதா: )

---

1 பாரதம் - ஆச்வ - 27 - 1 சாஸ்தா - நியமிக்கிறவன், ஏக: -- ஒருவனே, த்விதீய: - இரண்டாவது ( வேறொரு ), சாஸ்தா - நியமிக்கிறவன், நஅஸ்தி-இல்லை.

2 விஷ்ணு புராணம் - 1-17-20 அசேஷஸ்ய - எல்லா வஸ்துக்களுக்கும், சாஸ்தா - நியமிப்பவன், விஷ்ணு: - பகவான்.

3 ராமா - யுத்த - 120 - 25 ஜகத் ஸர்வம் – எல்லா லோகமும், தே - உமக்கு,சரீரம் உடல்

4 கீதை-11- 40 ஸர்வம் - எல்லா வஸ்துக்களையும், ஸமாப்நோஷி - அந்தர்யாமியாக இருந்து வ்யாபித்திருக்கிறாய், தத:-ஆகையினால், ஸர்வ: - எல்லா வஸ்துக்களாகவும், அஸி – ஆகிறாய், அன்றிக்கே எல்லாப் பதங்களினாலும் சொல்லப்படுகிறவனாகிறாய்.

5 விஷ்ணுபுராணம்-5-30-17 ப்ரஹ்மாத்யா: - ப்ரஹ்மா முதலிய, ஸகலா: - எல்லா, தேவா: - தேவதைகளும்,மநுஷ்யா: - மனிதர்களும், ததா - அப்படியே, பசவ: – பசுக்களும்(ம்ருகங்களும்), விஷ்ணுமாயா பகவானுடைய ப்ரக்ருதியாகிற, மஹாவர்த்த-பெரியசுழலில்இருக்கிற, மோஹ - அஜ்ஞாநமாகிற, அந்ததமஸ - இருட்டினால் ஆவ்ருதா: - மறைக்கப்பட்டவைகள்.

1 'इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥'

(இதம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா: |
ஸர்கேபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச || )

2 'यद्वै पश्यन्ति सूरयः'

( யத்வை பஶ்யந்தி ஸூரய: )

இத்யாதிகளிலே அறிவது.

த்ரிவித அசேதநத்தின் படியை

3 'अचेतना परार्था च नित्या सतत विक्रिया ।
त्रिगुणा कर्मिणां क्षेत्रं प्रकृते रूपमुच्यते ॥'

( அசேதநா பரார்த்தா ச நித்யா ஸதத விக்ரியா |
த்ரிகுணா கர்மிணாம் க்ஷேத்ரம் ப்ரக்ருதே ரூபமுச்யதே || )

4 'अनादिः भगवान् कालः नान्तोऽस्य द्विज विद्यते ।
अव्युच्छिन्नाः ततस्त्वेते सर्गस्थित्यन्त संयमाः ॥'

---

1 கீதை - 14 - 2 இதம் - இந்த, ஜ்ஞாநம் - ஜ்ஞாநத்தை, உபாச்ரித்ய - அடைந்து, மம - என்னுடைய, ஸாதர்ம்யம் - ஸமமான தர்மத்தை (உடைத்தாயிருக்கையை) ஆகதா: - அடைந்தவர்கள், ஸர்க்கேபி - ஸ்ருஷ்டி காலத்திலும் நோபஜாயந்தே - பிறப்பதில்லை, ப்ரளயே-ப்ரளய காலத்திலும், ந வ்யதந்தி - நாசமடைவதில்லை.

2 விஷ்ணுபுராணம்-1-9-39 ஸூரய: - நித்யஸூரிகள், யத் - எந்தப் பகவானுடைய (ஸ்தாநமாகிய பரமபதத்தை), பச்யந்தி-(எப்பொழுதும்) பார்த்துக்கொண்டிருக்கிறார்களோ.

3 பரமஸம்ஹிதை - 2 அசேதநா - அறிவில்லாதது, பரார்த்தா-அயலாருடைய ப்ரயோஜனத்தையே தனக்கு ப்ரயோஜனமாகவுடையது, நித்யா - அழிவில்லாதது, ஸததவிக்ரியா - எப்பொழுதும் மாறுதலை அடையும் தன்மையையுடையது, த்ரிகுணா - ஸத்த்வம் முதலியமூன்று குணங்களுக்கு ஆச்ரயமானது, கர்மிணாம் - புண்ய பாப ரூப கர்மங்களைச் செய்தவர்களுக்கு, க்ஷேத்ரம் - அந்தந்தக் கர்மங்களின்பலனாகிய ஸுக துக்கங்களுக்கு உத்பத்தி ஸ்தாநம், அதாவது அவைகளை அனுபவிக்கும் இடமாகிய சரீரம் (என்று), ப்ரக்ருதே: - ப்ரக்ருதியினுடைய, ரூபம் - ஸ்வரூபம், உச்யதே - சொல்லப்படுகிறது.

4 விஷ்ணுபுராணம்—1-2-26. பகவாந் கால: - பகவானாகிய காலம், அநாதி: -உத்பத்தியில்லாதது, த்விஜ - ப்ராஹ்மண! (மைத்ரேய

( அநாதி: பகவாந் கால: நாந்தோஸ்ய த்விஜ வித்யதே ।
அவ்யுச்சிந்நாஸ் ததஸ்த்வேதே ஸர்க ஸ்த்தித்யந்த ஸம்யமா:॥ )

1 ' दिव्यं स्थानमजरं चाप्रमेयं दुर्विज्ञेयं चागमैः गम्यमाद्यम् '

( திவ்யம் ஸ்த்தாநமஜரம் சாப்ரமேயம் துர்விஜ்ஞேயம்ச ஆகமை: கம்யமாத்யம் )

இத்யாதிகளிலே காண்பது. தமஸ்ஸுக்கு அநந்தரமாய் அக்ஷரம் என்று ஓதப்பட்ட த்ரிகுணபரிணாமவிசேஷமே பரமபதம் என்றும், காலமும் இப்படியே ஒரு த்ரிகுண பரிணாமம் என்றும் சொல்லு கிற பேதாபேத வாதிகளுக்கு ப்ரமாண அபாவமும் ப்ரமாண விரோதமும் ஸ்வ வசந விரோதமும் கண்டுகொள்வது.

இப்படி விவேகித்தவன்

2 ' நான் உன்னை அன்றி இலேன் '

என்கிறபடியேஅவனுடைய ஸத்தையாலேதனக்குஸத்தைஎன்றும்

3 ' அதுவும் அவனதின்னருளே '

என்கிறபடியே அவனுடைய வ்யாபாரத்தாலே தன்னுடைய உபா யாதி வ்யாபாரம் என்றும்,

4 ' தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே

---

னே), அஸ்ய - இந்தக் காலத்திற்கு, அந்த:-முடிவும், நவித்யதே-இல்லை, தத: து - ஆகையினால் தான், ஏதே-இந்த, ஸர்க்க - ஸ்ருஷ்டி, ஸ்திதி -ரக்ஷணம், அந்த-முடிவு(ப்ரளயம்] இவைகளின், ஸம்யமா:- நியமநங் கள், அவ்யுச்சிந்நா: - விட்டுப்போகாமல் இருக்கின்றன, அதாவது இடைவிடாமல் இருக்கின்றன என்றபடி, ' ஸம்யம ' என்று பகவானை அடைவதாகிய மோக்ஷத்தைச் சொல்லுகிறதாகவுமாம், அன்றிக்கே காலத்தை சரீரமாகவுடைய பகவான் என்றும் கூறலாம், பகவானு டைய விபூதியாகையால் ' பகவாந் கால: 'என்கிறது.

1 திவ்யம் ஸ்தாநம் - உத்க்ருஷ்ட மாகிய இடமான சுத்த ஸத்த்வமானது, அஜரம் - கிழத்தனம் முதலிய வை இல்லாதது, அப்ரமேயம் - அளவிட்டறியமுடியாதது, அன்றிக்கே மற்ற ப்ரமாணங்களினால் அறிய முடியாதது , துர்விஜ்ஞேயம் - ப்ரத்ய க்ஷத்தினால் அறியமுடியாதது. ஆகமை: - சாஸ்த்ரங்களினால், கம்யம் அறியத்தக்கது, ஆத்யம் - எல்லாவற்றிற்கும் முதலானது.

2 நான் திருவந்-7 3 திருவா -3-3-3, 4திருவாய் - 2 - 9 - 4

எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே ’

என்கிறபடியே அவன் ப்ரயோஜந விசேஷத்தாலே (விஷயமாகத் தனக்கு ப்ரயோஜந (விசேஷ)ம் என்றும் தெளிந்து, ஸ்வாதிகாரானுகுணமாக ஸ்வரூப ப(ர)ர ப(ஃ)ல ஸமர்ப்பணத்தாலே இவை மூன்றிலும் நிர்மமனாய் வர்த்திக்கும்.

त्रिविधचिदचिदेकतन्त्रलक्ष्ये यतिपति यामुनभाषितेऽनुयोक्तुः ।
इदमिति निगमान्तदेशिकेन प्रतिसमदिश्यत माधवात्मजस्य ॥

*த்ரிவித சிதசிதேகதந்த்ரலக்ஷ்யே
யதிபதி யாமுந பாஷிதே அநுயோக்துः ।
இதமிதி நிகமாந்த தேசிகேந
ப்ரதிஸமதிச்யத மாதவாத்மஜஸ்ய ॥

सत्वस्थान् निभृतं(तः) प्रसादय सतां वृत्तिं व्यवस्थापय
त्वस्यन्नह्मविदागसस्तृणमिव त्रवर्गिकान् भावय ।
नित्ये शेषिणि निक्षिपन् निजभरं सर्वंसहे श्रीसखे
धर्मं धारय चातकस्य कुशलिन् धाराधरैकान्तिनः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेंकटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु

श्रीतत्त्वसन्देशः संपूर्णः

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

* த்ரிவித - மூன்றுவிதங்களான, சித் - சேதன வஸ்துக்கள், அசித் - அசேதந வஸ்துக்கள், இவைகள் எல்லாம், ஏகதந்த்ர - பகவான் ஒருவனுக்கு வசப்பட்டவைகள் என்பதை, லக்ஷ்யே - தாத்பர்யமாகவுடைய(குறிக்கிற), யதிபதி - பாஷ்யகாரர், யாமுந முநி - ஆளவந்தார் இவர்களுடைய, பாஷிதே - வாக்யத்தில், அநுயோக்துः-ப்ரச்நம் செய்தவனாகிய, மாதவாத்மஜஸ்ய - மாதவனுடைய குமாரனுக்கு, நிகமாந்த தேசிகேந - வேதாந்தாசார்யர் என்கிற ஆசார்யனால், இதமிதி - இது என்று, ப்ரதிஸமதிச்யத - பதில் சொல்லப்பட்டது.

** ஸத்த்வஸ்த்தாந் நிப்ருதம்(த்:) ப்ரஸாதய
ஸதாம் வ்ருத்திம் வ்யவஸ்த்தாபய
த்ரஸ்ய ப்ரஹ்மவிதாகஸ:
த்ருணமிவ த்ரைவர்க்கிகாந் பாவய ।
நித்யே சேஷிணி நிக்ஷிபந்
நிஜபரம் ஸர்வம் ஸஹே ஸ்ரீஸகே
தர்மம் தாரய சாதகஸ்ய குசலிந்
தாராதரைகாந்திந: ॥

இப்படி கவிதார்க்கிக ஸிம்ஹமும் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத்வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளுள்
ஸ்ரீ தத்த்வ ஸந்தேசம் முற்றிற்று.

**சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்**

---

** நிப்ருதம் - அவதானத்துடன், (நிப்ருத: -அவதாநத்துடன்கூடினவனாய்), ஸத்த்வஸ்தாந் - பாகவதர்களை, ப்ரஸாதய - க்ருபையுடையவர்களாகச் செய்து கொள், ஸதாம் - ஸத்துக்களின், வ்ருத்திம் - அநுஷ்ட்டானத்தை, வ்யவஸ்த்தாபய - நிலை நிற்கும்படி செய்,ப்ரஹ்ம விதாகஸ: - ப்ரஹ்ம வித்துக்களுடைய அபசாரத்திலிருந்து, த்ரஸ்ய - பயப்படு(நடுங்கு), த்ரைவர்க்கிகாந் - தர்மம், அர்த்தம், காமம் எனப்படும் மூன்று பலன்களில் ஆசையுடையவர்களை, த்ருணமிவ - புல்லைப் போல, பாவய - எண்ணியிரு, நித்யே - நித்யனும், சேஷிணி - ஸ்வாமியாயும், ஸர்வம் ஸஹே - எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ளுமவனுமிருக்கிற, ஸ்ரீ ஸகே - ச்ரிய:பதியினிடத்தில், நிஜபரம்- த(உ)ன்னுடைய ஆத்மரக்ஷணபரத்தை, நிக்ஷிபந் - ஸமர்ப்பித்துவிட்டு, குசலிந் - க்ஷேமத்தை அடையக்கூடியவனே ! தாராதரைகாந்திந: - மேகம்ஒன்றையே எதிர் பார்த்திருக்கும், சாதகஸ்ய - சாதக பக்ஷியின், தர்மம் - ஸ்வபாவத்தை, தாரய - தரித்துக்கொண்டிரு.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

ஸ்ரீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்





சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்

பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# பத்தாவது ரஹஸ்யம்
# ஸ்ரீ ரஹஸ்யஸந்தேசம்

[ இது அம்ருதரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் ஒன்பதாவது.
ஸ்ரீரங்கத்தில் அருளிச்செய்யப்பட்டது]

கட்டளைக் கலித்துறை

யான் அறியும் சுடராகி நின்றேன் மற்றும் யாதுமல்லேன் *
வானமரும் திருமாலடியேன் மற்றோர் பற்றுமிலேன் *
தான்அமுதாமவன்தன் சரணே சரண் என்றடைந்தேன் *
மானமிலா அடிமைப் பணி பூண்ட மனத்தினனே 14

अहमात्मा न देहोऽस्मि विष्णुशेषोऽपरिग्रहः ।
तमेव शरणं प्राप्तः तत् कैङ्कर्यचिकीर्षया ॥

அஹமாத்மா ந தேஹோஸ்மி விஷ்ணுஶேஷோபரிக்ரஹ: ।
தமேவ ஶரணம் ப்ராப்த: தத்கைங்கர்ய சிகீர்ஷயா ॥

அயர்வறும் அமரர்களான அநந்த கருட விஷ்வக்ஸேநாதி களோடு துல்யமாக அபரிச்சிந்ந புருஷார்த்தமான பகவத் கைங்கர்யத்திற்கு ஸ்வரூப யோக்யதை உண்டாயிருக்க, அநாதி மாயையாலே ஸுப்தனாய் அநந்த க்லேஶபாஜநமான ஸம்ஸார

ஸாகரத்திலே அழுந்திக்கிடக்கிற க்ஷேத்ரஜ்ஞன் பரிபூர்ண ப்ரதி புத்தனான ஆசார்யனாலே அத்யந்த ஶோகார்த்தனான அளவிலே, 'நீ அதிதுஷ்கர தர்மங்கள் ஒன்றிலும் அலையவேண்டாம், அப் பாபங்களை எல்லாவற்றையும் விடுவிக்கைக்கு ஸமர்த்தனுமாய் அவஸர ப்ரதீக்ஷனுமாய் நிற்கிற என்னை ஒருவனையுமே ஶரண மாகப்பற்று' என்று ஶரண்யனான ஶ்ரிய:பதிதானே சரமஶ்லோ கத்திலே அருளிச்செய்த ஸர்வாதிகார ஶரணாகதியினுடைய விஷய ஸ்வரூப பரிகர பல விஶேஷங்களை விஶதமாக ப்ரகாஶிப் பிக்கிற த்வயத்திற்கு அபேக்ஷிதார்த்த ஸங்க்ரஹரூபமான திரு மந்திரத்திலே ப்ரக்ருத்யாத்ம விவேகமும் ஜீவேஶ்வரவிவேகமும் பிறந்து,ஸ்வாபாவிக பகவத் ஸம்பந்தத்தை உணர்ந்து, ஔபாதிக தேஹ விபூத்யாதி ஸம்பந்தத்தை இகழ்ந்து, ஸ்வரூபாநுரூப பரம புருஷார்த்த ஸித்திககு ஸ்வாதிகாராநுகுணமான ஸாக ரோபாய விஶேஷத்தைப்பற்றி ஸ்வாமி கைங்கர்ய மநோரதனாய் நிற்கிற நிலையை

(அஹமாத்மா)

என்கிற ஶ்லோகம் ப்ரதிபாதிக்கிறது.

இதில் '*அஹமாத்மாந தேஹோஸ்மி*' என்கிற இரண்டு வாக்யமும்(ப்ரணவத்தில்)த்ருதீயாக்ஷரத்தின்பொருளைச்சொல்லு கிறது- '*அஹம்*' எனகிற பதத்தாலே அநாத்மநி ஆத்ம புத்தி யைக் கழிககிறது. அநேக அவயவ உபசயரூபமான தேஹத்திற் காட்டில் வேறு என்று சொன்ன இது இந்த்ரியங்களில் அந்யதைக்கும் உபலக்ஷணமாகையாலே பஞ்சவிம்ஶகனுடைய தத்த்வாந்தர வைலக்ஷயண்யம் ஸித்தி(பலி)க்கிறது.

'விஷ்ணுஶேஷ:' என்கிறபதம் ப்ரதமாக்ஷரத்தில் ப்ரக்ருதி ப்ரத்யய அர்த்தங்களைக் காட்டுகிறது. (அபரிக்ரஹ:) இதில் விஶேஷ நிர்த்தேஶ ஸ்வாரஸ்யத்தாலும் ஸமாஸ ஸ்வாரஸ்ய(ஸாமர்தய)த்தாலும் விஷ்ணு விற்கே ஶேஷமென்று தோற்றுகையாலே அந்யஶேஷத்வத் தையும் கழிக்கிற நமஸ்ஸில் அர்த்தத்தையும் காட்டுகிறது.

இந்நமஸ்ஸாக தன்னிலே விவக்ஷிதமான பகவச்சரணாரவிந்த ஶரணாகதியை தத்ப்ரேரிதனாய்க்கொண்டு தான் பண்ணின ப்ரகாரம் 'தமேவ ஶரணம் ப்ராப்த:' என்று சொல்லப்படுகிறது

'தத்கைங்கர்ய சிகீர்ஷயா' என்கிறபதம் த்ருதீய பதத்தில் ப்ரக்ருதி ப்ரத்யயாம்ஶ தாத்பர்யத்தை ஸங்க்ரஹிககிறது.

இதில் அர்த்த க்ரமத்தைப் பார்த்தால் தேஹாதி விலக்ஷணனாய் ஜ்ஞாதாவாய் ஜ்ஞாந ஸ்வரூபனுமாய் இரண்டு படியாலும் ப்ரத்யக்காய் பகவதேக ஶேஷபூதனாய் நிருபாதிக ஶேஷித்வாதி ரஹிதனான நான் நிரவதிக பகவத்கைங்கர்யரஸ லாபார்த்தமாக அவன்தன்னையே ஶரணமாகப் பற்றினேன் என்று ப்ரபந்நனுடைய ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநம் சொல்லுகிறது. ந்யஸ்தபரனுக்கும் இது ஸ்வ பர ஸந்தோஷார்த்தமாக நித்யம் அநுஸந்தேயம்.

கட்டளைக் கலித்துறை

சீலம் கவர்ந்திடும் தேசிகர் தேசின் பெருமையினால் *
தூலங்களன்ன துரிதங்கள் மாய்ந்தன * துஞ்சல் தரும்
கோலம் கழிந்திடக், கூறிய காலம் குறித்து நின்றோம் *
மேல் இங்கு நாம் பிறவோம், வேலைவண்ணனை மேவுதுமே.

श्रीमद्वेङ्कटनाथेन शिष्याणां हितमिच्छता ।
इत्थं रहस्य सारार्थः संगृह्य समद(दि)श्यत ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु

श्री रहस्यसन्देशः संपूर्णः ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

---

* சிஷ்யாணாம் - (தன்னை ஆச்ரயித்த) சிஷ்யர்களுக்கு, ஹிதம் - நன்மையை, இச்சதா - விரும்பிக்கொண்டிருக்கிற. ஸ்ரீமத்வேங்கடநாதேந - ஸ்ரீமத் வேங்கடநாதன் என்னும் ஆசார்யனால், ரஹஸ்ய ஸாரார்த்த: - ரஹஸ்யங்களின் ஸாரமான அர்த்தம், ஸங்க்ருஹ்ய -சுருக்கமாக, இத்தம் - இப்படி, ஸமத்ருச்யத - நன்றாகக் காட்டப்பட்டது, ஸமதிச்யத (உபதேசிக்கப்பட்டது)

ஸ்ரீமத் வேங்கடநாதேந ஶிஷ்யாணும் ஹிதமிச்சதா ।
இத்தம் ரஹஸ்யஸாரார்த்த:ஸங்க்ருஹ்ய ஸம(த்ரு)திஶ்யத।

இப்படி கவிதார்க்கிகஸிம்ஹமும் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத்வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளுள்
ஸ்ரீ ரஹஸ்ய ஸந்தேசம் முற்றிற்று.

**சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளேசரணம்**

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்





*சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்*
*பார் ஒன்றச்சொன்ன பழமொழியுள்*

# பதினோராவது ரஹஸ்யம்.

# ரஹஸ்யஸந்தேசவிவரணம்

*[இது அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் பத்தாவது ஸ்ரீரங்கத்தில் அருளிச்செய்யப்பட்டது]*

ரஹஸ்யஸந்தேசத்தில் 'சரணாகதியினுடைய விஷய ஸ்வரூப பரிகர பல விசேஷங்களைப்ரகாசிப்பிக்கிறது த்வயம்' என்கிற இடத்தில், விஷயவிசேஷமாவது—சரண்யாந்தரங்களுமன்றிக்கே ஸ்வரூபமாத்ரமுமன்றிக்கே பத்நீ ஸம்பந்தகுணவிக்ரஹவிசிஷ்டனான ஸர்வேச்வரன். ஸ்வரூப விசேஷமாவது—அசேஷகரத்வ சிரகால ஸாத்யத்வாதிகளையுடைத்தான உபாஸநாதிகளிற் காட்டிலும் அதின் பரிகரங்களிற் காட்டிலும் வேறுபட்ட பரந்யாஸம். பரிகரவிசேஷமாவது—யமநியமாதிகளான உபாஸநாந்தரங்கங்களிலுமபக்தி பரபக்திகளிலும் காட்டில் வேறுபட்ட ஆநுகூல்ய ஸங்கல்பாதி பஞ்சகம். பல விசேஷமாவது—ஐச்வர்ய கைவல்ய ரூப ப்ரயோஜநாந்தரங்களிலும் பகவத் ஸாலோக்யாதி மாத்ரத்திலும் வ்யாவ்ருத்தமாய் தேசகாலாதி பரிச்சேதம் இல்லாத கைங்கர்யபர்யந்தமான பரிபூர்ண ப்ரஹ்மாநுபவம்.

'சீலம் கவர்ந்திடும்' என்கிற பாட்டாலே ஸதாசார்ய ப்ரஸாதமடியாகத் தனக்கு வருகிற பரம புருஷார்த்த லாபத்தை அநுஸந்திக்கிறான்.

'சீலம் கவர்ந்திடும்' என்றது ஆத்ம குணங்களையும் ஆசாரத்தையும் அங்கீகரிக்குமவர்கள் என்றபடி. 'தேசிகர்' என்றது

ஆஶ்ரிதரை வழியில்லாவழி போகாதபடி விலக்கி நல்வழி காட்டுகைக்கு நிலவர் என்றபடி. 'தேசின் பெருமையினால்' என்றது ஸர்வேஶ்வரன் இவர்களை அநுபந்திகளோடும் கூட ரக்ஷிக்கக்கடவோம் என்னும்படி பண்ணின ஆத்மாத்மீய பரந்யாஸ ப்ரபாவத்தாலே என்றபடி. 'நூலங்களன்ன துரிதங்கள் மாய்ந்தன' என்றது

1 'போய பிழையும் புகுதருவா நின்றனவும் தீயினில் தூசு ஆகும்'

என்று உபநிஷத்துச் சொன்னபடியே உத்தர பூர்வாகங்கள் கழிந்தபடியைக் கணிசிக்கிறது. 'துஞ்சல் தரும் கோலம்' என்றது

2 'अनादि मायया सुप्तः' (அநாதி மாயயா ஸுப்த:)

என்கிறபடியே ஆத்ம பரமாத்மாதி ஜ்ஞாநமில்லாதபடி பண்ணுகிற ப்ராக்ருத ஶரீரம் என்றபடி. 'கழிந்திடக்கூறிய காலம்' என்றது ப்ராரப்த ஶரீரமாகிற சிறையை ஸ்வதந்த்ரனான ஸ்வாமி மாற்றுகைக்கு ப்ரமாண நியதமான ஸமயம் என்றபடி. 'குறித்து நின்றோம்' என்றது இதற்கு ஸ்வயத்நாபேக்ஷையற ஓடம் பார்த்திருப்பார்க்கு ஓடம் வருமா போலே இது ஸ்வயமாகதமாய் அணித்தாகப் பெற்றோம் என்றபடி. 'மேல் இங்கு நாம் பிறவோம்' என்றது ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே ஶரீராந்தர ஹேதுவான ப்ராரப்த கர்மாம்ஶமும் கழியப்பெற்ற நாம் இருள் தருமா ஞாலத்துள் துக்க ஹேதுவான ஶரீரபரிக்ரஹம் பண்ணோம் என்றபடி. 'வேலை வண்ணனை மேவுதுமே' என்றதுஸம்ஸார ஶ்ரம பரிதாப ஶமநமான திருமேனியையுடையனான ஸ்ரீ வைகுண்டநாதனை கெடு மரக்கலம் கரை சேர்ந்தாற் போலே சேரக் கடவோம் என்றபடி.

---

1 திருப்பாவை—5 2 அநாதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தினாலே தூங்கிக்கொண்டிருக்கிற.

இப்படி ஸர்வாநிஷ்ட நிவ்ருத்தியும் நிரதிஶயாநந்தரூப பரிபூர்ண பகவதநுபவமும் உண்டாம்படி 'கூட்டரிய திருவடிக் கள் கூட்டினை நான் கண்டேன்' என்று க்ருதக்ருத்யனை தான் க்ருதார்த்தனாகிறான்.

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु

श्री रहस्य सन्देश विवरणं संपूर्णम्

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

இப்படி கவிதார்க்கிக ஸிம்ஹமும் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத் வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீஸூக்திகளுள்
ஸ்ரீரஹஸ்ய ஸந்தேச விவரணம் முற்றிற்று

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

  

சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்
பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# பன்னிரண்டாவது

# ஸ்ரீ தத்த்வரத்நாவளீ

[ இது அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் பதின்மூராவது
ஸ்ரீரங்கத்தில் அருளிச்செய்யப்பட்டது ]

**கட்டளைக் கலித்துறை**

வண்மையுகந்த அருளால் வரம் தரு மாதவனார் *
உண்மை உணர்ந்தவர் ஓதுவிக்கின்ற உரை வழியே *
திண்மை தரும் தெளிவொன்றால் திணியிருள் நீங்கிய நாம்*
தண்மை கழிந்தனம்(நம்)தத்துவம் காணும் தரத்தனமே. 16

**ஜீவ தத்த்வம்**

ஸதாசார்யோபதேஶ பூர்வகமாக அறியவேண்டிய தத்த்வ த்ரயத்தில் ஜீவதத்த்வமாவது—ஸ்வரூபத்தாலும் ஸாமர்த்யத்தாலும் பரிச்சிந்நமான அஹமர்த்தம். 1

த்ரிவித ஜீவவர்க்கத்திநுடைய ஸ்வரூபாதிகளெல்லாம் ஸர்வரக்ஷகனான ஶ்ரிய:பதிக்கு அநந்யார்ஹ நிருபாதிக ஶேஷ பூதங்கள் என்று நிகமாந்தங்களில் நிர்ணீதமாகையாலே இஜ் ஜீவன் தன் ஸ்வரூபத்திலும் தனக்குள்ள அதிஶயங்களிலும் தான் செய்யும் சேஷவ்ருத்திகளிலும் தனக்கு ப்ரதாந ஶேஷித்

வமும் உபகார ப்ரத்யுபகாரப்ரஸங்கமுமற(மில்லையென்று) ஸர்வாவஸ்த்தையிலும் நிர்மமனாயிருக்க ப்ராப்தன். 2

இவனுடைய ஸ்வரூப ஸ்த்தி(ஶக்)த்யாதிகளெல்லாம் பரதந்த்ரங்களாயிருக்கையாலே தன்னையும் பிறரையும் பற்ற இவன் நிரபேக்ஷ(க) ரக்ஷகனல்லன் 3

ஶேஷத்வத்தாலே ஸ்வாமிக்கு இஷ்ட விநியோக யோக்யனாயிருக்கும். 4

பாரதந்த்ர்யத்தாலே யதேஷ்ட விநியுக்தனும். 5

1 ' அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன் ' என்கிறதற்கு ஸ்வார்த்த ப்ரவ்ருத்தனான ஸ்வாமியுடைய க்ருதக்ருத்யதையிலும் அவனுடைய விநியோக விசேஷத்தாலே க்ருதார்த்தனான தாஸபூதனுடைய க்ருதார்த்த(ஜ்ஞ)தையிலும் தாத்பர்யம். 6

இச்சேஷத்வ பாரதந்த்ர்யங்களும் நித்ய ஸித்த ஜ்ஞாநாநுஷ்ட்டான ஸாமர்த்யங்களும்கூட ஸ்வதந்த்ர ஸ்வாமி ஸம்மதங்களான உபாய பல விசேஷங்களுக்கு உபயுக்தங்களாம் 7

இஜ்ஜீவதத்த்வம் ஆதேயத்வ விதேயத்வ சேஷத்வ நியமத்தாலே ' உடன் மிசை உயிர் ' எனக் கரந்து நிற்கிற உயர்வற உயர் நலம் உடையவனுக்குத் தன்னுடம்பு(போலே)ம் தானும் உடம்பாயிருக்கும். 8

இப்படி ஶரீரதயா பரதந்த்ரமாய் ஶரீரங்களையும் எடுத்து ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வாதிகளையுடைத்தாயிருந்தாலும் ஸ்வரூபத்தில் நாமாந்தரம் வரும்படியான அவஸ்த்தா விசேஷங்கள் இல்லாமையாலே ஜீவனுக்கு விசேஷித்து நித்யத்வ நிர்விகாரத்வாதிகளைச்சொல்லுகிறது. 6

ஸ்வரூபநித்யத்வம் சேதநாசேதநங்கள் எல்லாவற்றுக்கும் துல்யம். 10

அசேதந தத்த்வம்

அசேதநமாவது அறிவில்லாத வஸ்து. 11

1 அமலனாதி - 1

இதுஸ்வப்ரகாஶத்திற்கும் பரப்ரகாஶத்திற்கும்(ஃ)பலியல்லா மையாலே இதற்கு ப்ரத்யக்த்வ போக்த்ருத்வங்களில்லை. 12

தன்னையும் பிறரையும் காட்டுகிற ஜ்ஞாநத்திற்கு ஆஶ்ரய மல்லாமையாலே ஸ்வபுத்தி பூர்வ ப்ரவ்ருத்தி லக்ஷண கர்த்ருத் வம் இல்லை. 13

அசேதந த்ரவ்யங்களில் த்ரிகுணம் ஸர்வேஶ்வரனுக்கு லீலா விபூதியாய் ஸம்ஸாரிகளுக்குக் கரண களேபராதி ரூப மாய்க் கொண்டு பரிணமித்துக் கர்மாநுகுண வைஷம்யத்தாலே விஷமங்களான ஆநுகூல்ய ப்ராதிகூல்யங்களை உடைத்தா யிருக்கும். 14

இது தானே இவர்கள் முக்தரானால் ஸ்வாமி விபூதியான வேஷத்தாலே ஸ்வாபாவிகமான ஆநுகூல் யா தி ஶ ய த் தை உடைத்தாம். 15

பூர்வாவஸ்த்தையில் தன்னைப் பற்ற உண்டான ப்ராதி கூல்யமும் பர ப்ரதிகூலமான ஆ கா ர மு ம் முக் த னுக்குத் தோன்று நின்றாலும ஈஶ்வரனுக்குப் போலே இவனுக்கும் (இது) ப்ரதிகூலமாயிராது. 16

ஸத்த்வமாத்ராஶ்ரயமான த்ரவ்யம் போக விபூதியாய் ஸூ ரிஸேவ்யனான ஶ்ரிய:பதிக்கும் ஸூரிகளுக்கும் ஸூரிதுல்ய ஜ்ஞா நவிகாஸம் பெற்ற முகதருக்கும் ஸ்வச்சந்த தேஹாதி ரூபமாய் ஸர்வதா அத்யந்த அநுகூல ரூபமாயிருக்கும். 17

ஸத்த்வாதி குணத்ரயமில்லாத கால த்ரவ்யம் விபூதித்வயத் தையும் வ்யாபித்துநின்றாலும் கல்பாதிவிபாகத்தாலே லீலாவிபூதி யில் விகாரவிசேஷங்களுககு நியாமகமாயிருக்கும். 18

ஜீவாத்ம பரமாத்மாக்களுடைய ஜ்ஞாநமும் குணத்ரய ரஹித மான அசேதந த்ரவ்யமாய் தன்னையும் தான் அல்லாதவற்றை யும் தன் ஆஶ்ரயத்திற்கு ப்ரகாஶிப்பிக்கவற்றாகையாலே சித் ஶப்தவாச்யமாய்த் தான் ஒரு ஜ்ஞாநத்திற்கு ஆஶ்ரயமலலாமை யாலே அசித் ஶப்தவாச்யமுமாய் இருககும். 19

உக்தமான சேதந த்ரவ்யம் ஈஶ்வரனைப் போலே ஆத்மா என்றும், அசேதநத்ரவ்யம் கேவல குணங்களைப்போலே அநாத்மா என்றும் பிரிககப்படும். 20

ஈச்வர தத்த்வம்

ஈஶ்வரன் ஸர்வநியந்தாவான நாராயணன். 21

நித்யாநித்ய ஸர்வவஸ்துக்களும் இவனுடைய நித்ய அநித்ய இச்சாஸித்தங்களாய் இவனாலே வ்யாப்தங்களாய் இவனுக்கு அப்ருதக்ஸித்த ப்ரகாரங்களாய் இருக்கும். 22

இவன் ஸர்வகார்யங்களுக்கும்காரணமாம்போது உபாதாந பூத ஸர்வ தத்த்வங்களுக்கும் அந்தராத்மாவாய் நின்று வாமந த்ரிவிக்ரம ந்யாயத்தாலே விஶிஷ்ட வேஷத்தாலே உபாதாநமுமாய் உபாதேயமுமாம். 23

ஸங்கல்பவிஶேஷங்களாலும் நிமித்தபூத ஸர்வவஸ்துக்களாலும் விஶிஷ்டனாய்க் கொண்டு நிமித்தமுமாம். 24

இவனுக்கு அந்தர்வ்யாப்தியாவது ஸர்வ வஸ்துக்களிலும் தான் இல்லாத இடம் இல்லாதபடி நிற்கை. 25

பஹிர்வ்யாப்தியாவது பரிச்சிந்நவஸ்துக்களுக்குப் புறம்பும் உண்டாகை. 26

ஸர்வ ஶரண்யனான இவனுக்கு ஸ்வரூப குண விபூதிகள் எல்லாவற்றாலுமுள்ள நித்யபரத்வம் உத்தராவதி ரஹிதமாய் இருக்கும். 27

அதில் சீலாதிகளால் வந்த பரபாரம்யம் தானே ஸௌலப்ய பர்யந்தமாம். 28

அதடியாக ஶாஸ்த்ரவிஹித ஸாத்யோபாய வஶீகார்யனான இவன் ஸித்தோபாயமாம். 29

ஸாத்ய ப்ராப்யமான கைங்கர்யத்திற்கு ப்ரதிஸம்பந்தியாய்க் கொண்டு ஸித்தப்ராப்யனும். 30

இந்தத் தத்த்வ ரத்நாவளியில் ஏதேனும் ஒன்றையும் எல்லா ப்ரகாரத்தாலும் தெளிகை ஸர்வஜ்ஞனுக்கல்லது கூடாமை யாலே உபயுக்ததமமான இவ்வளவு தெளிந்தாலும்உபாய (ஃ)பல ஸித்தியுண்டாம்.

நாராயணன் பரன் நாம் அவனுக்கு நிலையடியோம் *
சோராது அனைத்தும் அவன் உடம்பு என்னும் சுருதிகளால் *
சீரார் பெரும் தகைத் தேசிகர் எம்மைத் திருத்துதலால் *
தீரா மயல் அகற்றும் திறம்பாத் தெளிவுற்றனமே. 17

मानतः संमितत्वेपि महती परमार्थतः ।
तत्त्वरत्नावलिरियं सद्भिः धार्या तमोऽपहा ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु

श्री तत्त्वरत्नावलिः संपूर्णा ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

மாநதஸ் ஸம்மிதத்வேபி மஹதீ பரமார்த்ததঃ ।
தத்த்வரத்நாவளிரியம் ஸத்பி: தார்யா தமோபஹா ॥

தத்த்வரத்நாவளீ முற்றிற்று

மாநத: – அளவினால், ஸம்மிதத்வேபி—அளவிடப்பட்டிருந்தபோதி லும், பரமார்த்தத: -உத்க்ருஷ்டங்களான அர்த்தங்களை ப்ரதிபாதிப் பதினால். அன்றிக்கே உண்மையான அர்த்தங்களைச் சொல்லுகிறபடி யினால், அன்றிக்கே மோக்ஷமாகிற பரம ப்ரயோஜனத்தை உண்டாக்கு கிறபடியினால் அதுவுமன்றிக்கேஅதிகமான த்ரவ்யத்தினால்அடையக் கூடியதாகையினால், மஹதீ - பெரியதாயிருக்கிற,தமோபஹா – அஜ் ஞானத் தைப்போக்கடிக்கக்கூடிய, இயம் - இந்த, தத்த்வ ரத்நாவளி: - தத்த்வரத்நாவளீ என்னும் க்ரந்தமானது அன்றிக்கே ரத்னமயமான ஹாரமானது, ஸத்பி: -ஸத்துக்களினால் தார்யா - மார்பில் தரிக்கத் தக்கது,(எப்பொழுதும் த்யானம் செய்யத்தக்கது.)

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

ஸ்ரீநார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்





சி;ாரும் தூப்புல் திருவேங்கடமுடையான்

பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# பதின்மூன்றுவது ஸ்ரீதத்த்வ ரத்னுவளீ ப்ரதிபாத்ய ஸங்க்ரஹம்

[இது அம்ருத ரஞ்ஜனி ரஹஸ்யங்களிவ்பன்னிரண்டாவது ஸ்ரீரங்கத்தில் அருளிச்செய்யப்பட்டது]

தத்த்வ ரத்னுவளியில் முதல் கவியாலும் முடிவில் கவியாலும் ஆசார்யன் பண்ணின க்ருஷி பலித்தபடியைச் சொல்லுகிறது. நடுவுள்ள வாக்யங்களாலே ஒவ்வோர் குழி * முதலாக எட்டுக்குழி விளைந்தபடியைச் சொல்லுகிறது.

இதில் ஜீவவிஷயமான பத்து வாக்யத்திலே ஜீவனுடைய லக்ஷணமும், இவனுடைய ஶேஷத்வ ப்ரகாரமும், பாரதந்த்ர்ய ப்ரகாரமும், ஶேஷதவோபயோகமும், பாரதந்த்ர்யோபயோகமும், உபயஸித்தமானஉசிதஉபயோகவிஶேஷமும்,ஜ்ஞாநாதிஸஹிதோபயோகமும், ஆதேயத்வ விதேயதவ ஸஹித உபயபலமும், உக்த ப்ரகாரங்களாலே ஶங்கித அநித்யத்வாதி பரிஹாரமும், ஸர்வ

* 'ஒவ்வோர் குழி முதலாக' என்றது. ஜீவ தத்த்வத்தை நிருபிக்கும் முதல்வாக்யம் ஒருகுழி, எட்டுக்குழியாக விளைந்தபடியாவதுஎட்டு வாக்கியங்களினுல் மேல் ஜீவாத்ம ஸ்வருபத்தை நிருபிக்கும்ப்ரகாரம், இப்படியே மேல் பதினேராவது வாக்யம் ஒரு குழி. அப்படியே இருபத்தோராவது வாக்யம் ஒரு குழி பத்தாவது இருபதாவது முப்பதாவது வாக்யங்கள் பொதுவான அம்சத்தை நிருபிக்கிற படியினுல்அவைகள் ஒரு குழியாக எடுக்கப்படவில்லை என்று அறியததக்கது.

த்ரவ்யஸாதாரண ஸ்வரூபநித்யத்வமும் என்றிவை பத்தும் ப்ரதிபாத்யம்.

அசேதந விஷயமான பத்து வாக்யத்தில் அசேதநத்தினுடைய லக்ஷணமும், அதனுடைய ப்ரத்யக்த்வ போக்த்ருத்வ அபாவமும், புத்திபூர்வ கர்த்ருத்வ அபாவமும், அசேதந த்ரவ்யங்களில் த்ரிகுணத்திற்கு கர்மவஶ்யரைப் பற்ற (உண்டான) ப்ராதிகூல்யாதி ப்ரகாரமும், அகர்மவஶ்யரைப்பற்ற இதனுடைய ஆநுகூல்யாதிஶயமும்ப்ராதிகூல்யஶங்காபரிஹாரமும், பரமபதத்தினுடைய போக்யதாதிஶயமும், காலத்தின் ப்ரகாரமும், தர்மபூதஜ்ஞாநத்தின் ப்ரகாரமும், இவற்றினுடைய அநாத்மத்வமும் என்றிவை பத்தும் ப்ரதிபாத்யம்.

பர தத்த்வ விஷயமான பத்து வாக்யத்தில் ஈஶ்வரனுடைய லக்ஷணமும், இவனுடைய நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யாதிகளும், உபாதாநகாரணத்வ ப்ரகாரமும், நிமித்த காரணத்வ ப்ரகாரமும், அந்தர்வ்யாப்தி ஸ்வரூபமும், பஹிர் வ்யாப்தி நியமமும், ஸர்வ ப்ரகார பாரம்யமும், ஸௌலப்ய விஶேஷமும் ஸித்தோபாயத்வமும் ஸித்த ப்ப்ராப்யத்வமும் என்றிவை பத்தும் ப்ரதிபாத்யம்.

நிகமந வாக்யத்தில் இவ்வளவு தெளிவு கொண்டும் ஈடேறலாம் என்று சேதநரைத் தேற்றுகிறது.

மேல் அநுஷ்டுப்பில் இதின் சிறுமை கண்டு இகழாதே சீர்மையைக் கண்டு சிந்தாமல் கொள்ளச் சொல்லுகிறது.

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य

श्रीमद्वेंकटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु

श्री तत्त्वरत्नावलिप्रतिपाद्य संग्रहः संपूर्णः

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

இப்படி கவிதார்க்கிக ஸிம்ஹமும் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத்வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளுள்
தத்த்வரத்நாவளி ப்ரதிபாத்ய ஸங்க்ரஹம் முற்றிற்று

**சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்**

ஸ்ரீ

ஆழ்வார் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்





சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்

பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# பதின்மூன்றாவது ரஹஸ்யம்

# ஸ்ரீ ரஹஸ்ய ரத்னாவளீ

[ இது அம்ருதரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் பதின்மூன்றாவது ஸ்ரீரங்கத்தில் அருளிச்செய்யப்பட்டது]

[ 1—10 திருமந்திரத்தில் ப்ரணவம், த்வயத்தில் பூர்வகண்டம், சரம ச்லோகத்தில் பூர்வார்த்தம் இவற்றின் அர்த்தம். 11 21 ப்ரணவ த்வயங்களிலுள்ள நமஸ்ஸின் அர்த்தமும், சரமச்லோகத்தில் உத்தரார்த்தத்தில் ஒரு பாகத்தின்அர்த்தமும் 21—30 திருமந்திரத்தில் சதுர்த்தியிலும், த்வயத்தில் சதுர்த்யந்த பதங்களிலும் ஸ்பஷ்டமாயும் சரமச்லோகத்தில் அர்த்தாத் ஸித்திக்கிறதுமான புருஷார்த்தநிரூபணம்

கட்டளைக் கலித்துறை

ஒன்றே புகல் என்று உணர்ந்தவர் காட்டத் திருவருளால் *
அன்றே அடைக்கலம் கொண்ட நம் அத்திகிரித் திருமால் *
இன்றே இசையில் இணையடி சேர்ப்பர் இனிப் பிறவோம் *
நன்றே வருவதெல்லாம் நமக்குப் பரம் ஒன்றிலதே. 18

ஒரு ஜீவனுக்கு ஒரு ஜீவன் தஞ்சமல்லன். 1

**ஸ்ரீ**மானான நாராயணன் ஒருவனுமேஸர்வஜீவர்களுக்கும் தஞ்சம், 2

இஜ்ஜீவன் அநாதிகாலம் அநுபவிக்கப் பெறாத ஶ்ரிய:பதியைப் பெறுகைக்கு ஹேதுவான உபாயத்தை ரஹஸ்ய த்ரய முகத்தாலே உபதேஶித்து அவ்வழியாலே ஆசார்யன் இவனுக்குத் தஞ்சமாகிறான். 3

ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேஶ்வரனுக்கு ஶேஷமாய் ஸஹ தர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிஶயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிஶயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள். 4

இவளைப் புருஷகாரமாக்க வேண்டுகிறது ஈஶ்வரன் தண்டதரனாகையாலே. 5

இத்தண்ட காரணம் அநாதியான ஆஜ்ஞாதிலங்கநம். 6

இப்படி அபராதாநுரூபமாகத் தண்டதரனாய்ப்போருகிற ஶரண்யனுடைய வஶீகரணங்களில் ப்ரதாநம் ஸர்வாகிஞ்சநாதிகாரமான ஆத்மரக்ஷா பரஸமர்ப்பணம். 7

இது ஸபரிகரமாக ஸக்ருத் கர்த்தவ்யம். 8

இஸ்ஸமர்ப்பணத்தைத் தான் அநுஷ்டிக்கவுமாம், தனக்காக ஆசார்யாதிகள் அநுஷ்டிக்கவுமாம். 9

இதற்குக் கோலி(ரி)ன பலத்தைப் பற்றப் புந: ப்ரபத்தி முதலானகர்த்தவ்ய ஶேஷமில்லை. 10

இப்படி க்ருதக்ருத்யனான ப்ரபந்நனுக்கு வர்ணாஶ்ரமாதி தர்மங்கள் ஸ்வதந்த்ராஜ்ஞாஸித்தங்களான கைங்கர்ய விஶேஷங்கள். 11

இவனுக்கு ஆஜ்ஞாநுஜ்ஞா ஸித்தங்களான கைங்கர்யங்கள் எல்லாம் ஸ்வயம் ப்ரயோஜநங்கள். 12

கரணகரண ரூபங்களான அபசாரங்கள்புகுந்தாலும் ப்ரபந்நனுக்கு நரகாதிகள் இல்லை. 13

ராஜகுமாரனுக்கும் அவதானம் பண்ணி நடக்க வேண்டுமா போலே, லகு ப்ரத்யவாயமும் வாராமைக்காக அபசாரங்கள் தூர பரிஹரணீயங்கள். 14

ப்ரபத்திக்குக் கோலி(ரி)ன பலத்திற்கு ஒன்றுலும் ப்ரதிபந்த மில்லை. 15

புத்திபூர்வ அபசாரங்கள் புகுந்தாலும் ப்ராயஶ்சித்தவிஶேஷம் அதிகாரி விஶேஷநியதம். 16

இப்படி ப்ராயஶ்சித்தத்திலே மூட்டுகிறதும் கடிந ப்ரக்ருதிகளுக்குக் கசை காட்டுவாரைப் போலே அவன் பண்ணுகிற ஶிக்ஷைகளும் எல்லாம் ஶரண்ய ப்ரஸாதபலம். 17

இங்கு இருந்த காலம் தர்மாநுபந்தியான போகத்திலும் போக புத்தியாலே ப்ராவண்யம் பிறந்ததாகில் இது தன் அதிகாராநுரூபமான கைங்கர்யாம்ருத ரஸத்திற்குத் தண்ணீர்த் துரும்பு. 18

இப்படி நிஷித்த போகப்ராவண்யம் கைங்கர்யாம்ருத ரஸ விருத்தமாகையாலே விஷம் போலே தூர பரிஹரணீயம். 19

கைங்கர்யமாவது ஸ்வாமி உகந்த ஏவல் தொழில் செய்கையாகையாலே இது யதாஶாஸ்த்ரம் பண்ணினுல் உகப்பாம். 20

பகவத் கைங்கர்யமும் பாகவத கைங்கர்யமும் சேர அநுஷ்ட்டிக்க அரிதானபோது பரமபுருஷார்த்த காஷ்ட்டையான பாகவத கைங்கர்யமே உபாதேயதமம். 21

இவை இரண்டிலும் ப்ரதாநம் ஆசார்ய கைங்கர்யம். 22

இக்கைங்கர்யபரனுக்குப் பரமைகாந்திகள் உகந்த இடமே உசிதஸ்த்தாநம். 23

இப்படித் துல்ய ஶீலரைக் கிடையாத போது, விபரீத ஸம்ஸர்க்கம் ஏகாந்தவாஸபரிஹார்யம். 24

இவனுக்குக் கதிசிந்தநாதிகள் சித்தஸந்தோஷ ஹேது வான காலயாபநம். 25

சாதகவ்ருத்தியான இவனுக்கு அந்திம ப்ரத்யயம் ஸ்வயத்ந ஸாத்யமன்று. 26

இப்படி க்ஷண க்ருதயமான ஆத்மஸமர்ப்பணயாகத்திற்குப் பகவத் ஸங்கல்பஸாத்யமான தேஹாவஸாநம் அவப்ருதம். 27

ஸதாசார்ய பரிக்ரஹத்திற்கு முன்புள்ள அநாதி காலம் எல்லாம் ஒரு காளராத்திரி. 28

பின்பு தேஹாவஸா நத்தளவும் நல் விடிவு. 29

மேல் முழுக்க ஸ்வச்சந்த கைங்கர்ய மஹோத்ஸவ திவஸம். 30

இது ஸாத்த்விக ஹ்ருதயங்கமையான ரஹஸ்யரத்னாவளீ.

சிறுபயனில் படியாத தகவோர் எம்மைச்
சேர்க்க அடைக்கலம் கொண்ட திருமால்* தானே
மறுபிறவி அறுத்து அழியா வானில் வைக்கும்
மனமே! நீ மகிழாதே இருப்பதென் கொல்?
உறுவது உனக்கு உரைக்கேன் இங்கிருந்த காலம்
ஒரு பிழையும் புகுர(த)ாத உணர்த்தி வேண்டிப் *
பெறுவதெல்லாம் இங்கே நாம பெற்று வாழப்
பேர் அடிமையால் ஏது என்று இகழேல் நீயே. 19

रक्षन्त्वनन्यरक्ष्यां लघीयसीमपि गरीयसीं सन्तः ।
लक्ष्मीसहायहृद्यां रहस्यरत्नावलिं रम्याम् ।

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु

श्रीरहस्यरत्नावलिः संपूर्णा

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

---

லகீயஸீமபி - (அளவில்) சிறிபதாயிருந்தபோதிலும், கரீயஸீம் - (அர்த்தத்திலும் ப்ரயோஜனத்திலும் பெரியதாயும்) அநந்ய ரக்ஷ

ரக்ஷந்து அநந்ய ரக்ஷ்யாம்
லகீயஸீமபி கரீயஸீம் ஸந்த: |
லக்ஷ்மீ ஸஹாயஹ்ருத்யாம்
ரஹஸ்யரத்நாவளிம் ரம்யாம் ||

இப்படி கவிதார்க்கிக ஸிம்ஹமும் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரும்
வேதாந்தாசார்யருமான ஸ்ரீமத் வேங்கடநாதரால்
அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீஸூக்திகளுள்

ஸ்ரீ ரஹஸ்ய ரத்னுவளீ முற்றிற்று

---

யாம் - அநந்ய ப்ரயோஜநர்களினுல் ரக்ஷிக்கக் கூடியதும் லக்ஷ்மீஸஹா யஹ்ருத்யாம் - ச்ரிய:பதிக்கு ஹ்ருதயங்கமமுமாயும்ரம்யாம்-அழகாயும் இருக்கிற,ரஹஸ்யரத்னுவளிம் - ரஹஸ்யரத்னுவளி என்னும் க்ரந்தத் தை, ஸந்த: -பெரியோர்கள் ரக்ஷந்து - ரக்ஷிக்கக்கடவர்கள்,

ஸ்ரீ:
ஆழ்வார்திருவடிகளே சரணம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்





சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்
பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்

# பதினைந்தாவது ரஹஸ்யம்
# ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதயம்

[ இது அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யங்களில் பதினைந்தாவது. காஞ்சீபுரத்தில் அருளிச்செய்யப்பட்டது ]

तत्त्वोपाय पुमर्थेषु अध्यात्मविदां विभावनीयेषु ।
स्वयमेव सूचयामो रहस्यरत्नावलीहृदयम् ॥

* தத்த்வோபாய புமர்த்தேஷு
அத்யாத்மவிதாம் விபாவநீயேஷு ।
ஸ்வயமேவ ஸூசயாமோ
ரஹஸ்யரத்நாவளீஹ்ருதயம் ॥

ஸதாசார்யோபதேஶ பூர்வகமாக ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ஸமர்ப்பித பரனை முமுக்ஷுவினுடைய நிர்ப்பரத்வ அத்யவஸாயத்தைச் சொல்லுகிறது முதல் கவி.

இதில் ‘ ஒன்றே புகல் ’ என்றது

‘ नारस्त्विति सर्वपुंसां समूहः परिकीर्तितः ।
गतिरालम्बनं तस्य तेन नारायणः स्मृतः ॥ ’

* அத்யாத்மவிதாம் - வேதாந்த சாஸ்த்ரத்தை அறிந்தவர்களுக்கு, விபாவநீயேஷு - அநுஸந்திக்கத் தக்கவைகளான, தத்த்வோபாயபுமர்த்தேஷு - தத்த்வம் ஹிதம் புருஷார்த்தம் இவைகளில், ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதயம் - ரஹஸ்ய ரத்நாவளீ என்னும் க்ரந்தத்தின் தாத்பர்யத்தை ஸ்வயமேவ - நாமே, ஸூசயாம: - ஸூசிப்பிக்கிறோம்.

1 (நாரஸ்த்விதி ஸர்வபும்ஸாம் ஸமூஹ: பரிகீர்த்தித: ।
கதிராலம்பநம் தஸ்ய தேந நாராயண: ஸ்ம்ருத: ॥ )

2 ' नारो नराणां संघातः तस्याहमयनं गतिः '

(நாரோ நராணாம் ஸங்காத: தஸ்யாஹமயநம் கதி: )

3 ' तदेतदतिदुःखानामास्पदे तु भवार्णवे ।

पततां कथ्यते सत्यं विष्णुरेकः परायणम् ॥ '

(ததேதததி துக்காநாம் ஆஸ்பதே து பவார்ணவே ।
பததாம் கத்யதே ஸத்யம் விஷ்ணுரேக: பராயணம் ॥ )

4 ' कर्मणां परिपाकत्वादाविरिंचादमङ्गलम् ।

इति मत्वा विरक्तस्य वासुदेवः परा गतिः ॥ '

(கர்மணும் பரிபாகத்வாத் ஆவிரிஞ்சாதமங்களம் ।
இதி மத்வா விரக்தஸ்ய வாஸுதேவ: பரா கதி: ॥ )

---

1 பாத்மோத்தரம் ஸர்வபும்ஸாம் - எல்லா ஜீவாத்மாக்களுடைய, ஸமூஹ: - கும்பல், நார: து இதி - நாரம் என்று, ப்ரகீர்த்தித: - சொல்லப்பட்டது, தஸ்ய - அந்தக் கும்பலுக்கு, கதி:- அடையவேண்டிய ப்ரயோஜனம், ஆலம்பனம - ஆசரயிககவேண்டிய வஸது, தேந - ஆகையினுல, நாராயண: இதி - நாராயணன் எனறு, ஸ்ம்ருத: - சொல்லப் பட்டான்.

2 பாத்மோத்தரம். நராணும் - ஜீவாத்மாக்களுடைய, ஸங்க: - கும்பல், நார: - நார: (என்று சொல்லபபடுகிறது), தஸ்ய -அந்தக்கும் பலுக்கு, அஹம் - நான், அயநம கதி: - அடையவேண்டிய ப்ரயோஜனம். (தேந - அத்தால், நாராயண இதி - நாராயணன் என்று,முநிபி: ரிஷிகளிலுல். ஈரித: - சொல்லப்பட்டவனுக,அஸ்மி - ஆகிறேன்,)

3 அதிதுக்காநாம் - அதிகமான துக்கங்களுக்கு, ஆஸ்பதே-இடமான, பவார்ணவே - ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தில், பததாம்- விழுகிறவாகளுக்கு, ஏக: விஷ்ணு: - விஷ்ணு ஒருவனே, பராயணம் - முக்யமாக அடையவேண்டிய ப்ரயோஜனம, ததேதத் - அப்படிப்பட்ட இது, ஸத்யம் - உண்மையாக, கத்யதே - சொல்லப்படுகிறது.

4 பாகவதம் - 11-19-18 கர்மணும் - கர்மங்களுடைய, பரிபாகத்வாத் - பரிணமமாக இருக்கிறபடியினுல், ஆவிரிஞ்சாத் - ப்ரஹ்மா வரையிலும், அமங்களம் - பாபங்களைப் போக்கடிக்கக்கூடிய தன்மை யாகிற சுபத்வம் இல்லாதவர்கள், இதி மத்வா - என்றுஎண்ணி, விரக்தஸ்ய - அவர்களிடத்தில் ஆசை இல்லாதவனுக்கு, வாஸுதேவ:- பகவானே,பராகதி: - அடையவேண்டிய ப்ரயோஜனம்.

1 ' ये च वेदविदो विप्रा ये चाध्यात्मविदो जनाः।
ते वदन्ति महात्मानं कृष्णं धर्मं सनातनम् ॥'
(யே ச வேதவிதோ விப்ரா: யே சாத்யாத்மவிதோ ஜநா: ।
தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம் ॥)
2 ' अमृतं साधनं साध्यं तं पश्यन्ति मनीषिणः '
(அம்ருதம் ஸாதநம் ஸாத்யம் தம் பஶ்யந்தி மநீஷிண: )
' यज्ञाख्य परमात्मान विष्णुं ध्यायन् न सीदति '
(யஜ்ஞாக்யம் பரமாத்மாநம் விஷ்ணும் த்யாயந் ந ஸீததி)
3 ' நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு '
இத்யாதிகளில் ஓர் அதிகாரிவிஶேஷத்திற்குப் பரமப்ராப்ய ஞன ஶ்ரிய:பதி ஒருவனுமே வ்யாஜவிஶேஷ வஸீகரணீயமான ஸிததோபாயம் என்றபடி. ' உணர்ந்தவர்' என்றுப்ரதிபுத்தஅதிகாரிவிஶேஷத்தைச் சொல்லுகிறது.
4 ' प्राप्यस्य ब्रह्मणो रूपं प्राप्तुश्च प्रत्यगात्मनः ।
प्राप्त्युपायं फलं चैव तथा प्राप्ति विरोधि च ॥
वदन्ति सकलाः वेदाः सेतिहासपुराणकाः । '
(ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோரூபம் ப்ராப்துஶ்ச ப்ரத்யகாத்மந: ।

---

1 யே ச - எந்த, விப்ரா: - ப்ராஹ்மணர்கள், வேதவித: - வேதத்தைஅறிந்தவர்களோ,யேச-எவர்கள்,அத்யாத்மவிதோஜநா:–வேதாந்த சாஸ்த்ரத்தை அறிந்தவர்களோ, தே – அவர்கள், மஹாத்மாநம் - மஹாத்மாவாகிய, க்ருஷ்ணம்-க்ருஷ்ணனை, ஸநாதநம் - நித்யமான,தர்மம் - தர்மமென்று. வதந்தி - சொல்லுகிறுர்கள்.

2 விஷ்ணுதர்மம் - 72 - 4 தம் - அந்தப் பகவானை, மநீஷிண: பெரியோர்கள், அம்ருதம் - அழிவில்லாத, ஸாதனம் - உபாயமாகவும், ஸாத்யம் - பலனுகவும், பச்யந்தி - பார்க்கிறுர்கள், யஜ்ஞாக்யம் - யஜ்ஞம் என்று சொல்லப்படுகிற, பரமாத்மாநம் - பரமாத்மாவாகிய,விஷ்ணும் - விஷ்ணுவை, த்யாயந் - த்யானித்து, ந ஸீததி - துக்கப்படுவதில்லை.

3 திருவாய்-5-10-11

4 ஹாரீத ஸம்ஹிதை. ப்ராப்யஸ்ய – அடையவேண்டிய ப்ரயோஜனமாகிய, ப்ரஹ்மண: - ப்ரஹ்மத்தினுடைய, ரூபம்-ஸ்வரூபத்தையும், (ஸ்வபாவாதிகளையும்),ப்ராப்து: ச - அடைகிறவனுகிய - ப்ரத்யகாத்மந: - ஜீவாத்மாவினுடைய, (ஸ்வரூபாதிகளையும்), ப்ராப்த்யுபாயம் -

ப்ராப்த்யுபாயம் பலம் சைவ ததா ப்ராப்தி விரோதி ச ||
வதந்தி ஸகலா வேதா: ஸேதிஹாஸ புராணகா: |)
இத்யாதிகளிற் சொன்ன அர்த்த பஞ்சகத்தையும், சகார ஸமுச்சிதமான ஸம்பந்த விஶேஷத்தையும், ஸத்த்வநிஷ்ட்டருக்கு ஶ்ரோதவ்ய ஶேஷமற உரைக்கலாம்படி திருந்தக் கண்டவர்களை 'ப்ரதிபுத்தர்' என்கிறது.

ப்ராப்யமான ப்ரஹ்மமாவது—

1 'विष्णोः सकाशादुद्भूतं जगत् तत्रैव च स्थितम् ।
स्थितिसंयमकर्तासौ जगतोस्य जगच्च सः ॥'

(விஷ்ணோஸ் ஸகாஶாத் உத்பூதம் ஜகத் தத்ரைவ ச ஸ்திதம் |
ஸ்திதி ஸம்யம கர்த்தாஸௌ ஜகதோஸ்ய ஜகச்ச ஸ: ||)

2 'कृष्ण एव हि लोकानामुत्पत्तिरपि चाप्ययः'

(க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம் உத்பத்திரபி சாப்யய : )

3 'कृष्णस्य हि कृते भूतमिदं विश्वं चराचरं'

(க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விஶ்வம் சராசரம்) இத்யாதிகளிற்படியே ஸர்வகார்யைககாரணமாய், ஸத்யத்வ ஜ்ஞாநத்வாதி ஸ்வரூபநிரூபக தர்மங்களையுடையனுமாய், ஜ்ஞாநஶக்த்யாதி கல்யாணகுணகணமஹோததியாய், ஶாந்தாஶாந்தவிபூதித்வயத்திற்கும் ஏகஶேஷியாய்,

---

அடைவதற்கு உபாயத்தையும், பலம் - பலத்தையும், ததா-அப்படியே, ப்ராப்தி விரோதி ச - அடைவதற்குத் தடையாக நிற்கிற விரோதியையும், ஸேதிஹாஸ புராணகா: - இதிஹாஸ புராணாதிகளோடு கூடிய, ஸகலா: — எல்லா, வேதா: -வேதங்களும், வதந்தி - சொல்லுகின்றன.

1 விஷ்ணுபுராணம் - 1 - 8 - 17 விஷ்ணோ: ஸகாசாத் - விஷ்ணுவிடத்திலிருந்து, உத்பூதம் - உண்டானது, தத்ரைவ - அவ்விடத்திலே ஸ்திதம்-நிலைபெற்றிருக்கிறது, அஸௌ-இவன், ஸ்திதிஸம்யமகர்த்தா-ஸ்திதி நியமநம் இவற்றைச் செய்பவன், ஸ: - அவன், ஜகச்ச - அந்த லோகமாகவும் (இருக்கிறான்)

2 பார ஸபா - 38 - 26 க்ருஷ்ண ஏவ ஹி - க்ருஷ்ணன் ஒருவனே, லோகாநாம் - லோகங்களுக்கு, உத்பத்தி: - உண்டாகும் இடம், அபி சஅப்யய: -லயிக்கும் இடமும்.

3 பார - ஸபா - 41 - 23இதம்- இந்த, பூதம் - ப்ராணியும், சராசரம்-ஸ்த்தாவரஜங்கமரூபமானவிச்வம்-எல்லாலோகமும்க்ருஷ்ணஸ்ய ஏவ ஹி- க்ருஷ்ணனுக்காகவே, க்ருதம் - ஏற்பட்டதன்றோ.

1 ' ஒருயிரேயோஉலகங்கட்கெல்லாம் '
என்னும்படி ஸர்வாந்தராத்மாவாய், பர வ்யூஹாதி பஞ்சப்ரகார திவ்யமங்களவிக்ரஹயுக்தனாய், ஸர்வாவஸ்த்தையிலும்ஸலக்ஷ்மீகனாய், ஸர்வலோக ஶரண்யனாய், ஶரணாகதவத்ஸலனாய், ஸர்வப்ரகார நிரதிஶய போக்யனான நாராயணன்.

ப்ராப்தாவான ப்ரத்யகாத்மாவாவது—

2 ' पुमान् न देवो न नरो न पशुः न च पादपः ।
शरीराकृतिभेदास्तु भूपैते कर्मयोनयः ॥ '

(புமாந் ந தேவோ ந நரோ ந பஶு : ந ச பாதப: ।
ஶரீராக்ருதி பேதாஸ்து பூபைதே கர்மயோநய: ॥ )

1 ' नायं देवो न मर्त्यो वा न तिर्यक्स्थावरोपि वा ।
ज्ञानानन्दमयस्त्वात्मा शेषो हि परमात्मनः ॥ '

(நாயம் தேவோ ந மர்த்யோவா ந திர்யக் ஸ்த்தாவரோபி வா ।
ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா ஶேஷோ ஹி பரமாத்மந : ॥ )

இத்யாதிகளிற்படியே தேஹேந்த்ரியாதிவிலக்ஷணனாய், ஜ்ஞாநாநந்தஸ்வரூபனாய், ஸ்வயம் ப்ரகாசனாய், ஸ்வஸ்மை பாஸமாநனாய், அணுவாய், ஜ்ஞாநாநந்தகுணகனாய, பரஶேஷதைக ரஸனாய், பராதீநஸ்வரூபஸ்த்திதி பரவருததிகனாய், பரிபூர்ண பகவதநுபவ யோக்யனாய, ஸ்வரூபாநுகுண ஸவசசநத கைங்கர்யார்த்தியான ஜீவன்.

ப்ராப்த்யுபாயமாவது—

---

1 திருவாய் - 8-1-5

2 விஷ்ணு புராணம் - 2 - 13 - 98 புமாந் - ஜீவாத்மா, ந தேவ:- தேவனுமல்லன், ந நர: - மனிதனுமல்லன், ந பசு: - பசுவுமல்லன், ந ச பாதப: - மரமுமல்லன், பூப - ஓ ! அரசனே, ஏதே - இவைகள், கர்ம யோநய: - கர்மங்களைக்காரணமாகவுடைய, சரீராக்ருதிபேதா:- சரீரத்தின் ஆகாரபேதத்தால் உண்டானவை.

அயம் - இந்த ஜீவாத்மா, நதேவ:- தேவனுமல்லன், ந மர்த்யோ வா - மனுஷ்யனுமல்லன், ந திர்யக் - திர்யக்குமல்லன், ந ஸ்த்தாவரோபி வா - ஸ்த்தாவரமுமல்லன், ஆத்மா - ஆத்மாவானவன், ஜ்ஞாநாநந்தமய: - ஜ்ஞாநத்தையும், ஆநந்தத்தையும் ஸ்வரூபமாகவுடையவன், பரமாத்மந: - பரமாத்மாவிற்கு, சேஷ: - சேஷபூதனாயிருப்பவன்.

இஜ்ஜீவன் ஸம்ஸாரஸாகரத்தைக் கடந்து அக்கரைப்படுகைக்கு உபாயமாய்,ஸாதநமாக ஸ்வபுத்தியாலே கோ(ரு)லும்படி ஶாஸ்த்ரோக்தமான அர்த்தம். இது ஸித்தம் என்றும் ஸாத்யம் என்றும் இரண்டு படியாயிருக்கும். ஸித்தோபாயமாவது—நித்ய ஸித்தங்களான ஸ்வரூப குணங்களையுடையனாய், ஸர்வஜ்ஞனாகையாலே பரஹிதவேதியாய், ஸர்வஶக்தியாகையாலே ஸர்வாநிஷ்டநிவாரணக்ஷமனாய், ஸர்வ பூத நிஸர்க்க ஸுஹ்ருத்தாகையாலே பராநிஷ்டநிவாரணாதிகளில் ஸர்வதாபிமுகனாய்,

1 ' सर्वज्ञोपि हि विश्वेशः सदा कारुणिकोपि सन् ।
संसारतन्त्रवाहित्वात् रक्षापेक्षां प्रतीक्षते ॥'

(ஸர்வஜ்ஞோபி ஹி விஶ்வேஶ: ஸதாகாருணிகோபிஸந் ।
ஸம்ஸாரதந்த்ரவாஹித்வாத் ரக்ஷாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே ॥)

இத்யாதிகளிற்படியே அவஸரப்ரதீக்ஷனாய், வ்யாஜ விஶேஷ வஶீகரணீயனாய், ஸங்கல்பித விஶேஷத்தில் ஸஹகாரிநிரபேக்ஷனாய், ஸ்வார்த்த ப்ரவ்ருத்தனாய், மோக்ஷ ப்ரதாநத்திற்கு அவ்யவஹித ஸங்கல்பாஶ்ரயனான ஶ்ரிய:பதி. ஸாத்யோபாயமாவது—புருஷனுக்குக் கர்த்தவ்யமாகச்சோதிதமான புருஷார்த்த ஸாதநம். மோக்ஷார்த்தமான ஸாத்யோபாயம் பக்தி என்றும், ப்ரபத்தி என்றும் இரண்டு படியாய் இருக்கும். பக்தி ரூபமான ஸாத்யோபாயம் கர்ம யோக ஜ்ஞாந யோக ஸம்ஸ்க்ருதாந்த:கரணஸாத்யமாய்,அஷ்டாங்கயோக ஸம்ஜ்ஞிதமாய்,வர்ணாதிநியதாதிகாரமாய், வர்ணாஶ்ரம தர்ம இதிகர்த்தவ்யதாகமாய், க்ருச்ச்ர ஸாத்யமாய், தைலதாராவத் அவிச்சிந்ந ஸ்ம்ருதி ஸந்ததி ரூபமாய், அஹரஹரப்யாஸாதேயாதிஶயமாய், ஆப்ரயாணம் அநுவர்த்தநீயமாய், ப்ராரப்தேதர புண்ய பாப நிவர்த்தகமாய், ஸ்வயத்ந ஸாத்ய அந்திமப்ரத்யய விஶேஷமாயிருக்கும்.

---

1 லக்ஷ்மீதந்த்ரம் - 17 - 78 விச்வேச: - பகவான், ஸர்வஜ்ஞ: அபி – எல்லாம் அறிந்தவனாயிருந்தபோதிலும், ஸதா - எப்பொழுதும், காருணிகோபி ஸந் – கருணையுடன் கூடியவனாய் இருந்தபோதிலும், ஸம்ஸாரதந்த்ர வாஹித்வாத் - ஸம்ஸாரத்தைநடத்துகிறவனாகையினாலே, ரக்ஷாபேக்ஷாம் - ரக்ஷிக்கவேண்டும் என்கிற அபேக்ஷையை, ப்ரதீக்ஷதே - எதிர் பார்க்கிறான்.

ப்ரபத்தி ரூபமான ஸாத்யோபாயம் மஹாவிஶ்வாஸாதி ஸம்ஸ்க்ருதாந்த:கரண ஸாத்யமாய், ஷடங்கயோக ஸம்ஜ்ஞித மாய், அநந்யோபாய ஸர்வாதிகாரமாய், ஆநுகூல்ய ஸங்கல் பாதி மாத்ர பரிகரமாய், ஸுகரமாய், ப்ரார்த்தநாந்வித ஸக்ருத் பரந்யாஸ ரூபமாய், அநாதேயாதிஶயமாய், ஆதேஹபாதம் ஸ்வரூப ஆவ்ருத்த்யாதி கர்த்தவ்யஶேஷ ரஹிதமாய், ப்ராரப்த கர்ம நிவர்த்தந க்ஷமமாய், ஸ்வப்ரயத்ந ஸாபேக்ஷ அந்திமப்ரத்யய அநபேக்ஷமாயிருக்கும். ஸாத்யோபாயத்தில் அநுபாயத்வாதி வ்யபதேசம் பரஸங்கல்ப ஸாபேக்ஷத்வாதி நிபந்தநம்.

இங்கு பலமாவது :—

ஸ்வாதிகாராநுகுண வஶீகரண விஶேஷத்தாலே உத்தர பூர்வாக அஶ்லேஷ விநாஶங்கள் பிறந்து, ஸ்தூல ஶரீர நிவ் ருத்தியுண்டாய் ஊர்த்வகதி விஶேஷத்தாலே உதகராந்தனாய், அர்ச்சிராதி மார்க்கத்தாலே ஆதிவாஹிகராலே அதிலங்கித த்ரி குணமண்டலனாய், அவதூத ஸூக்ஷ்ம ஶரீரனாய், அப்ராக்ருத தேஶவிஶேஷ ப்ரவிஷ்டனாய், ஆவிர்ப்பூத ஸ்வரூபனாய், அபஹத பாபமத்வாதி குணாஷ்டக விஶிஷ்டனானவனுடைய தேஶகால ஸ்வரூப பரிச்சேதரஹித கைங்கர்ய பர்யந்தமான பரிபூர்ண பக வதநுபவாநந்தம்.

ப்ராப்தி விரோதியாவது—

பீஜாங்குர ந்யாயத்தாலே அநாதியாக ப்ரவ்ருத்தமான அக் ருத்யகரண க்ருத்யாகரண ப்ரவாஹத்தாலே உத்பந்நமாய், ப்ரா யஶ்சித்தம் பண்ணாதார்க்கு அநதிலங்கநீய பலமாய், ஆகமைக ஸமதிகம்யமாய், அநுத்ப்ரேக்ஷணீய விபாகஸமயமாய், ஆப்ரஹ்ம ஸ்தம்ப பர்யந்தம் அபிவ்யாப்தமாய், அத்யந்த விஷமப்ரவாஹ மாய், அதிகோர நரகாதி அநர்த்தபரம்பரா ஹேதுவாய், சக்ரவத் பரிவர்த்தமாநமாய், ஆமோக்ஷம அநுவ்ருத்தமான பகவந் நிக் ரஹ ஸந்தாநமும், அதின் கார்ய காரண வர்க்கமும்.

இங்கு ஸம்பந்தமாவது— ப்ராப்தாவான ஜீவாத்மாவிற்கு ப்ராப்ய னான பரமாத்மாவோடு உண்டான துவக்கு. இது ஆதேயத்வம் விதேயத்வம், அப்ருதக்ஸித்தத்வம், ஶேஷத்வம், ஶரீரத்வம், வ்யாப்

யத்வம், ரக்ஷ்யத்வம், கிங்கரத்வம், போக்யத்வம், போக்த்ருத்வம் என்றிப்படி ஸாமாந்ய விஶேஷாதி ரூபமாய்க் கொண்டுப்ரமாணங்களாலே விவிதமாக விபக்தமாயிருக்கும்.

இப்படி மோக்ஷஶாஸ்த்ரஸித்தமான ப்ராப்யத்தையும், ப்ராப்தாவையும், ப்ராப்த்யுபாயத்தையும் ப்ராப்தியையும்,ப்ராப்தி ப்ரதிபந்தகத்தையும், ஸம்பந்தத்தையும் ஶாஸ்த்ர த்ருஷ்டியாலே ஸம்யக்காகக கண்டவர்களே ‘ உணர்ந்தவர் ’ என்கிறது.

‘ உணர்ந்தவர் ஒன்றே புகல் என்று காட்ட ’ என்று அந்வயம்.

1 ‘ तत् विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनः तत्त्वदर्शिनः ॥ ’
(தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா ।
உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநः தத்த்வதர்ஶிநः॥)
2 ‘ ये संतुष्टाः श्रुतोपेताः सत्यार्जवदयापराः ।
जितेन्द्रियाः जितक्रोधाः तानुपास्व च पृच्छ च ॥ ’
( யேஸந்துஷ்டாः ஶ்ருதோபேதாः ஸத்யார்ஜவ தயாபராः ।
ஜிதேந்த்ரியா ஜிதக்ரோதாः தாநுபாஸ்வச ப்ருச்ச ச ॥)

இத்யாதிகளிற்படியே ஸம்யக் உபஸந்நரானுர்க்கு ஸர்வாபேக்ஷிதார்த்தங்களையும்உபதேசிக்கவல்ல அநந்யப்ரயோஜநரான ஜ்ஞாநிகள் புகல் ஒன்றில்லாத நமக்கு

---

1 கீதை - 4 - 34 தத் - அந்த ஜீவாத்ம தத்த்வத்தை, ப்ரணிபாதேந - நன்ருக ஸேவிப்பதினுலும், பரிப்ரச்நேந - செவ்வையாகக்கேட்பதினுலும், ஸேவயா - சுச்ருஷை செய்வதினுலும், வித்தி - அறிந்துகொள், தத்த்வ தர்சிந: - உண்மையை அறிந்த, ஜ்ஞாநிந: - ஜ்ஞாநிகள, தே - உனக்கு, ஜ்ஞாநம் - ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞாநத்தை,உபதேக்ஷ்யந்தி - உபதேசிக்கப்போகிருர்கள்.

2 யே - எவர்கள், ஸந்துஷ்டா: - (கிடைத்ததைக்கொண்டு) ஸந்தோஷத்தையுடையவர்களாயும, ச்ருதோபேதா:-(சாஸ்த்ரார்த்தங்களை முறைப்படி பெரியோர்களிடமிருந்து) கேட்டுத் தெரிந்து கொண்டவர்களாயும், ஸத்ய ஆர்ஜவ தயாபரா: - ஸத்யம், கபடமில்லாமை, தயை இவைகளை யுடையவர்களாயும், ஜிதேந்த்ரியா: - இந்த்ரியங்களை ஜயித்தவர்களாயும், ஜிதக்ரோதா: - கோபத்தை ஜயித்தவர்களாயும் (இருக்கிருர்களோ), தாந் - அவர்களை, உபாஸ்வ - முறைப்படி ஆச்ரயி, ப்ருச்ச - (கேட்கவேண்டிய அர்த்தங்களைக்) கேட்டுக்கொள்.

1 (ஸர்வயோக்யமநாயாஸம் அப்ரமாதமநூபமம் |
ப்ரபந்நார்த்திஹரம் விஷ்ணும் ஶரணம் கந்துமர்ஹஸி || )
இத்யாதிகளிற்படியே நிரபாய ஸாத்யோபாய விஶேஷத்தாலே வஶீகரணீயமான ஸித்தோபாயத்தை வெளியிட என்றபடி. இத்தாலே நானும் என்னை ரக்ஷித்துக்கொள்ள மாட்டேன், வேறு எனக்கு ரக்ஷகரில்லை, மேலே என்னுடைய வ்யாபார விஶேஷத்தாலே அபேக்ஷையற தேவரீரே என்னை ரக்ஷித்தருளவேணும் என்கிற பரந்யாஸரூப வஶீகரண விஶேஷாநுஷ்டாநமும் பலிதம்.

அங்ஙனன்றிக்கே ' ஒன்றே புகல் என்றுஉணர்ந்தவர் ' என்று ஆசார்யர்களை விஶேஷிக்கிறதாகவுமாம். அப்போது ' காட்ட ' என்றது

2 ' तव भरोहमकार्षि हि धार्मिकैः '
(தவ பரோஹமகார்ஷி ஹி தார்மிகை: )
இத்யாதிகளிற்படியே ஸர்வஶேஷி திருவடிகளிலே

3 ' आत्मात्मीयं च यत्किंचित् दुर्भरं दुस्त्यजं मम |
तत् सर्वं तव विन्यस्तं शुभयोः पादपद्मयोः || '

---

1 ஸாவயோக்யம் - எல்லோராலும் ஆச்ரயிக்கத்தக்கவனும், அநாயாஸம் - ஆச்ரயிப்பதில் ச்ரமம் ஒன்றும் இல்லாதவனும், அப்ரமாதம் - அஜாக்கிரதை முதலிய தோஷங்கள் இல்லாதவனும், அநூபமம் - தனக்கு ஸத்ருசனானவன் ஒருவனும் இல்லாதவனும், ப்ரபந்நார்த்திஹரம் - ஆச்ரிதர்களுடைய துக்கத்தைப் போக்கடிக்கக்கூடியவனும்இருக்கிற,விஷ்ணும் - விஷ்ணுவை,சரணம்-சரணமாக, கந்தும் - அடைவதற்கு, அர்ஹஸி - யோக்கியனாகிறாய்,

2 ஸ்ரீரங்கராஜஸ்தவம் - 2 - 102 அஹம் - நான், தவ - உமக்கு, பர: - ரக்ஷிக்க வேண்டிய பரமாக, தார்மிகை: - தர்மிஷ்டர்களினால் ( ஆசார்யர்களினால் ),அகார்ஷி - செய்யப்பட்டேன்.

3 ஆத்மா - நானும், ஆத்மீயம் - என்னுடையதாயிருக்கிற, யத்கிஞ்சித்-எது, மம-எனக்கு, துர்ப்பரம் - ரக்ஷிக்க முடியாததும், துஸ்த்யஜம் - விடமுடியாததாயும் இருக்கிறதோ, தத் ஸர்வம் - அவை எல்லாமும், தவ - உம்முடைய, சுபயோ: - மங்கள கரங்களான, பாத பத்மயோ:- திருவடித் தாமரைகளில், விந்யஸ்தம் - ஸமர்ப்பிக்கப்பட்டது.

(ஆத்மாத்மீயம் ச யத்கிஞ்சித் துர்ப்பரம் துஸ்த்யஜம் மம ।
தத் ஸர்வம் தவ விந்யஸ்தம் ஶுபயோ: பாதபத்மயோ:||)
என்று ஆத்மீயரான நம்மை அநந்ய ரக்ஷ்யத்வேந ஸமர்ப்பிக்க என்றபடி.

'திருவருளால்' என்றது

1 'स तं निपतितं भूमौ शरण्यः शरणागतं ।
वधार्हमपि काकुत्स्थः कृपया पर्यपालयत् ॥'
(ஸ தம் நிபதிதம் பூமௌ ஶரண்ய; ஶரணாகதம் ।
வதார்ஹமபி காகுத்ஸ்த்த: க்ருபயா பர்யபாலயத் ||)

2 'कृपया केवलमात्मसात्कुरु'
(க்ருபயா கேவலமாத்மஸாத்குரு)
இத்யாதிகளிற்படியே ப்ரத்யுபகாராதி நிரபேக்ஷ பரம க்ருபையாலே என்றபடி.

3 'यामालम्ब्य सुखेनेमं दुस्तरं हि गुणोदधिं ।
निस्तरन्त्यचिरेणैव व्यक्तध्यानपरायणाः ॥'
(யாமாலம்ப்ய ஸுகேநேமம் துஸ்தரம் ஹி குணோததிம் ।
நிஸ்தரந்த்யசிரேணைவ வ்யக்த த்யாந பராயணா:|| )

---

1 ராமா - ஸுந்தர - 38-34. சரண்ய: - சரண்யராகிய, ஸ:-அந்த, காகுத்ஸ்த்த: - ககுத்ஸ்தவம்சத்தில் அவதரித்த ராமன், பூமௌ - பூமியில், நிபதிதம்-விழுந்தவனையும், சரணாகதம் - சரணம் அடைந்தவனையும் இருக்கிற, தம் - அந்தக் காகத்தை, வதார்ஹமபி – கொல்லத் தகுந்தவனாய் இருந்தபோதிலும் க்ருபயா - க்ருபையினால், பர்யபாலயத் - நன்றாக ரக்ஷித்தார்.

2 ஆள.ஸ்தோ - 48. க்ருபயா கேவலம் - (உம்முடைய) க்ருபையினாலேயே, ஆத்மஸாத்குரு-உமக்கு அதீனமாகச் செய்துகொள்ளும்.

3 ஸ்ரீ ஸாத்வதம் - 12 - 34. வ்யக்த த்யாந பராயணா: - வ்யக்தம் என்று சொல்லப்படுகிற திவ்ய மங்கள விக்ரஹத்தை த்யானம் செய்து கொண்டிருக்குமவர்கள், யாம் - எந்த லக்ஷ்மியை, ஆலம்ப்ய - ஆச்ரயித்து, துஸ்தரம் - மற்ற ஒருவரால் தாண்ட முடியாத, இமம் - இந்த, குணோததிம்-குணங்களாகிற ஸமுத்திரத்தை, அதாவது குணங்களுக்கு ஆதாரமான ப்ரக்ருதியாகிற ஸமுத்திரத்தை, ஸுகேந - ஸுகமாக, நிஸ்தரந்தி – தாண்டுகிறார்களோ.

என்றும் சொல்லுகிற ப்ரமாண வர்கத்தையும், ஸ்ரீபாஷ்யகாராதி க(ள்)ளும் அருளிச்செய்த நித்யங்களையும் இங்கே அநுஸந்திப்பது.

(12) ' இவனுக்கு ஆஜ்ஞாநுஜ்ஞா ஸித்தங்களான கைங்கர்யங்கள் எல்லாம் ஸ்வயம் ப்ரயோஜநங்கள் ' என்றது

ஆஹாரஶுத்தி ஆசார நியமம் அபராத பரிஹாரம் முதலான முன்பு சொன்ன ஆஜ்ஞாஸித்தங்களான வர்ணாஶ்ரமாதி தர்மங்களும்,

1 ' பண்டைநாளாலே நின் திருவருளும்பங்கயத்
தாள் திருவருளும்கொண்டு நின் கோயில் சீய்த்து '

இத்யாதிகளில்படியே இச்சையுள்ளபோது செய்யவுமாம் அதில்லாதபோது தவிரவுமாம்படி ஏற்றமாகநிற்கிறஅந்தராத்ம(ராந்தர) குணாநுஸந்தாந ஸ்துதி ஸங்கீர்த்தந ஸம்மார்ஜ்ஜந உபலேபந மாலாகரண தீபாரோபணாதி கைங்கர்யங்களுமெ(ளெ)ல்லாம் ஸர்வ விதபந்துவான ஸர்வஸ்வாமியினுடைய ஸம்ப்ரீதி ஹேதுவாகையாலே அநுரக்த பார்யாதிகளுடைய ஶுஶ்ரூஷணாதிகள் போலவும், முகதனுடைய வ்யாபாரங்கள் போலவும்,

2 ' प्रहर्षयिष्यामि '(ப்ரஹார்ஷயிஷ்யாமி)

என்னும் ப்ரயோஜநமொழிய மற்றொரு ப்ரயோஜந விஶேஷத்தைக் கணிசிகக வேண்டாதபடி,

3 ' दुर्गतावपि जातायां ' (துர்கதாவபி ஜாதாயாம்)

4 ' कामये वैष्णवत्वं तु ' (காமயே வைஷ்ணவத்வம் து)

5 'सर्वेषु देश कालेषु '(ஸர்வேஷு தேஶ காலேஷு )

---

களில் சொல்லப்படுகிற தர்மங்களின் அநுஷ்ட்டாநத்தை, மநஸாபி - மனதினாலும் கூட, ந லங்கயேத் - தாண்டக்கூடாது.

1 திருவாய்மொழி - 9 - 2-1.

2 ஆள ஸ்தோ - 46. ப்ரஹார்ஷயிஷ்யாமி - ஸந்தோஷிப்பிக்கப் போகிறேன்.

3 துர்க்கதெள - கெட்ட தசை, ஜாதாயாமபி - உண்டாயிருந்த போதிலும்,(உம் மிடத்திலேயே பக்தி இருக்கவேண்டும்)

4 ஜிதந்தா - 1 - 13. வைஷ்ணவத்வம் - வைஷ்ணவனாயிருக்கையை, காமயே - ஆசைப்படுகிறேன்.

5 ஸர்வேஷு - எல்லா, தேச காலேஷு - தேசங்களிலும் காலங்களிலும் (உனக்குக் கைங்கர்யம் செய்யக் கடவேன்)

இத்யாதிகளிற்படியே இவைதன்னை(ம்மை)யே உத்தேசித்து ப்ர வ்ருத்திக்கும்படி ஸ்வரூபேண ஸ்வாதுக்களாயிருக்கும் என்றபடி.

(13) ‘ கரணகரணரூபங்களான அபசாரங்கள்புகுந்தாலும் ப்ரபந் நனுக்கு நரகாதிகள் இல்லை ’ என்றது

அங்கமாகவாதல் ஸ்வதந்த்ரமாகவாதல் பகவத் ப்ரபத்தியைக் கைமுதலாகப் பற்றின பரமைகாந்திக்கு ப்ரபல ப்ராரப்த துஷ் க்ருதவிசேஷத்தாலே புத்தி பூர்வகமாக அக்ருத்யகரண க்ருத்யா கரணரூபமான ஆஜ்ஞாதிலங்கநம் பிறந்ததாகில்

1 ‘ दृष्टो धर्मव्यतिक्रमः साहसं च (महतां)पूर्वेषां ।’

2 ‘ तेषां तेजोविशेषेण प्रत्यवायो न विद्यते ॥ ’

(த்ருஷ்டோ தர்மவ்யதிக்ரம: ஸாஹஸம் ச பூர்வேஷாம் ।
தேஷாம் தேஜோவிசேஷேண ப்ரத்யவாயோ நவித்யதே ॥ )

என்னும் விஷயமன்றிக்கே நம்மளவில்

2 ‘ तदन्वीक्ष्य प्रयुंजानः सीदत्यवरः ’

(ததந்வீக்ஷ்ய ப்ரயுஞ்ஜாநஸ் ஸீதத்யவர: )

என்னும்படி நிற்கையாலும், தர்மாதிகரமம் பண்ணின மஹாத்மாக் களுககும் ஸுக்ருத விநாசாதி ப்ரத்யவாயம் சொல்லுகையா லும், அவ்வக்ருத்யகரணங்கள் ப்ரத்யவாய ஹேதுக்களாய் நின்றால்

3 ‘ स्वपुरुषमभिवीक्ष्य पाशहस्तं वदति यमः किल तस्य कर्णमूले ।
परिहर मधुसूदनप्रपन्नान् प्रभुरहमन्यनृणां न वैष्णवानाम् ॥

( ஸவபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம்
வததி யம: கில தஸ்ய கர்ணமூலே
பரிஹர மதுஸூதநப்ரபந்நாந்
ப்ரபுரஹமந்ய ந்ருணாம் ந வைஷ்ணவாநாம் ।)

1 கௌதம தாம ஸூத்ரம்.

பூர்வேஷாம் - முன்னோர்களுக்கு, தர்மவ்யதிக்ரம:— தர்மத்தை மீறிநடப்பதும், ஸாஹஸம்ச - ஸாஹஸ கார்யமும், த்ருஷ்ட :—காணப் பட்டிருக்கிறது, 2 தேஷாம்-அவர்களுடைய, தேஜோ விசேஷேண - மிகுந்த தேஜஸ்ஸினால், ப்ரத்யவாய :-தோஷம், ந வித்யதே - இல்லை.

2 மனு தத் - அந்தப் பெரியோர்களின் அதிக்ரமத்தை, அந்வீக்ஷ்ய - பார்த்து, ப்ரயுஞ்ஜாந: - செய்கிற, அவர: - ஜ்ஞாநசக்த்யாதிகளால் தாழ்ந்தவனாயிருக்கும் மனிதன், ஸீததி - துக்கபபடுகிறான்.

3 வாமந புராணம் – 94 31. பாசஹஸ்தம் - பாசத்தைக் கையில் வைத்துக் கொண்டிருக்கிற, ஸ்வபுருஷம் தன்னுடைய வேலைக் காரனை, அபிவீக்ஷ்ய -பார்த்து யம: - யமன், தஸ்ய-அவனுடைய, கர்ண

1 'देवं शार्ङ्गधरं विष्णुं ये प्रपन्नाः परायणम् ।
न तेषां यमसालोक्यं न च ते नरकौकसः ॥
(தேவம் ஶார்ங்கதரம் விஷ்ணும் யே ப்ரபந்நா: பராயணம் |
ந தேஷாம் யமஸாலோக்யம் ந ச தே நரகௌகஸ:)

2 'ये नृशंसाः दुरात्मानः पापाचाररतास्तथा ।
तेपि यान्ति परं धाम नरा नारायणाश्रयाः ॥
(யே ந்ருஶம்ஸா: துராத்மாந: பாபாசார ரதாஸ்ததா
தேபி யாந்தி பரம் தாம நரா நாராயணாஶ்ரயா: )

இத்யாதிகளில்படியே நரகாதி மஹாக்லேசம் வாராதே யதா ஸம்பவம் அநுதாப ஶிக்ஷா உபக்லேஶங்களாலே அபராத நிஸ்தாரமுண்டாம் என்றபடி.

3 'किङ्करा दण्डपाशौ वा न यमो न च यातनाः ।
समर्थास्तस्य यस्यात्मा केशवालम்बनस्सदा ॥

---

மூலே - காதின்ஸமீபத்தில், வததி - சொல்லுகிருன், மதுஸூதந ப்ரபந்நாந் - மதுவைக் கொன்றவனுகிய பகவானை ஆச்ரயித்தவர்களை, பரிஹர - விட்டுவிடு, அஹம்-நான், அந்ய ந்ருணாம் - வேறுமனிதர்களுக்கு ப்ரபு: - யஜமாநன், வைஷ்ணவாநாம் - வைஷ்ணவர்களுக்கு, ந - (யஜமாநன்) அல்ல.

1 வாமந புராணம் - 94 43. யே - எவர்கள், சார்ங்கதரம் - சார்ங்கத்தைத் தரித்துக்கொண்டவனுயும், தேவம் - தேவனுயும் இருக்கிற, விஷ்ணும் - விஷ்ணுவை, பராயணம் - பரமகதியாக, ப்ரபந்நா: - ஆச்ரயித்திருக்கிருர்களோ, தேஷாம் - அவர்களுக்கு, யம ஸாலோக்யம் - யமலோகத்தில் வஸிக்கும் தன்மை, ந - இல்லை, தே - அவர்கள், நரகௌகஸ: - நரகத்தில் இட முடையவர்களும் அதாவது வஸிப்பவர்களும், ந-அல்ல.

2. ——யே - எந்த மனிதர்கள், ந்ருசம்ஸா: - தயை இல்லாதவர்களோ, துராத்மாந: - கெட்ட ஸ்வபாவமுடையவர்களோ, ததா – அப்படியே, பாபாசாரரதா: - பாபத்தைச் செய்வதிலேயே ஆசையுடையவ, களோ, தே - அந்த, நரா: அபி - மனிதர்களும், நாராயணுச்ரயா: ர் நாராயணனை ஆச்ரயித்தவர்களாய்க் கொண்டு, பரம் - உயர்ந்த- தாம - ஸ்தாநத்தை, யாந்தி - அடைகிருர்கள்.

3 யஸ்ய - எவனுடைய, ஆத்மா - ஆத்மாவானது, ஸதா - எப்பொழுதும், கேசவாலம்பந: - பகவானை ஆச்ரயித்திருக்கிறதோ, தஸ்ய அவனுக்கு, (அதாவது அவனுக்குத் துக்கத்தை உண்டாக்கும் விஷ

(கிங்கரா தண்டபாஶௌ வா ந யமோ ந ச யாதநா: |
ஸமர்த்தாஸ்தஸ்ய யஸ்யாத்மா கேஶவாலம்பநஸ் ஸதா ||

1 'நமன்கூறு செய்து கொண்டிறந்த குற்றமெண்ண வல்லனே'

2 ' நலியும்நரகமும் நைந்த நமனுக்குஇங்கு யாதொன்று மில்லை '

இத்யாதிகளையும் இங்கே அநுஸந்திப்பது. 13

(14) 'ராஜகுமாரனுக்கும் அவதாநம் பண்ணி நடக்க வேண்டுமா போலே, லகு ப்ரத்யவாயமும் வாராமைக்காக அபசாரங்கள் தூர பரிஹரணீயங்கள் ' என்றது

3 ' पितासि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् '

(பிதாஸி லோகஸ்யசராசரஸ்ய த்வமஸ்ய பூஜ்யஶ்சகுருர் கரீயாந்) இத்யாதிகளில் சொல்லப்பட்ட ஸ்வபாவங்களு(ளையு)டைய பகவான் இவனைப் புத்ராதிகளைப் போலே பக்ஷபாதியாய் ரக்ஷிக்கும்படி நிற்கிற பாகவதனுக்கு யம விஷயகமநம் இல்லை எனறும், அபசாரங்கள் புகுந்தால் அவை நீங்குகைக்குச் சில உபக்லேஶங்கள் அளவும் பலமாய் விடும் என்றும் சொல்லுகிற ஶாஸ்த்ரார்த்தங்களின்படியே புத்தி பூர்வாபராதம் பிறந்தால் அநுதாபம் பிறந்து, புந: ப்ரபத்தி பண்ணுதபோது ஶிக்ஷாரூப ப்ரத்யவாய விஶேஷங்கள் வரும்படியாயிருக்கையாலே,இப்படி ஈஶ்வர நிக்ரஹங்களுக்கு இலக்காகாமைக்காக,

4 ' चत्वारि यस्य द्वाराणि सुगुप्तानि मनीषिणः ।
उपस्थमुदरं पाणिः वाक्चतुर्थी स वै पुमान् ॥ '

---

யத்தில்),கிங்கரா: - கிங்கரர்களும், யம: - யமனும், தண்ட பாஶௌவா - யமனுடைய தண்டமும் பாசமும்,யாதநா: - நரக துக்கங்களும், ந ஸமர்த்தா: - சக்தி உடையவர்களல்ல.

1 திருச்சந்த விருத்தம் 116 2 திருவாய்மொழி 5 2 1

3 கீதை 11 43. த்வம் - நீர், அஸ்ய -இந்த, சராசரஸ்ய - ஜங்கமும் ஸ்த்தாவரமுமாகிய, லோகஸ்ய - லோகத்திற்கு,பிதா - தகப்பனாராக, அஸி - ஆகிறீர், கரீயாந் - மிகவும் சிறந்தவரான, குரு: - ஆசார்யன், (ஆகையினால்) பூஜ்ய: - பூஜிக்கத்தக்கவா.

4 யஸ்ய - எந்த, மநீஷிண: - விவேகியாகிய புருஷனுக்கு, உபஸ்தம், உதரம் - வயிறு, பாணி: - கை, சதுர்த்தி - நான்காவதானவாக்கு- நாக்கு இவைகளான,த்வாராணி-பாபம் வருவதற்கு வழியானசத்வாரி -

( சத்வாரி யஸ்ய த்வாராணி ஸுகுப்தாநி மநீஷிண: ।
உபஸ்தம் உதரம் பாணி: வாக் சதுர்த்தீ ஸ வை புமாந் ॥ )
இத்யாதிகளிற் சொன்ன அவதாந விஶேஷமுடையவனாய் அநாகதாநவீக்ஷ(வேக்ஷ)ணம் பண்ணின இவன்,
1 'நயவேன் பிறர் பொருளை நள்ளேன் கீழாரோடு'
2 'செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்'
இத்யாதிகளிற்படியே ஏற்கவே அபராதங்கள் புகுராதபடி வர்த்திக்க ப்ராப்தம் என்றபடி.

3 ' विहिते प्रतिषिद्धे च यथामति यथा बलम् ।
त्वय्याहित भरः श्रीमन् वर्ते राजकुमारवत् ॥ '
(விஹிதே ப்ரதிஷித்தே ச யதாமதி யதாபலம் ।
த்வய்யாஹிதபர: ஸ்ரீமந் வர்த்தே ராஜகுமாரவத் ॥)
என்கிற வசநத்துக்கு அவஶ்ய கர்த்தவ்யங்களில் ப்ரவ்ருத்தி ரூபமாகவும் பரிஹரணீயங்களில் நிவ்ருத்தி ரூபமாகவும் பண்ண வேண்டும் வ்ருத்தியில் எனக்குள்ள ஜ்ஞாந பலங்களுக்கு அநுரூபமாக உபாய புத்தியையும் அதிலங்கநத்தில் பரம பல ப்ரதிபந்தக புத்தியையும் விட்டு ப்ரவர்த்தியா நின்றேன் என்கையிலே தாத்பர்யம். 14

(15)' ப்ரபத்திக்குக் கோலி(ரி)ன பலத்திற்கு ஒன்றாலும் ப்ரதிபந்தகமில்லை ' என்றது

' मित्रभावेन संप्राप्तं न त्यजेयं कथंचन।
दोषो यद्यपि तस्य स्यात् सतामेतदगर्हितम् ॥ '

---

நான்கு இந்த்ரியங்களும், குப்தாநி - காப்பாற்றப் பட்டிருக்கிறதோ, ஸவை - அவனே, புமாந் - மனிதன்.

1 முதல் திருவந்தாதி 64 2 திருப்பாவை 2

3 விஹிதே - சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கார்யத்திலும், ப்ரதிஷித்தே ச - தடுக்கப்பட்ட கார்யத்திலும் யதாமதி - என்னுடைய புத்திக்குத் தக்கபடியும் யதாபலம் - சக்திக்குத் தக்கபடியும், ஸ்ரீமந் ச்ரிய:பதியாகிய ஸ்ரீநாராயணனே ! த்வயி - உம்மிடத்தில், ஆஹிதபர: - ஸமர்ப்பிக்கப்பட்ட பரத்தையுடையவனாக, ராஜ குமாரவத் - ராஜ குமாரனைப் போலே, வர்த்தே - இருக்கிறேன்.

1 (மித்ர பாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந ।
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேததகர்ஹிதம் ॥)

2 ‘ कौन्तेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति ’
(கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே பக்தஃ ப்ரணஶ்யதி)

3 ‘ सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥ ’
(ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாஶுசஃ ॥)

4 ‘ मामेकमेव शरणमात्मानं सर्वदेहिनाम् ।
याहि सर्वात्मभावेन यास्यसि ह्यकुतो भयम् ॥ ’
(மாமேகமேவ ஶரணமாத்மாநம் ஸர்வதேஹிநாம் ।
யாஹி ஸர்வாத்ம பாவேந யாஸ்யஸி ஹ்யகுதோபயம் ॥)
என்கிறபடியே ஶரண்யாபிப்ராய விஶேஷத்தாலும்,

---

1 ராமா - யுத்த - 18 - 3 மித்ரபாவேந - ஸ்நேஹிதனுயிருக்க வேண்டும் என்கிற எண்ணத்திஞல், ஸம்ப்ராப்தம் - நன்ருய் வந்து அடைந்தவனை, கதஞ்சந - ஒரு விதத்திஞலும், ந த்யஜேயம்- விடமாட்டேன். தஸ்ய- அவனுக்கு, தோஷ:-தோஷம், யத்யபி ஸ்யாத் - இருந்தாலும் இருக்கட்டும், ஏதத் - இது (தோஷமிருப்பவனையும் காப்பாற்றுவது என்பது), ஸதாம் - பெரியோர்களுக்கு, அகர்ஹிதம் – நிந்திக்கத் தகாதது ( ஸ்தோத்ரம் பண்ணத்தக்கது என்றபடி)

2 கீதை - 9 - 31 கௌந்தேய - ஓ! அர்ஜுந, மே - என்னுடைய, பக்த: - பக்தன், ந ப்ரணச்யதி - நாசமடைகிறதில்லை என்கிற விஷயத்தில், ப்ரதிஜாநீஹி - நீ ப்ரதிஜ்ஞை செய்.

3 கீதை 18 - 66 ஸர்வதர்மாந் - எல்லாத் தர்மங்களையும், பரித்யஜ்ய - விட்டுவிட்டு,(அங்கமாக அநுஷ்ட்டிக்காமல் என்றபடி), மாமேகம் - என்னை ஒருவனையே, சரணம் - சரணமாக, வ்ரஜ-அடை,அஹம்-நான், த்வாம் - உன்னை, ஸர்வபாபேப்ய: - எல்லாப் பாபங்களிலிருந்தும் மோக்ஷயிஷ்யாமி - விடுவிக்கிறேன், மா சுச: - நீ துக்கிக்காதே,

4 ஸர்வதேஹிநாம் - எல்லா ப்ராணிகளுக்கும், ஆத்மாநம் - ஆத்மாவாகிய, மாம் - என்னை, ஏகம்-ஒருவனையே,ஸர்வாத்மபாவேந எல்லாவற்றிற்கும் இவன் அந்தராத்மா என்கிற புத்தியிஞல், சரணம் யாஹி - சரணமாக அடை, அகுதோ பயம் - ஒரு ப்ராணியிடத்திலிருந்தும் பயமில்லாமையை, யாஸ்யஸி - அடையப்போகிருய்.

1 'तेषां तु तपसां न्यासमतिरिक्तं तपः श्रुतम्'
(தேஷாம் து தபஸாம் ந்யாஸமதிரிக்தம் தப: ஶ்ருதம்)
என்கிற ப்ரபாவாதிஶயத்தாலும்,

2 'नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥'
(நேஹாபிக்ரம நாஶோஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥ )
என்கிற நிவ்ருத்திதர்மாந்தரத்தில் சொன்ன நிஷ்கர்ஷம் நிஷ்காமனுடைய ப்ரபத்தியில் கைமுதிக நயாய ஸித்தமாகையாலும்,

3 'याचनात् नश्यति ध्रुवम्'
(யாசநாத் நஶ்யதி த்ருவம்)

4 'उपायापाय संयोगे निष्ठया हीयतेऽनया'
(உபாயாபாய ஸம்யோகே நிஷ்ட்டயா ஹீயதேநயா)
என்றது

5 'एषा सा वैदिकी निष्ठा हि उपायापाय मध्यमा'

---

1 அஹிர்புத்ந்யஸம்ஹிதை-37 - 36 தேஷாம் - அந்த, தபஸாம்-தபஸ்ஸுக்களுக்குள், ந்யாஸம் - சரணாகதி, அதிரிக்தம் - மேற்பட்டதான, தப:-தபஸ்ஸாக, ச்ருதம் - ச்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது

2 கீதை - 2 - 40 இஹ - இந்த நிவ்ருத்தி தர்மமாக அனுஷ்ட்டிக்கப்படுமதில், அபிக்ரம நாச: - ஆரம்பிக்கப்பட்டதற்கு நாசம், நாஸ்தி-இல்லை, ( நடுவில் விட்டுப்போனாலும்), ப்ரத்யவாய: - தோஷம், ந வித்யதே-காணப்படவில்லை, அஸ்ய-இந்த, தர்மஸ்ய - நிவ்ருத்திதர்மத்தினுடைய, ஸ்வல்பமபி,- கொஞ்சமும், மஹதோபயாத் -பெரிய பயத்திலிருந்து, த்ராயதே - காப்பாற்றுகிறது.

3 யாசநாத் - (இதர பலன்களை)யாசிப்பதினால்,த்ருவம் - நிச்சயமாக, நச்யதி -நாசமடைகிறான்.

4 உபாயாபாய ஸம்யோகே - காம்யகர்மங்களுடையவும் நிஷித்த கர்மங்களினுடையவும் ஸம்பந்தம் ஏற்பட்டால், அநயா - இந்த, நிஷ்ட்டயா - நிஷ்ட்டையினால், ஹீயதே - குறைந்துவிடுகிறான்.

5 ஏஷா - இது, ஸா - அப்படிப்பட்ட, வைதிகீ- வேதத்தில் சொல்லப்பட்ட, உபாயாபாய மத்யமா - உபாயம் அபாயம் இவை இரண்டிற்கும் நடுவில் இருக்கிற, நிஷ்ட்டா - நிலைமை.

(ஏஷா ஸா வைதிகீ நிஷ்ட்டாஹி உபாயாபாய மத்யமா)
என்கிறபடியே உபாயாபாய த்யாகவிஶிஷ்ட மத்யம வ்ருத்தியினுடையவிஶேஷண வைகல்யமாத்ர பரமாகையாலும்,

1 ' राक्षसानामविस्रम्भात् आंजनेयस्य बन्धने ।
यथा विगलिता सद्यः त्वमोघाप्यस्त्रबन्धना ।।
तथा पुंसामविस्रम्भात् प्रपत्तिः प्रच्युता भवेत् ।
तस्मात् विस्रम्भयुक्तानां मुक्तिं दास्यति साऽचिरात् ।। '

(ராக்ஷஸாநாம் அவிஸ்ரம்பாத் ஆஞ்ஜநேயஸ்ய பந்தநே ।
யதா விகளிதா ஸத்ய: த்வமோகாப்யஸ்த்ரபந்தநா ।।
ததா பும்ஸாமவிஸ்ரம்பாத் ப்ரபத்தி: ப்ரச்யுதா பவேத் ।
தஸ்மாத் விஸ்ரம்பயுக்தாநாம் முக்திம் தாஸ்யதி ஸாசிராத் ।।)
என்றது ப்ரபத்த்யநுஷ்ட்டாந காலத்தில் விஶ்வாஸ ரூபாங்க வைகல்ய பரிஹார பரமாகையாலும்,

1 ' यज्ञोऽनृतेन क्षरति तपः क्षरति विस्मयात् ।
आयुः विप्रावमानेन दानं क्षरति कीर्तनात् ।। '

(யஜ்ஞோஅந்ருதேந க்ஷரதி தப : க்ஷரதி விஸ்மயாத் ।
ஆயு : விப்ராவமாநேந தாநம் க்ஷரதி கீர்த்தநாத் ।। )

---

1 ஸநத்குமார ஸம்ஹிதை ஆஞ்ஜநேயஸ்ய பந்தநே - (ப்ரஹ்மாஸ்த்ரத்தினால்) ஹனுமாரைக்கட்டுவதில், ராக்ஷஸாநாம் - ராக்ஷஸர்களினுடைய அவிஸ்ரம்பாத் - நம்பிக்கையில்லாமையினால், அமோகாபி - வீண் போகாததாய் இருந்தபோதிலும், அஸ்த்ரபந்தநா-அஸ்த்ரத்தின் கட்டு, யதா - எப்படி, ஸத்ய: - அப்பொழுதே, விகளிதா- நழுவிப்போய் விட்டதோ, ததா – அப்படியே, பும்ஸாம் - மனிதர்களுடைய, அவிஸ்ரம்பாத் - நம்பிக்கையில்லாமையினால், ப்ரபத்தி: - ப்ரபத்தியானது, ப்ரச்யுதா – நழுவினதாக, பவேத் - ஆகும், தஸ்மாத் - ஆகையினால், விஸ்ரம்பயுக்தாநாம் - நம்பிக்கையுடையவர்களுக்கு, ஸா-அந்த, ப்ரபத்தி, அசிராத் - சீக்ரத்திலேயே, முக்திம் - மோக்ஷத்தை, தாஸ்யதி- கொடுக்கப்போகிறது.

1 மனுஸ்ம்ருதி - 4 - 237 யஜ்ஞ: - யாகம், அந்ருதேந - பொய் சொல்லுவதினால், க்ஷரதி - நாசம் அடைகிறது, தப: - தபஸ்ஸு, விஸ்மயாத் - கர்வத்தினால், க்ஷரதி, ஆயு: - ஆயுஸ், விப்ராவமாநேந-ப்ராஹ்மணர்களை அவமதிப்பதினால், க்ஷரதி, தாநம் - தாநம் செய்வது, கீர்த்தநாத் - தானே சொல்லிக்கொள்ளுவதினால், க்ஷரதி.

இத்யாதிகளில் போலே மற்றும் ப்ரபத்திக்கு விஶேஷித்து ப்ரதிபந்தகாதிகளைச் சொல்லுவதொரு விஶேஷ வசநமில்லாமையாலும், லோகவேதங்களில் ஓர் இடத்திலும் ஸமர்த்த காருணிக விஷய ஶரணாகதிக்குப் பலஹாநி காணாமையாலும், அபவாத பீதரான ஸ்ரீ பரதாழ்வான்

1 ' शेष्ये पुरस्तात् शालायाः '

( ஶேஷ்யே புரஸ்தாத் ஶாலாயா: )

2 ' शिरसा याचतस्तस्य वचनं न कृतं मया '

(ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா )

இத்யாதி மாத்ரத்தைக் கொண்டு ப்ரபத்தி பண்ணினார் என்று சொல்லுமதற்கு யதாபிப்ராயம் யதாகாலம் அபிமதஸித்தியுண்டாகையாலும்,

3 ' तावदार्तिस्तथा वांछा तावन्मोहस्तथाऽसुखम् ।
यावन्न याति शरणं त्वामशेषाघनाशनम् ॥ '

(தாவதார்த்திஸ் ததா வாஞ்ச்சா தாவந்மோஹஸ் ததாऽஸுகம் ।
யாவந்ந யாதி ஶரணம் த்வாமஶேஷாகநாஶநம் ॥)

என்று பகவத் ப்ரபந்நனுக்கு அபிமதபலம் அப்போதே ஸித்திக்கும்படி நிற்கையாலும், ஸர்வ ஶக்தியாய்ப் பரம காருணிகனான ஸர்வேஶ்வரனைப் பற்றி ப்ரபத்தி பண்ணுகிறவன் யாதொரு காலத்திலே யாதொரு பலம் வரவேண்டுமென்று கோலி(ரி)னான், அந்தக் காலத்திலே அந்தப் பலம் அவனுக்கு வருகை நியதம், நடுப்புகுந்த நிஷித்த காம்யங்களும் அதுகது ப்ரதிபந்தகங்களன்றிக்கே அதிகாரானுகுண ப்ராயஶ்சித்தாதிகளா வ தீர்ந்து விடும் என்றபடி. ௰

(16) ' புத்திபூர்வ அபசாரங்கள் புகுந்தாலும் ப்ராயஶ்சித்த விஶேஷம் அதிகாரி விஶேஷநியதம் ' என்றது

1 ராமா-அயோ-111-14 சாலாயா:(ஆச்ரமத்தின்)பர்ணசாலையின், புரஸ்தாத் - முன் பாகத்தில், சேஷ்யே-படுத்துக்கொள்ளப்போகிறேன்.

2 ராமா-யுத்-124-19 சிரஸா-தலையினால்(வணங்கி)யாசத:-ப்ரார்த்தித்த, தஸ்ய - அந்தப் பரதனுடைய, வசநம் - வார்த்தை, மயா- என்னால், ந க்ருதம் செய்யப்படவில்லை.

3 121-ம் பக்கம் பார்க்க.

1 ‘ शरीरं बलमायं च वयः कालं च कर्म च।
समीक्ष्य धर्मविद् बुद्ध्या प्रायश्चित्तानि निर्दिशेत् ॥’
(ஶரீரம் பலமாயம் ச வய: காலம் ச கர்ம ச |
ஸமீக்ஷ்ய தர்மவித் புத்த்யா ப்ராயஶ்சித்தாநி நிர்த்திஶேத் ||)

2 ‘ अपि चेत् पातकं किंचित् योगी कुर्यात् प्रमादतः।
योगमेव हि कुर्वीत नान्यं यत्नं समाचरेत् ॥’
(அபி சேத் பாதகம் கிஞ்சித் யோகீ குர்யாத் ப்ரமாதத: |
யோகமேவ ஹி குர்வீத நாந்யம் யத்நம் ஸமாசரேத் ||)

3 ‘ उपपातकयुक्तोपि महापातकवानपि।
यामिन्याः पादमेकं तु ब्रह्मध्यानं समाचरेत् ॥’
(உபபாதகயுக்தோபி மஹாபாதகவாநபி |
யாமிந்யா: பாதமேகம் து ப்ரஹ்மத்யாநம் ஸமாசரேத் ||)

4 ‘ ‘ अथ पातकभीतस्त्वं सर्वभावेन भारत।
विमुक्तान्यसमारंभो नारायणपरो भव ॥’

---

1 சரீரம் - தேஹத்தையும், பலம் - பலத்தையும், ஆயம்ச- வரும் படியையும், வய: - வயதையும், காலம்ச - காலத்தையும், கர்மச – (ப்ராயச்சித்தத்திற்குக் காரணமாக ஏற்பட்ட) கர்மத்தையும், புத்த்யா - தன்னுடைய புத்தியினுல், ஸமீக்ஷ்ய- யோசித்து, தர்மவித் - தர்மத்தை அறிந்தவன், ப்ராயச்சித்தாநி - ப்ராயச்சித்தங்களை, நிர்த்திசேத் - விதிக்கவேண்டும்.

2 யோகீ - யோகம் செய்பவன், ப்ரமாதத: - அஜாக்ரதையினுல், கிஞ்சித் - ஒரு, பாதகம் - பாபத்தை, குர்யாத்சேத் - செய்வானேயாகில், யோகமேவ - யோகத்தையே, குர்வீத - செய்யக் கடவன், (அதற்குப் பரிஹாரமாக), அந்யம் - வேறு, யத்நம் - ப்ரயத்னத்தை, ந ஸமாசரேத் – செய்யக்கூடாது.

3 விஷ்ணு தர்மம்—66-72. உபபாதக யுக்தோபி - உபபாதகத்தைச் செய்தவனுயிருந்தபோதிலும், மஹாபாதகவாநபி-மஹாபாதகத்தைச் செய்தவனுயிருந்தபோதிலும், யாமிந்யா:-ராத்திரியினுடைய, ஏகம் - ஒரு, பாதம் - கால் பாகத்தில், ப்ரஹ்மத்யாநம் -பகவானுடைய த்யானத்தை, ஸமாசரேத் - செய்யவேண்டும்,

4 அத - அப்படிக்கில்லாவிடில், பாரத - ஓ ! யுதிஷ்டிரனே, பாதகபீத: - பாபங்களில் இருந்து பயந்தவனுகிய, த்வம் - நீ, ஸர்வபாவேந - எல்லாவித அபிப்ராயத்தினு

(அத பாதகபீதஸ் த்வம் ஸர்வபாவேந பாரத ।
விமுக்தாந்ய ஸமாரம்போ நாராயணபரோ பவ ॥)

1 ' मेरुमन्दरमात्रोपि राशिः पापस्य कर्मणः ।
केशवं वैद्यमासाद्य दुर्व्याधिरिव नश्यति ॥ '

(மேருமந்தரமாத்ரோபி ராசி: பாபஸ்ய கர்மண: ।
கேசவம் வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவ நச்யதி ॥ )

2 ' नाम्नस्ते यावती शक्तिः पापनिर्हरणे हरे ।
श्वपचोपि नरः कर्तुं क्षमस्तावन्न किल्बिषम् ॥ '

(நாம்நஸ்தே யாவதீ ஶக்தி: பாபநிர்ஹரணே ஹரே ।
ஶ்வபசோபி நர: கர்த்தும் க்ஷமஸ்தாவந் ந கில்பிஷம் ॥)

3 ' अवशेनापि यन्नाम्नि कीर्तिते सर्वपातकैः ।
पुमान् विमुच्यते सद्यः सिंहत्रस्तैः मृगैरिव ॥ '

(அவஶேநாபி யந்நாம்நி கீர்த்திதே ஸர்வபாதகை: ।
புமாந் விமுச்யதே ஸத்ய: ஸிம்ஹ த்ரஸ்தை: ம்ருகைரிவ ॥)

' अयं हि कृत निर्वेशो जन्मकोट्यंहसामपि ।
यत् व्याजहार विवशो नाम स्वस्त्ययनं हरेः ॥ '

---

லும், விமுக்தாந்ய ஸமாரம்ப: - வேறுப்ரயத்தினங்களை விட்டு விட்டு, நாராயணபர:- நாராயணனை ஆச்ரயித்தவனாக, பவ - ஆகக்கடவாய்.

1 பாபஸ்யகர்மண: - பாபகர்மங்களின், ராசி: - கும்பல், மேருமந்தர மாத்ரோபி - மேரு பர்வதம், மந்த பர்வதம் இவைகளின் அளவாக இருந்தபோதிலும், கேசவம் - பகவானாகிய, வைத்யம் ஆஸாத்ய-வைத்யனை அடைந்து, (வைத்யனை அடைந்த) துர்வ்யாதிரிவ - கெட்டவ்யாதியைப் போல, நச்யதி - நசித்து விடுகிறது.

2 — —ஹரே -பகவானே ! தே-உம்முடைய, நாம்ந: - திருநாமத்திற்கு, பாப நிர்ஹரணே - பாபத்தைப் போக்கடிப்பதில், யாவதீசக்தி:- எவ்வளவு சக்தி, அஸ்தி - இருக்கிறதோ, தாவத் - அவ்வளவு, கில்பிஷம் - பாபத்தை, ச்வபச: - சண்டாளனாகிய, நர: அபி - மனிதனும், கர்த்தும்-செய்வதற்கு, ந க்ஷம: - சக்தியுடையவனல்லன்.

3 விஷ்ணு புராணம்—6-8-19. யந்நாம்நி - எந்தப் பகவானுடைய திருநாமம், அவசேநாபி - எண்ணமில்லாமலே, கீர்த்திதே-சொல்லப் பட்டிருக்கு மளவில், புமாந் - மனிதன், ஸத்ய:- அப்பொழுதே, ஸிஹ்மத்ரஸ்தை: - ஸிஹ்மத்தினிடத்தில் இருந்து பயந்திருக்கிற, ம்ரு-

1(அயம் ஹி க்ருத நிர்வேஶோ ஜந்மகோட்யம்ஹஸாமபி ।
யத் வ்யாஜஹார விவஶோ நாம ஸ்வஸ்த்யயநம் ஹரே: ॥ )

2 ' प्रायश्चित्तान्यशेषाणि तपःकर्मात्मकानि वै ।
यानि तेषामशेषाणां कृष्णानुस्मरणं परम् ॥ '

(ப்ராயஶ்சித்தாங்யஶேஷாணி தப: கர்மாத்மகாநி வை ।
யாநி தேஷாமஶேஷாணாம் க்ருஷ்ணாநுஸ்மரணம் பரம் ॥ )

कृते पापेऽनुतापो वै यस्य पुंसः प्रजायते ।
प्रायश्चित्तं तु तस्यैकं हरिसंस्मरणं परम् ॥'

(க்ருதே பாபேऽநுதாபோ வை யஸ்ய பும்ஸ: ப்ரஜாயதே ।
ப்ராயஶ்சித்தம் து தஸ்யைகம் ஹரிஸம்ஸ்மரணம் பரம் ॥'

3 'अतिपाप प्रसक्तोपि ध्यायन् निमिषमच्युतम् ।
भूयस्तपस्वी भवति पङ्क्तिपावनपावनः ॥ '

(அதிபாப ப்ரஸக்தோபி த்யாயந் நிமிஷம் அச்யுதம் ।
பூயஸ்தபஸ்வீ பவதி பங்க்தி பாவநபாவந: ॥ )

---

கைரிவ - ம்ருகங்களினுலே போல, ஸர்வபாதகை: - எல்லாப்பாபங்களி னுலும் விமுச்யதே - விடப்படுகிருன்.

1 ——அயம் - இவன், ஜந்மகோட்யம்ஹஸாமபி-கோடி ஜன்மங் களில் செய்த பாபங்களுக்கும், க்ருத நிர்வேச: - ப்ராயச்சித்தம் செய் தவன், யத் - எந்தக் காரணத்திருல், விவச: - பரவசனுய், ஸ்வஸ்த்ய யநம் - மங்களத்தைக் கொடுக்கக் கூடிய, ஹரே: - பகவானுடைய, நாம - திரு நாமத்தை, வ்யாஜஹார - சொன்னுனே.

2 விஷ்ணு புராணம்—5-6-39, 40. அசேஷாணி - எல்லா, தப: கர்மாத்மகாநி - தபஸ்ஸு, யாகம், முதலிய கர்மங்களாக இருக்கிற, யாநி - எந்த, ப்ராயச்சித்தாநி - ப்ராயச்சித்தங்களோ, அசேஷாணும் தேஷாம் – அவைகள் எல்லாவற்றிற்கும், க்ருஷ்ணுநுஸ்மரணம்-க்ருஷ் ணனை நினைப்பது, பரம் - உயர்ந்தது. பாபே - பாபமானது க்ருதே - செய்யப்பட்டிருக்கும்பொழுது, யஸ்ய - எந்த, பும்ஸ: - மனிதனுக்கு, அநுதாப: - அநுதாபமானது, ப்ரஜாயதே - உண்டாகிறதோ, தஸ்ய - அவனுக்கு, ஏகம் - ஒன்ருகிய, ஹரிஸம்ஸ்மரணம் - பகவானை நினைப் பதே, பரம் - உயர்ந்த ப்ராயச்சித்தம்.

3———அதி பாப ப்ரஸக்தோபி - அதிகமான பாபத்துடன், கூடினவனுயிருந்தபோதிலும், நிமிஷம் - ஒரு நிமிஷம் அச்யுதம் - பக வானை, த்யாயந் - த்யாநம் செய்கிறவன், பூய: - அதிகமாக, தபஸ்வீ - ரிஷியாகவும், பங்க்தி பாவந பாவந: - பங்க்தியைப்பரிசுத்தம் செய்யக் கூடியவர்களையும் பரிசுத்தம் செய்யக்கூடியவனுய், பவதி - ஆகிருன்

1 ' नारायणं जपेत् नित्यं प्रणम्य पुरुषोत्तमम् ।
स्वपन् नारायणं देवं गच्छन् नारायणं तथा ॥ '
(நாராயணம் ஜபேந் நித்யம் ப்ரணம்ய புருஷோத்தமம் ।
ஸ்வபந் நாராயணம் தேவம் கச்சந் நாராயணம் ததா ॥)
भुंजन् नारायणं विप्रः तिष्ठन् जाग्रत् सनातनम् ।
उन्मिषन् निमिषन्वापि नमो नारायणेति वै ॥
(புஞ்ஜந் நாராயணம் விப்ர: திஷ்டந் ஜாக்ரத் ஸநாதநம் ।
உந்மிஷந் நிமிஷந் வாபி நமோ நாராயணேதி வை ॥)
भोज्यं पेयं च लेह्य च नमो नारायणेति यः ।
अभिमन्त्र्य स्पृशन् भुङ्क्ते स याति परमां गतिं ॥ '
सर्वपाप विनिर्मुक्तः प्राप्नोति परमां गतिम् । '
(போஜ்யம் பேயம் ச லேஹ்யம் ச நமோ நாராயணேதி ய : ।
அபிமந்த்ர்ய ஸ்ப்ருஶந் புங்க்தே ஸ யாதி பரமாம் கதிம் ॥
ஸர்வபாப விநிர்முக்த: ப்ராப்நோதி பரமாம் கதிம் )
இத்யாதிகளில்படியே ஏக நிமித்தம் தனக்கே வித்வத் அவிதவத்

---

1 நித்யம்-தினம்தோறும், புருஷோத்தமம்-புருஷோத்தமனாகிய நாராயணம் - நாராயணனை, ப்ரணம்ய - ஸேவித்துவிட்டு, ஜபேத் - ஜபிக்க வேண்டும், விப்ர:-ப்ராஹ்மணன், ஸ்வபந்-தூங்கும்பொழுதும், தேவம்-தேவனாகிய, நாராயணம் - நாராயணனை, ததா - அப்படியே, கச்சந் - நடந்துபோய்க் கொண்டிருக்கும் பொழுதும், நாராயணம் - நாராயணனை, புஞ்ஜந் - சாப்பிடும்பொழுதும், நாராயணம் - நாராயணனை, திஷ்டந் - நின்று கொண்டிருக்கும் பொழுதும், ஜாக்ரத் - விழித்துக் கொண்டிருக்கும் பொழுதும், உந்மிஷந் - கண்களைத் திறந்துகொண்டிருக்கும் பொழுதும், நிமிஷந்வாபி-மூடிக்கொண்டிருக்கும்பொழுதும், நமோநாராயணேதி-நமோ நாராயணா (என்றநுஸந்தாநம்செய்ய வேண்டும்),போஜ்யம் - சாப்பிடக் கூடிய வஸ்துவையும், பேயம்ச - பருகக் கூடிய வஸ்துவையும், லேஹ்யம்ச - நக்கி சாப்பிடக்கூடியவைகளையும், ய: - எவன், நமோ நாராயணேதி - நமோ நாராயணா என்று, அபிமந்த்ர்ய - மந்திரத்தைச் சொல்லி, ஸ்ப்ருசந் - தொட்டுவிட்டு, புங்க்தே-சாப்பிடுகிறானோ, ஸ: - அவன், பரமாம்கதிம்-உயர்ந்த கதியை, யாதி - அடைகிறான், ஸர்வபாப விநிர்முக்த: - எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபட்டவனாய், பரமாம் கதிம் - உயர்ந்த கதியை, யாதி - அடைகிறான்.

வர்ண ஆச்ரம வயோவஸ்த்தாதி வைஷம்யத்தாலே ப்ராயஶ்சித்தம் நாநா ப்ரகாரமாய்ப் போருகிறபடியே ப்ரபந்நனைப்பற்ற

1 ' अपाय संप्लवे सद्यः प्रायश्चित्तं समाचरेत् ।
प्रायश्चित्तिरियं सात्र यत् पुनः शरणं व्रजेत् ॥ '

(அபாயஸம்ப்லவே ஸத்ய: ப்ராயஶ்சித்தம்ஸமாசரேத் ।
ப்ராயஶ்சித்திரியம் ஸாத்ர யத்புந: ஶரணம் வ்ரஜேத்।)
என்றபடிக்கு விசேஷ வசநமுண்டாகையாலும்,

2 ' यदि किंचिदतिक्रान्तं विश्वासात् प्रणयेन वा ।
प्रेष्यस्य क्षमितव्यं मे न कश्चित् नापराध्यति ॥ '

(யதி கிஞ்சித் அதிக்ராந்தம் விச்வாஸாத் ப்ரணயேந வா ।
ப்ரேஷ்யஸ்ய க்ஷமிதவ்யம் மே ந கஶ்சிந் நாபராத்யதி ॥ )
இத்யாதிகளிற் சொன்ன ந்யாயத்தாலும், இப்படிக்கு ஸத்ஸம்ப்ரதாயாநுஷ்ட்டாநம் உண்டாகையாலும், பரமாத்ம நிஷ்ட்டனுக்கு அக்ருத்ய கரண க்ருத்யாகரணங்களால் பாபம் பிறவாது என்கிற வாக்யமும் ஸ்துதிபரம், உத்தராக அஶ்லேஷ வசநமும் ப்ராமாதிக விஷயமாக பாஷ்யாதிகளிலே ஸ்த்தாபிக்கையாலும்

3 ' अनन्य साध्ये स्वाभीष्टे महाविश्वासपूर्वकम् ।
तदेकोपायता याच्ञा प्रपत्तिः शरणागतिः ॥ '

---

1 127ம் பக்கம் பார்க்க.

2 ராமா - கிஷ்கி—30 -11. விச்வாஸாத் - நம்பிக்கையினாலாவது, ப்ரணயேந வா-ப்ரீதியினாலாவது, ப்ரேஷ்யஸ்ய - தாஸனாகிய, மே - என்னுடைய, அதிக்ராந்தம் - மீறி நடந்தது தேவரீர் திருவுள்ளத்திற்கு கிஞ்சித்யதி-ஏதாவது ஒன்று இருந்தால், (அது), க்ஷமிதவ்யம் - பொறுத்துக் கொள்ளத்தக்கது, கச்சித் - ஒருவனும், நாபராத்யதி - அபராதம் செய்வதில்லை என்பது, ந - இல்லை.

3 பரதமுனி லக்ஷண வாக்யம். ஸ்வாபீஷ்டே - தன்னுடைய இஷ்ட பலம், அநந்ய ஸாத்யே - வேறு ஒன்றினாலும் ஸாதிக்கத்தகாததாக இருக்கும் பக்ஷத்தில், மஹாவிச்வாஸ பூர்வகம் - மஹா விச்வாஸத்தை முன்னிட்டு, ததேகோபாயதா யாச்நா - அந்தப் பகவான் ஒருவனே உபாயமாக இருக்க வேண்டும் என்று யாசிப்பது, ப்ரபத்தி, சரணாகதி: - ப்ரபத்தி என்றும், சரணாகதி என்றும் சொல்லப்படுகிறது.

(அநந்யஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிச்வாஸபூர்வகம் ।
ததேகோபாயதா யாச்ஞா ப்ரபத்தி: ஶரணாகதி: ।)

இத்யாதி ப்ரபத்தி லக்ஷண வாக்யாநுகுணமாகப் புத்தீ பூர்வாபசாரங்கள் புகுந்ததாகிலும் அவற்றுக்கு ப்ரதிபதோக்த ப்ராயஶ்சித்த யோக்யதையில்லாதபோதும் ப்ரபந்நனுக்கும்,

1‘ यद्येन कामकामेन न साध्यं साधनान्तरैः ।
मुमुक्षुणा यत् सांख्येन योगेन न च भक्तितः ॥
प्राप्यते परम धाम यतो नावर्तते यतिः ॥’

(யத்யேந காம காமேந ந ஸாத்யம் ஸாதநாந்தரை: ।
முமுக்ஷுணா யத் ஸாங்க்யேந யோகேந ந ச பக்தித: ॥
ப்ராப்யதே பரமம் தாம யதோ நாவர்த்ததே யதி: ।)

तेन तेनाप्यते तत्तत् न्यासेनैव महामुने ।
परमात्मा च तेनैव साध्यते पुरुषोत्तमः ॥’

தேந தேநாப்யதே தத்தத் ந்யாஸேநைவ மஹாமுநே ॥)
(பரமாத்மா ச தேநைவ ஸாத்யதே புருஷோத்தம: ।) என்றும்,

2‘ सा हि सर्वत्र सर्वेषां सर्वकामफलप्रदा ’
(ஸா ஹி ஸர்வத்ர ஸர்வேஷாம் ஸர்வகாமபலப்ரதா )

---

1 அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை - 37-25. காம காமேந - காம்ய பலத்தை ஆசைப்படுகிற, யேந - எந்தப் புருஷனால், யத்-எந்தக் காம்ய பலம், ஸாதநாந்தரை: - இதர உபாயங்களினால், நஸாத்யம் - ஸாதிக்கமுடியாததோ, முமுக்ஷுணா - மோக்ஷத்தில் ஆசையுடையவனாகிய மனிதனால், யத: - எந்தப் பலனிலிருந்து, யதி:- யதியானவன், நாவர்த்ததே - திரும்பிவருகிறதில்லையோ, (அப்படிப்பட்ட) யத் - எந்த, பரம் தாம - பரமபதம், ஸாங்க்யேந - ஜ்ஞாந யோகத்தினாலும், பக்தித: - பக்தியோகத்தினாலும், ந ப்ராப்யதே - அடையப்படுகிறதில்லையோ, தேநதேந-அந்தந்த மனிதனால், தத்தத்-அந்தந்தப் பலன், மஹாமுநே- ஓ! மஹர்ஷியே, ந்யாஸேநைவ - சரணாகதியினாலேயே, ஆப்யதே - அடையப்படுகிறது புருஷோத்தம:- புருஷச்ரேஷ்டனான, பரமாத்மாச - பரமாத்மாவும், தேநைவ - அந்தச் சரணாகதியினாலேயே, ப்ராப்யதே- அடையப்படுகிறான்.

1. ஸநத்குமார ஸம்ஹிதை ஹி - எந்தக் காரணத்தினால், ஸா அந்தச் சரணாகதி, ஸர்வேஷாம் - எல்லா ஜனங்களுக்கும், ஸர்வத்ர - எல்லா இடத்திலும், ஸர்வகாம பலப்ரதா - எல்லாக் காம்ய பலன்களையும் கொடுக்கக் கூடியதோ.

என்றும் ப்ரதிபாதிதமான ப்ரபாவத்தையுடைத்தான ப்ரபத்தி தன்னையே மீண்டும் ப்ரயோகிக்கு மதுவே ஸ்வாதிகாராநு குண ப்ராயஶ்சித்தமாகக் கடவது என்றபடி. 16

(17)'இப்படி ப்ராயஶ்சித்தத்திலே மூட்டுகிறதும் கடிந ப்ரக்ருதிகளுக்குக் கசை காட்டுவாரைப் போலே அவன் பண்ணுகிற ஶிக்ஷைகளும் எல்லாம் ஶரண்ய ப்ரஸாதபலம் ' என்றது

1 ' यं हि रक्षितु मिच्छन्ति बुद्धया संयोजयन्ति तम् '
(யம் ஹி ரக்ஷிதும் இச்சந்தி புத்த்யா ஸம்யோஜயந்தி தம்)
என்கிற ஸாமாந்ய ந்யாயத்தாலும்,

2 ' रक्षते भगवान् विष्णुः भक्तानात्मशरीरवत् '
(ரக்ஷதே பகவாந் விஷ்ணு: பக்தாநாத்மஶரீரவத் ||)
என்கிற விஶேஷ வசநத்தாலும் ஆஶ்ரிதவிஷயத்தில் ஈஶ்வரன் செய்யுமவையெல்லாம் ப்ரஸாதபலமாகவேண்டுகையாலேஹிதைஷிகளான பித்ராதிகளைப்போலே அநுதாபாதிகளை விளைப்பித்து, ஶாஸ்த்ர முகத்தாலே ப்ராயஶ்சித்த விஶேஷத்தை அறிவித்து, ப்ராயஶ்சித்தத்திலே மூட்டுகிறதும், விநீதரல்லாத புத்ராதிகளைக் கசாதிகளாலே பயம் பிறப்பிக்குமாபோலே உபக்லேஶங்களை விளைவித்துபரதியை உண்டாக்குமதுவும் ஸர்வபூத நிஸர்க்க ஸுஹ்ருத்தான ஸர்வலோக ஶரண்யனுடைய இரக்கமடியாக வருகிறது என்று க்ருதஜ்ஞராக ப்ராப்தம் என்றபடி. 17

(18) ' இங்கு இருந்த காலம் தர்மாநுபந்தியான போகத்திலும் போக புத்தியாலே ப்ராவண்யம் பிறந்ததாகில் இது தன் அதிகாராநுரூபமான கைங்கர்யாம்ருத ரஸத்திற்குத் தண்ணீர்த் துரும்பு ' என்றது

---

1. —— யம் - எவனை, ரக்ஷிதும் - காப்பாற்றுவதற்கு, இச்சந்தி - (தேவதைகள் விரும்புகிறார்களோ), தம் - அவனை, புத்த்யா - நல்ல புத்தியோடு, ஸம்யோஜயந்தி - சேர்க்கிறார்கள், அவனுக்கு நல்ல புத்தியைக் கொடுக்கிறார்கள் என்றபடி.

2. —— பகவாந் - பகவானாகிய, விஷ்ணு: - விஷ்ணு, பக்தாந் - தன்னிடத்தில் பக்தியுடையவர்களை, ஆத்மசரீரவத் - தன்னுடைய சரீரத்தைப்போல, ரக்ஷதே - காப்பாற்றுகிறான்.

1 ' रागाद्यपेतं हृदयं वागदुष्टाऽनृतादिना ।
हिंसादिरहितः कायः केशवाराधनं त्रयम् ॥ '
(ராகாத்யபேதம் ஹ்ருதயம் வாகதுஷ்டாऽந்ருதாதிநா।
ஹிம்ஸாதிரஹித: காய:கேசவாராதநம் த்ரயம் ||)

2 ' असक्तिरनभिष्वङ्गः पुत्र दार गृहादिषु '
(அஸக்திரநபிஷ்வங்க: புத்ரதார க்ருஹாதிஷு )
இத்யாதிகளிற்படியே ஆத்மகுணயுக்தனாய் இருந்தானொருவனாகிலும் க்ருஹஸ்த்தாவஸ்த்தையிலே தர்மாவிருத்த போகங்கள் ஶாஸ்த்ர பலத்தால் வரவேண்டி(யதாதலால்)அத்தால் முமுக்ஷுவானஇவனுக்கு,

3 ' शरीरं व्रणवत् पश्येत् अन्नं तु व्रणलेपनम् ।
व्रणसेचनवत् पानं वस्त्रं तु व्रणपट्टवत् ॥ '
(ஶரீரம் வ்ரணவத் பஶ்யேத் அந்நம் து வ்ரணலேபநம் ।
வ்ரணஸேசநவத் பாநம் வஸ்த்ரம்து வ்ரணபட்டவத் )
இத்யாதிகளிற்படியே வைராக்ய ஜ்ஞாந பக்த்யாதிகளுக்கு அநுகூலமான ஔஷதாதி க்ரமத்தாலே புத்திபண்ண ப்ராப்தமாயிருக்க, அநாதி துர்வாஸநா பரிபாக விஶேஷத்தாலே ப்ரயோஜநாந்தர பரனுடைய விலக்கடி இவனுடைய புத்தியிலே வருமதா

---

1. —— ராகாத்யபேதம் - காமம் முதலியவைகள் இல்லாத, ஹ்ருதயம் - மனதும், அந்ருதாதிநா - பொய் முதலியவைகளினால், அதுஷ்டா - தோஷத்தை யடையாத, வாக்-வாயும், ஹிம்ஸாதிரஹித: - அயலாருக்கு ஹிம்ஸை முதலியது செய்யாத, காய: -சரீரமும், த்ரயம் - இந்த மூன்றும், கேசவாராதநம் - பகவானுடைய ப்ரீதிக்குக் காரணமானவைகள்.

2. கீதை—13-9. அஸக்தி - (ஆத்மாவைத் தவிர வேறு வஸ்துக்களில்) பற்று இல்லாமையும், புத்ரதார க்ருஹாதிஷு - பிள்ளை, பத்நீ வீடு முதலியவைகளில், அநபிஷ்வங்க: - அதிகப் பற்றில்லாமையும்.

3 —சரீரம் - தேஹத்தை வ்ரணவத் - புண்ணைப் போலவும்,அந்நம் - ஆஹாரத்தை, வ்ரணலேபநம்-புண்ணுக்குப் பூசும் ஔஷதம் போலவும்,பாநம்-தண்ணீர் முதலியவற்றைக்குடிப்பதை வ்ரணஸேசநவத் - புண்ணை நனைப்பது போலவும் வஸ்த்ரம் - துணியை, வ்ரணபட்டவத் - புண்ணுக்குக் கட்டுகிற கட்டைப் போலவும், பச்யேத் - பார்க்கவேண்டும் (எண்ணவேண்டும்).

கில் இத்தால் வருவதொரு ப்ரதாந பல ப்ரதிபந்தம் இல்லையே யாகிலும் இப்போது இங்கு இருந்து அநுபவிக்கிற கைங்கர்ய ரஸத்துக்கு ஸங்கோசாதி ஹேதுவாகையாலே,

1 ' यन्मुहूर्तं क्षणं वाऽपि वासुदेवो न चिन्त्यते ।
सा हानिः तन्महच्छिद्रं सा भ्रान्तिः साच विक्रिया ॥

(யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே ।
ஸா ஹாநி: தந்மஹச்சித்ரம் ஸாப்ராந்தி: ஸா ச விக்ரியா ॥)

2 ' ஆவி திகைக்க ஐவர் குமைக்கும் சிற்றின்பம்
பாவியேனைப் பல காட்டிப் படுப்பாயோ '

என்று பீதனாக ப்ராப்தம் என்றபடி.

3 ' पृथिवीं रत्नसंपूर्णां यः कृष्णाय प्रयच्छति ।
तस्याप्यन्यमनस्कस्य सुलभो न जनार्दनः ॥ '

(ப்ருதிவீம் ரத்ந ஸம்பூர்ணாம் ய: க்ருஷ்ணாய ப்ரயச்சதி ।
தஸ்யாப்யந்ய மநஸ்கஸ்ய ஸுலபோ ந ஜநார்த்தந: ॥)

4 ' पराङ्मुखानां गोविन्दे विषयाक्रान्तचेतसाम् ।
तेषां तत् परमं ब्रह्म दूरात् दूरतरे स्थितम् ॥ '

(பராங்முகாநாம் கோவிந்தே விஷயாக்ராந்த சேதஸாம் ।
தேஷாம் தத் பரமம் ப்ரஹ்ம தூராத் தூரதரே ஸ்த்திதம் ॥)

---

1 யந்முஹூர்த்தம் - ஒரு முஹூர்த்த காலமாவது. க்ஷணம் வாபி – ஒரு க்ஷணகாலமாவது, வாஸுதேவ: - பகவான், நசிந்த்யதே - சிந்திக்கப் படவில்லை என்பது, யத் - எதுவோ, ஸா - அதுவே, ஹாநி :-நஷ்டம், தத் - அது, மஹத் - பெரியதான, சித்ரம் - தோஷம், காமம் குரோதம் முதலியவைகள் புகுவதற்கு வழி என்றபடி, ஸா - அது ,ப்ராந்தி: - ப்ரமம், ஸாச - அதுவே, விக்ரியா - ஆத்மாவிற்கு மாறுதல்.

2 திருவாய்---6-9-9.

3 ய: - எவன், ரத்நஸம்பூர்ணாம் - ரத்நங்கள் நிறைந்த,ப்ருதிவீம் - பூமியை. க்ருஷ்ணாய - ஸ்ரீ க்ருஷ்ணன் பொருட்டு, ப்ரயச்சதி - கொடுக்கிறானோ, தஸ்யாபி - அப்படிப் பட்டவனாயிருந்தபோதிலும். அந்யமநஸ்கஸ்ய - வேறு ப்ரயோஜநங்களில் ஆசையையுடைய மனிதனுக்கு. ஜநார்த்தந: - பகவான், ந ஸுலப:-அடையக்கூடியவனல்லன்

4 விஷ்ணு தர்மம்--99-13. கோவிந்தே - பகவானிடத்தில், பராங்முகாநாம-பக்தியில்லாதவர்களாயும், விஷயாக்ராந்த சேதஸாம் - சப்தாதி விஷயங்களினால் ஆக்ரமிக்கப்பட்டமனதை உடையவர்களாயும் இருக்கிற, தேஷாம் - அந்த மனிதர்களுக்கு, பரமம்ப்ரஹ்ம - பரப்

இத்யாதிகளில் (அ)வர்ஜநீய போகங்களன்றிக்கே மோக்ஷ ருசியை விலக்கும்படியான ப்ரயோஜநாந்தரங்களில் ப்ராவண்யத்தையுடையார்க்கு ஸர்வேஶ்வரன துர்லபன் என்கிறது.

1 ' अथोपायप्रसक्तोपि भुक्त्वा भोगाननामयान् ।
अन्ते विरक्तिमासाद्य विशते वैष्णवं पदम् ॥ '

(அதோபாய ப்ரஸக்தோபி புக்த்வா போகாந் அநாமயாந் ।
அநதே விரகதி மாஸாத்ய விஶதே வைஷ்ணவம் பதம் ॥)

என்றது மோக்ஷருசியும் ஸ்வர்ககாதி ருசியும் நடப்பார்க்கு விளம்பம் வரும் என்கிறது,

2 ' अप्रार्थितः परिहरन् स्वपरैः स्वरक्षां '

(அப்ரார்த்திதः பரிஹரந் ஸ்வபரைः ஸ்வரக்ஷாம் ।)

என்கிற நிக்ஷேப ரக்ஷையில் ஶ்லோகத்தையும் இங்கே அநுஸந்திப்பது. 18

(19) ' இப்படி நிஷித்த போகப்ராவண்யம் கைங்கர்யாம்ருதரஸத்துக்கு விருத்தமாகையாலே விஷம் போலே தூர பரிஹரணீயம் ' என்றது

---

ரஹ்மமானது, தூராத்தூரதரே - வெகு தூரத்தில், ஸ்திதம் - இருக்கிறது. 1 லக்ஷ்மீ தந்த்ரம்-17-103 அத-அப்படிக் கில்லாமல், உபாயப்ரஸக்தோபி - காம்ய கர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டிருப்பவனும், அநாமயாந் - ஒரு தொந்தரவும் இல்லாத, போகாந் - போகங்களை, புக்த்வா - அனுபவித்துவிட்டு, அந்தே - கடைசியில், விரக்திம் - வைராக்யத்தை, ஆஸாத்ய - அடைந்து, வைஷ்ணவம்பதம் - மோக்ஷத்தை, விசதே - அடைகிறான்.

2 நிக்ஷேபரக்ஷை, ஸ்வ ப ரை: தன்னாலும் அயலாராலும் ஸ்வரக்ஷாம் - தன்னை ரக்ஷித்துக்கொள்ளுவதை, அப்ராப்தித: - ப்ராப்தி இல்லாமையினாலே, அதாவது கடமை யில்லாமையினாலே, பரிஹரந் - பரிஹரித்தவனையும், (பகவானுடைய ப்ரயோஜனத்திற்காகவே எல்லா வஸ்துக்களும் ஏற்பட்டிருக்கின்றன என்கிற ஜ்ஞானத்தினால் தன்னுடைய ப்ரயோஜநத்திற்காகவாவது மற்றவர்களுடைய ப்ரயோஜநத்திற்காகவாவது ஏற்பட்டது என்கிற புத்தியைப் பரிஹரித்தவனாய், (பகவானுடைய ப்ரீதியைத் தவிரத் தனக்கு வேறு ஒரு ஸுகம் இல்லாமையினால் ஒரு விதத் தோஷமும் இல்லாத ப்ரபந்நன் தன்னுடைய

ஸத்த்வ நிஷ்டனுய் ஸ்வாமிக்கு அநபிமதத்தில் விமுகனுக ப்ராப்தனுயிருக்க ஸர்வருக்கும் ஸ்வப்நாத்யவஸ்த்தைகளிலே நிஷித்த ப்ரவ்ருத்திகள் வருமா போலவும், அவஹிதரான ருஷிகளும்கூட ஓர் அளவுகளிலே தேவாதிகளினுலே மோஹிதராய் அகப்படுமாபோலவும் முமுக்ஷுவுக்கு நிஷித்தபோக ப்ராவண்யம் வருமாகில்

1 'अपाया विरतः शश्वत् मां चैव शरणं गतः।
तनूकृत्याखिलं पापं मां प्राप्नोति नरः शनैः॥'

(அபாயா விரத: ஶஶ்வத் மாம் சைவ ஶரணம் கத: |
தநூக்ருத்யாகிலம் பாபம் மாம் ப்ராப்நோதி நர: ஶனை: ||)

இத்யாதிகளிற்படியே இங்கு ப்ராயஶ்சித்தம் தண்ட விஶேஷங்கள் வருமதுக்குமேலே அஸத்கல்பனுன தனக்கு உஜ்ஜீவநமுமாய், போகமுமாகையாலே அம்ருத கல்பமான கைங்கர்யாநுபவத்திற்கு அநதிகாராதிகளைப் பண்ணுகையாலே,

2 'विषस्य विषयाणां च दूरमत्यन्तमन्तरम्।
उपभुक्तं विषं हन्ति विषयाः स्मरणादपि॥'

(விஷஸ்ய விஷயாணாம் ச தூரம் அத்யந்தமந்தரம் |
உபபுக்தம் விஷம் ஹந்தி விஷயா: ஸ்மரணுதபி || )

இத்யாதிகளை அநுஸந்தித்து ஸந்நிதி பரித்யாகம் பண்ணவொட்டாத பாபத்தில் அகப்படாதபடி நிபுணநிரூபணம் பண்ணி ஸுகங்கள் எல்லாவற்றையும் ஸ்வாமியான பகவானுடைய அனுபவத்திற்கு உள்ளடங்கியனவாகவே அனுபவிக்கிருன் என்று மேல்)

1. லக்ஷ்மீதந்த்ரம்---17-102. சச்வத் - அடிக்கடி, அபாயா விரத: - நிஷித்த கார்யங்களில் இருந்து ஓய்வை அடையாதவனுயும், மாம் சைவ - என்னையே, சரணம்கத: - சரணமாக அடைந்தவனுயும் இருக்கிற, நர: - மனிதன், அகிலம் - எல்லா, பாபம் - பாபத்தையும், தநூக்ருத்ய - கழித்து விட்டு, சனை: - மெள்ள (தாமதமாக) மாம் - என்னை, ப்ராப்நோதி - அடைகிருன்.

2 --விஷஸ்ய - விஷயத்திற்கும், விஷயாணும் ச - சப்தம் முதலிய விஷயங்களுக்கும், அத்யந்தம் தூரம் – அதிகத் தூரமான, அந்தரம்- வித்யாசம் இருக்கிறது, விஷம் - விஷமானது, உபபுக்தம் - சாப்பிடப் பட்டதாய்க் கொண்டு, ஹந்தி - கொல்லுகிறது, விஷயா: - விஷயங்கள், ஸ்மரணுதபி - நினைப்பது மாத்திரத்தினுலும், கொல்லுகின்றவை

ஸர்ப்பாதிகள் இல்லாத தேஶங்களிலே வர்த்திக்குமா போலே நிஷித்தபோக ஸம்பாவனை இல்லாத தேஶங்களிலே வர்த்திக்கவும்,

1 ' पापं प्रज्ञां नाशयति क्रियमाणं पुनः पुनः ।
नष्टप्रज्ञः पापमेव पुनरारभते नरः ॥

(பாபம் ப்ரஜ்ஞாம் நாஶயதி க்ரியமாணம் புந: புந: |
நஷ்ட ப்ரஜ்ஞ: பாபமேவ புநராரபதே நர: ||)

இத்யாதிகளிற் சொன்ன பாபாரம்பக பாபத்துக்கும் ப்ராயஶ்சித்தமாக ஏற்கவே ப்ரபத்திபண்ணவும் ப்ராப்தம் என்றபடி இப்படி வர்த்திக்குமவன்

2 ' अहेरिव गणात् भीतः सन्मानात् मरणादिव ।
कुणपादिव यः स्त्रीभ्यः तं देवा ब्राह्मणं विदुः ॥ '

(அஹேரிவ கணாத்பீத: ஸந்மாநாத் மரணாதிவ |
குணபாதிவ ய: ஸ்த்ரீப்ய: தம் தேவா ப்ராஹ்மணம் விது: || )'.

இத்யாதிகளிற்படியே தேவர்களுக்கும் பஹுமாந விஷயமாம்.

3 ' पररन्ध्रेषु जात्यन्धाः परदारेष्वपुंसकाः ।
परिवादेषु ये मूकाः तेऽतीव दयिता मम ॥ '

---

1 பார - உத்யோக---35-73. பாபம் - பாபமானது, புந: புந:- அடிக்கடி, க்ரியமாணம் -செய்யப்பட்டதாய்க் கொண்டு, ப்ரஜ்ஞாம் - புத்தியை, நாசயதி-நாசம் செய்கிறது, நஷ்டப்ரஜ்ஞ:-இழந்த புத்தியையுடைய, நர: - மனிதன், புந: - மறுபடியும், பாபமேவ - பாபத்தையே, ஆரபதே - செய்ய ஆரம்பிக்கிருன்.

2 பாரதம்-சாந்தி - 251-13 கணாத் - கும்பலிலிருந்து, அஹேரிவ - பாம்பினிடத்திலிருந்து போலவும், ஸந்மாநாத் - பஹுமாநத்தில் இருந்து, மரணாதிவ - மரணத்தினிடத்திலிருந்து போலவும். ஸ்த்ரீப்ய:- ஸ்த்ரீகளிடமிருந்து, குணபாதிவ – பிணத்தின் இடத்தில் இருந்து போலவும், ய: - எவன், பீத: - பயப்படுகிருனே, தம் - அவனை, தேவா:- தேவதைகள், ப்ராஹ்மணம் - ப்ராஹ்மணனாக, விது: - அறிகிருர்கள்.

3 விஷ்ணு தர்மம் - 7௧ - 22. யே - எவர்கள், பரரந்த்ரேஷு - அயலாருடைய தோஷங்களில், ஜாத்யந்தா: - பிறவிக் குருடர்களோ, பரதாரேஷு - பிறருடைய பார்யைகள் விஷயத்தில், அபும்ஸகா: - நபும்ஸகர்களோ, பரிவாதேஷு - மற்றார்களை நிந்திக்கும் விஷயத்

(பரரந்த்ரேஷு ஜாத்யந்தா: பரதாரேஷ்வபும்ஸகா: |
பரிவாதேஷு யே மூகா: தேதீவ தயிதா மம ||

1 'तन्मयत्वेन गोविन्दे ये नराः न्यस्त चेतसः।
विषयत्यागिनस्तेषां विज्ञेयं च तदन्तिके ॥'

( தந்மயத்வேந கோவிந்தே யே நரா: ந்யஸ்தசேதஸ: |
விஷயத்யாகிநஸ்தேஷாம் விஜ்ஞேயம் ச ததந்திகே ||)

2 'क्षणेपि ते यत् विरहोऽतिदुस्सहः'

(க்ஷணேபி தே யத்விரஹோऽதிதுஸ்ஸஹ: |)
என்றபடி ஸர்வேஶ்வரனுக்கு நிரதிஶய ப்ரீதிஹேதுவாம், 19

(20)'கைங்கர்யமாவது ஸ்வாமி உகந்த ஏவல்தொழில் செய்கை யாகையாலே இது யதாஶாஸ்த்ரம் பண்ணினல் உகப்பாம்' என்றது

நித்ய(ரும்)முக்தரும் பகவத் ப்ரீதிஹேதுக்களை நிரபேக்ஷ ஸர்வ விஷயஜ்ஞாநத்தாலே ஸாக்ஷாத்கரித்துக் கைங்கர்யம்பண்ணுமா போலேயன்றிக்கே பத்த தசையில் கரணஸாபேக்ஷதை உண் டாகையாலும், ப்ரத்யக்ஷாதிகளுக்கு நிலமல்லாத விஷயத்தில்

3 'पितृ देव मनुष्याणां वेदः चक्षुस्सनातनः'

---

தில், மூகா: - ஊமைகளோ, தே - அவர்கள், மே – எனக்கு, அதீவ - மிகவும், தயிதா: - ப்ரியமானவர்கள்,

1 விஷ்ணு தர்மம்---99-15. யே - எந்த, நரா: - மனிதர்கள் கோவிந்தே - பகவானிடத்தில், தந்மயத்வேந - தந்மயமாய் இருப்பதி னுலே (அவன் ஒருவனையே த்யானம் செய்து கொண்டிருப்பதினுலே) ந்யஸ்த சேதஸ: - ஸமர்ப்பிக்கப்பட்ட மனதையுடையவர்களாய், விஷ யத்யாகிந: - சப்தாதி விஷயங்களை விட்டவர்களோ, தேஷாம் - அவர் களுக்கு, தத் - அந்தப் பரப்ரஹ்மம், அந்திகே - ஸமீபத்தில் இருப்ப தாக,விஜ்ஞேயம் - அறியத்தக்கது.

2 ஆள--ஸ்தோ-56. தே - உமக்கு, க்ஷணேபி - ஒரு க்ஷணப் பொழுதும், யத்விரஹ: - எவர்களுடைய பிரிவு, அதிதுஸ்ஸஹ: - மிகவும் பொறுக்கமுடியாததோ.

3 பாகவதம் பித்ருதேவ மநுஷ்யாணும்பித்-ருக்கள், தேவதைகள்' மனிதர்கள் இவர்களுக்கு ஸநாதந: – அநாதியான, வேத: – வேதமா னது, சக்ஷு: - கண்.

(பித்ரு தேவமநுஷ்யாணும் வேதஶ்சக்ஷுஃ ஸநாதந: )

1 ' मानं प्रदीपमिव कारुणिको ददाति '

(மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி ;

இத்யாதிகளிற்படியே ஶாஸ்த்ர மொழியக் கண்ணும் கைவிளக்கும் இல்லாமையாலும்,

2 ' यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः ।
न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥ '

(ய: ஶாஸ்த்ரவிதி முத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத: ।
ந ஸ ஸித்திமவாப்நோதி ந ஸுகம் ந பராம் கதிம் ॥)

3 ' अशास्त्रमासुरं कृत्स्नं '

(அஶாஸ்த்ரமாஸுரம் க்ருத்ஸ்நம் ।

என்றருளிச் செய்தது இங்குத்தை ஸ்வயம் ப்ரயோஜந கைங்கர்யத்திலும் ஸமாந ந்யாயமாகையாலும்,

4 ' அறிவிலேனுக்கு அருளாய் '

5 ' அறியாத பிள்ளைகளோம் '

என்று நிற்க ப்ராப்தமான அவஸ்த்தையிலே ஸ்வாபிமதமாத்ரத்தாலே ஒன்றைக் கைங்கர்யம் என்று செய்தால் இது ஸ்வாமிக்கு அபிமதமாகையிலே நியமம் இல்லாமையாலும்,

6 ' लोके प्रियतमानि आत्मनश्च इष्टानि शास्त्राविरुद्धानि )

---

1 ப்ரதீபமிவ - விளக்கைப்போல, மாநம் - சாஸ்திரத்தை, காருணிக: - மிகுந்ததயை யுடைய பகவான், ததாதி - கொடுக்கிறார்.

2 கீதை 16-23 ய: - எவன், சாஸ்த்ரவிதிம் - சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கும் விதியை, உத்ஸ்ருஜ்ய - விட்டுவிட்டு, காமகாரத: - தன் இஷ்டப்படி, வர்த்ததே - இருக்கிறானோ, ஸ: - அவன், ஸித்திம் - ஸித்தியை, நஅவாப்நோதி - அடைவதில்லை, ஸுகம் - ஸுகத்தையும், ந - அடைவதில்லை, பராம்கதிம் - மோக்ஷத்தையும்- ந - அடைவதில்லை.

3 கீதார்த்த ஸங்க்ரஹம் ---21 அசாஸ்த்ரம் - சாஸ்த்ரத்தில் விதிக்கப்படாதது, க்ருத்ஸ்நம் - எல்லாம, ஆஸுரம் - அஸுரஸ்வபாவமுடையவர்களுக்குப் பொருத்தமானது.

4 திருவாய்---6-9-8. 5 திருப்பாவை--28.

6 நித்யம், லோகே - லோகத்தில், ப்ரியதமாநி - மிகவும் ப்ரியங்களாயும், ஆத்மந: - தனக்கும், இஷ்டாநி - இஷ்டங்களாயும்

(லோகே ப்ரியதமாநி ஆத்மநஶ்ச இஷ்டாநி ஶாஸ்த்ர அவிருத்தாநி )

என்று நித்யத்திலே ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்கையாலும்,

1 ' स्वयं तु रुचिरे देशे क्रियतामिति मां वद '

(ஸ்வயம் து ருசிரே தேஶே க்ரியதாம் இதி மாம் வத)

என்கிற கட்டளையிலே

' किं करोमि ' (கிம்கரோமி)

என்று தாஸன் நிற்க.

(' இதம் குரு ' என்று ஸ்வாமி சொல்லச் செய்யுமது கைங்கர்யமாக வேண்டுகையாலும், செய்த வேள்வியனான ப்ரபந்நனுக்கும் யாவச் சரீரபாதம் யதாதிகாரம் யதாஶாஸ்த்ரம் நடந்தால், இதுவும்

2 ' प्रहर्षयिष्यामि (ப்ரஹர்ஷயிஷ்யாமி)

என்கிற ப்ரதாந பல பர்யந்தமாம் என்றபடி. 20

(21) 'பகவத் கைங்கர்யமும் பாகவத கைங்கர்யமும் சேர அநுஷ்ட்டிக்க அரிதானபோது பரமபுருஷார்த்த காஷ்ட்டையான பாகவத கைங்கர்யமே உபாதேயதமம்' என்றது

ப்ரணவத்தில் ஶிக்ஷித ஸ்வரூபஜ்ஞகையாலே சதுர்த்தியில் அபிப்ரேதமான பகவத் கைங்கர்யம் ஸ்வரூப ப்ராப்தமாய் நின்றது, நமஸ்ஸிலே ஸுஶிக்ஷித ஸ்வரூபஜ்ஞகையாலே பாகவத கைங்கர்யமும் இவனுக்கு ப்ராப்தமாயிருந்தது, இப்படியானால் இரண்டும் சேர அநுஷ்ட்டிக்க வரும்போது சேர அநுஷ்ட்டிக்கவும், இரண்டத்து ஒன்றை விடவேண்டும் படியான ஆபத் தஶையிலே,

3 ' तस्मात् विष्णुप्रसादाय वैष्णवान् परितोषयेत् '
प्रसादसुमुखो विष्णुः तेनैव स्यात् न संशयः ।। '

---

சாஸ்த்ர அவிருத்தாநி - சாஸ்த்ரத்திற்கு விரோத மில்லாததாகவும் இருக்கும் வஸ்துக்களைக் கொண்டு பகவானுக்கு ஆராதனம் செய்யவேண்டும்.

1 ராமா - ஆரண், — ஸ்வயம்து - தர்மே. ருசிரே - அழகான, தேசே - இடத்தில், க்ரியதாம் - செய், இதி - என்று, மாம் - என்னை, வத - சொல்லும,

2 —ம் பக்கம் பார்க்க.

3 இதிஹாஸ ஸமுச்சயம —27 – 27. தஸ்மாத் - ஆகையினால் விஷ்ணுப்ரஸாதாய - பகவானுடைய அனுக்ரஹம் உண்டாவதற்காக,

( தஸ்மாத் விஷ்ணுப்ரஸாதாய வைஷ்ணவாந் பரிதோஷயேத் ।
ப்ரஸாதஸுமுகோ விஷ்ணு: தேநைவ ஸ்யாந் ந ஸம்ஶய: ॥)

1 ' मम मद्भक्तभक्तेषु प्रीतिरभ्यधिका भवेत् ।
तस्मात् मद्भक्तभक्ताश्च पूजनीया विशेषतः ॥'

( மம மத்பக்தபக்தேஷு ப்ரீதிரப்யதிகா பவேத் ।
தஸ்மாத் மத்பக்தபக்தாஶ்ச பூஜநீயா விஶேஷத: ॥)

2 ' आराधनानां सर्वेषां विष्णोराराधनं परम् ।
तस्मात् परतरं प्रोक्तं तदीयाराधनं परम् ॥ '

(ஆராதநாநாம் ஸர்வேஷாம் விஷ்ணோராராதநம் பரம் ।
தஸ்மாத் பரதரம் ப்ரோக்தம் ததீயாராதநம் பரம் ॥)

3 ' अनादृतसुतं गेही पुरुषं नाभिनन्दति ।
तथाऽनर्चित सद्भक्तं भगवान् नाभिनन्दति ॥ '

(அநாத்ருதஸுதம் கேஹீ புருஷம் நாபிநந்ததி ।
ததாநர்ச்சித ஸத்பக்தம் பகவாந் நாபிநந்ததி ॥)

---

வைஷ்ணவாந் - வைஷ்ணவர்களை, பரிதோஷயேத் - ஸந்தோஷப் படுத்த வேண்டும், தேநைவ - அதினாலேயே, ப்ரஸாதஸுமுக: - அநுக்ரஹத்தினால் ஸுமுகராய், விஷ்ணு: - பகவான், ஸ்யாத்-ஆவார், ந ஸம்சய: - ஸந்தேஹமில்லை.

1 பார-ஆச்வ - 116 - 23. மம - எனக்கு, மத்பக்த பக்தேஷு - என்னுடைய பக்தர்களிடத்தில் ப்ரீதி செய்பவர்களிடம், ப்ரீதி: - ப்ரீதி யானது, அப்யதிகா - மிகஅதிகமாக, பவேத் – உண்டாகும், தஸ்மாத் - ஆகையினால், மத்பக்தபக்தா: ச - என்னுடைய பக்தர்களின் பக்தர் களும், விசேஷத: - விசேஷமாக, பூஜநீயா: - பூஜிக்கத்தக்கவர்கள்.

2 பாத்மோ - 29 - 81 - ஸர்வேஷாம் - எல்லா, ஆராதநாநாம் - ஆராதநங்களுக்கும், விஷ்ணோ: - விஷ்ணுவினுடைய, ஆராதநம், பரம் - ச்ரேஷ்டம், தஸ்மாத் - அந்த விஷ்ணுவினுடைய ஆராதநத் தைக் காட்டிலும், பரம் - உயர்ந்ததான, ததீயாராதநம் - பாகவதர் களுடைய ஆராதநம், பரதரம் - மிகவும் சிறந்ததாக, ப்ரோக்தம் - சொல்லப்பட்டது.

3 சாண்டி- ஸ்ம்ருதி - 4- 86. கேஹீ - க்ருஹஸ்தன், அநாத் ருதஸுதம் - தன்னுடைய பிள்ளையை அநாதரவு செய்த, புருஷம் - புரு ஷனைப்பற்றி, நாபிநந்ததி -(எப்படி) ஸந்தோஷிக்கிறதில்லையோ, ததா - அப்படியே, அநர்ச்சிதஸத்பக்தம் - தன்னுடைய பக்தனை ஆராதநம் செய்யாத புருஷனைப்பற்றி, பகவாந் - பகவான், நாபிநந்ததி - ஸந்தோ ஷிக்கிறதில்லை.

1. स्वाराधनं विहायापि स्वभक्तानर्चयन्ति ये ।
तेभ्यः प्रसन्नो भगवान् सिद्धिमिष्टां प्रयच्छति ॥'

(ஸ்வாராதநம் விஹாயாபி ஸ்வபக்தாநர்ச்சயந்தி யே ।
தேப்ய: ப்ரஸந்நோ பகவாந் ஸித்திமிஷ்டாம் ப்ரயச்சதி ॥ )

இத்யாதி ப்ரமாண விசேஷங்களாலும்,

3 'ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச்
சாத்தியிருப்பார் தவம்'

என்கிற ந்யாயம் ஸ்வயம் ப்ரயோஜந கைங்கர்யத்திலும் ஸமாந மாகையாலும், பாகவத கைங்கர்யம் தன்னிலே பகவத் கைங்கர்யத்தைக் கண்டு க்ருதார்த்தனாய் இருக்க ப்ராப்தம் என்றபடி.21

(22) 'இவை இரண்டிலும் ப்ரதாநம் ஆசார்யகைங்கர்யம்' என்றது

பகவான் பக்கலிலேபோல ஆசார்யன் பக்கலிலும் அநுவர்த்திப்பான் என்று அதிதேசித்தவளவன்றிக்கே

3 गुरोः गुरुतरं नास्ति गुरोरन्यं न भावयेत् ।
गुरोर्वार्तां कथां चैव गुरोर्नाम सदा जपेत् ॥

(குரோர் குருதரம் நாஸ்தி குரோரந்யம் ந பாவயேத் ।
குரோர் வார்த்தாம் கதாம் சைவ குரோர் நாம ஸதா ஜபேத் ॥

गुरुरेव परं ब्रह्म गुरुरेव परा गतिः ।
गुरुरेव परा विद्या गुरुरेव परं धनम् ॥
गुरुरेव परः कामः गुरुरेव परायणम् ।

---

1 ஸ்வாராதநம் - தன்(பகவா)னுடைய ஆராதநத்தை, விஹாயாபி - விட்டுவிட்டாவது, யே - எவர்கள், ஸ்வபக்தாந் - தன்னுடைய பக்தர்களை, அர்ச்சயந்தி - பூஜிக்கிறார்களோ, தேப்ய :- அவர்கள் விஷயத்தில், ப்ரஸந்ந :- அநுக்ரஹத்தையுடையவனாகிய, பகவாந், இஷ்டாம் - அவர்களுக்கு இஷ்டமான, ஸித்திம் - ஸித்தியை, ப்ரயச்சதி- கொடுக்கிறார்.

2 நான்.திருவந்தாதி-19

3 குரோ: - ஆசார்யனைக் காட்டிலும், குருதரம்-பெரிய(உயர்ந்த) வஸ்து, நாஸ்தி - இல்லை. குரோ :- ஆசார்யனைக் காட்டிலும், அந்யம் - வேறு ஒருவனை, நபாவயேத் - நினைக்கக் கூடாது, குரோ :- ஆசார்ய

(குருரேவ பரம் ப்ரஹ்ம குருரேவ பராகதி: ।
குருரேவ பராவித்யா குருரேவ பரம் தநம் ॥ )
(குருரேவ பர:காம: குருரேவ பராயணம் ।
இத்யாதிகளிலே ஆசார்ய கைங்கர்ய ப்ராதாந்யம் ப்ரமிதமாகை யாலும், பகவத் பாகவத கைங்கர்யங்களும் ஆசார்யாநுஜ்ஞை யால் நடக்கவேண்டுகையாலே ஆசார்யகைங்கர்யத்தை நிரூபித்துப் பார்த்தால் இது பகவதாஜ்ஞா ஸித்தமாகையாலே பகவத் கைங்கர்யமும் ஆசார்யனுடைய பாகவதத்வ ஸாமாந்யத்தாலே இதுதானே பாகவத கைங்கர்யமுமாய் நிற்கையாலே

1 ' चक्षुर्गम्यं गुरुं त्यक्त्वा शास्त्रगम्यं तु यः स्मरेत् ।
हस्तस्थमुदकं त्यक्त्वा घनस्थमभिवांछति ॥ '

(சக்ஷுர்கம்யம் குரும் த்யக்த்வா ஶாஸ்த்ரகம்யம் து ய: ஸ்மரேத்।
ஹஸ்தஸ்த்தமுதகம் த்யக்த்வா கநஸ்தமபிவாஞ்ச்சதி ॥ )

2 ' सुलभं तु गुरुं त्यक्त्वा दुर्लभं य उपासते ।
लब्धं त्यक्त्वा धनं मूढः गुप्तमन्वेषते क्षितौ ॥ '

---

னுடைய, வார்த்தாம் - உபதேச ரூபமான வார்த்தைகளையும், கதாம் சைவ - (அவருடைய) சரித்திரத்தையும், குரோ:, நாம - திருநாமத்தையும், ஸதா-எப்பொழுதும், ஜபேத் - ஜபிக்க வேண்டும், குருரேவ- ஆசார்யனே, பரம்ப்ரஹ்ம - பரப்ரஹ்மம், குருரேவ, பரா கதி: - அடையவேண்டிய உயர்ந்த ப்ரயோஜனம், குருரேவ, பரா வித்யா - உயர்ந்த (மோக்ஷோபயோகமான) வித்யை, குருரேவ, பரம் - உயர்ந்த, தநம் - பொருள், குருரேவ, பர :- உயர்ந்த, காம: - ஆசைப்படவேண்டிய புருஷார்த்தம், குருரேவ, பராயணம் - ஆச்ரயிக்கப்பட வேண்டிய வஸ்து.

1 சக்ஷுர்கம்யம் - கண்ணுக்கு விஷயமாயுள்ள, குரும்- ஆசார்யனை, த்யக்த்வா - விட்டுவிட்டு, சாஸ்த்ரகம்யம் - சாஸ்த்ரத்திலால் அறியப் படுகிற பரமாத்மாவை, ய: - எவன், ஸ்மரேத் - நினைப்பானோ, (அவன்) ஹஸ்தஸ்த்தம் - கையில் இருக்கிற, உதகம்- ஜலத்தை, த்யக்த்வா - விட்டுவிட்டு, கநஸ்த்தம் - மேகத்தில் இருக்கும் ஜலத்தை, அபிவாஞ்சதி - ஆசைப்படுகிறான்.

2 ஸுலபம் - ஸுலபனாகிய, குரும் - ஆசார்யனை, த்யக்த்வா - விட்டுவிட்டு, ய: - எவன், துர்லபம் - துர்லபனான பகவானை, உபாஸதே - உபாஸிக்கிறானோ, மூட: - அந்த மூடன், லப்தம் - கையில் கிடைத்த, தநம் - பணத்தை த்யக்த்வா - விட்டுவிட்டு, க்ஷிதௌ-

ஸுலபம் து குரும் த்யக்த்வா துர்லபம் ய உபாஸதே |
லப்தம் த்யக்த்வா தநம் மூட: குப்தமந்வேஷதே க்ஷிதௌ ||)
இத்யாதிகளிற்படியே ஆசார்ய கைங்கர்யத்தை விட்டு பகவத் கைங்கர்யாதிகளிலே இழியக் கடவனல்லன்.

கண்ணி நுண் சிறுத்தாம்பின்படியே ஆசார்ய கைங்கர்ய ப்ரதானனாய் நின்று

1 ' திரிதந்தாகிலும் தேவபிரானுடைக்
கரிய கோலத் திருவுருக் காண்பன் நான்
பெரிய வண் குருகூர் நகர் நம்பிக்கு ஆள்
உரியனாய் அடியேன் பெற்ற நன்மையே '

இத்யாதிகளிற்படியே ஆசார்யாபிமதமென்று யதாகாலம் பகவத்பாகவதகைங்கர்யங்களை அநுபவிக்க ப்ராப்தம் என்றபடி. 22

(23) இக்கைங்கர்யபரனுக்குப் பரமைகாந்திகள் உகந்த இடமே உசித ஸ்த்தானம் ' என்றது

தர்ம ஶீலரா யிருப்பார்க்கு வாஸஸ்த்தானமாக ஶாஸ்த்ரங்கள் வகுத்த புண்ய தேஶங்கள் கலிகாலாதி தோஷங்களாலே ம்லேச்சாதி பரிக்ருஹீதங்களாய்

2 ' नाधर्मजन भूयिष्ठं '(நாதர்மஜநபூயிஷ்ட்டம்)

இத்யாதிகளிற்படியே பரித்யாஜ்யங்களாகையாலும், புண்ய தேஶங்களுக்குச் சொல்லும் சில லக்ஷணங்களுக்கு அவ்யாப்தி அதிவ்யாப்திகள் உண்டாகையாலே இவை ப்ராயிகங்களாகையாலும்,

3 ' आत्मनस्तुष्टिरेव च ' ( ஆத்மநஸ்துஷ்டிரேவ ச )

இத்யாதிகளைப் பார்த்துத் தன் அபிமத மாத்ரத்தாலே ஒரு தேஶத்தை அறுதியிட்டுக் கொள்ளப் பார்த்தால் அது தப்பவும் கூடுமாகையாலும்,

---

பூமியில், குப்தம் - மறைத்து வைக்கப்பட்ட தனத்தை, அந்வேஷதே - தேடுகிறான்.

1 கண்ணி நுண் சிறுத்தாம்பு—8.

2 அதர்மங்களைச்செய்கிற ஜனங்களால் நிறைந்த இடத்தில் வாஸம் செய்யக்கூடாது.

3 ஆத்மந: - தனக்கு, துஷ்டி: ஏவச - ஸந்தோஷமுமான,